
ESTABLISHED
1968
Major Credit Cards accepted







உங்களின்
ஃபர்னிச்சர் தேவைகள்
அனைத்திற்கும்
கைராசியான நிறுவனம்
Sathya
ஃபர்னிச்சர் உலகம்
LIFETIME INVESTMENT
தரமான இந்திய
ஃபர்னிச்சர்களையே வாங்குவோம்!
இந்தியாவை வளமாக்குவோம்!
LIVING ROOM FURNITURE
BEDROOM FURNITURE
DINING SETS
STEEL ALMIRAHS
COMPUTER FURNITURE
OFFICE FURNITURE
மாபெரும் ஃபர்னிச்சர் ஷோரூம்கள்
மைலாப்பூர் : சத்யா கார்ப்பரேஷன் (20,000 சதுர அடி) 69 & 70, இராயப்பேட்டை ஹைரோடு
(வள்ளுவர் சிலை அருகில்) சென்னை - 4. ∴போன் – 498 2930 / 31, 498 3929
அண்ணாநகர் மேற்கு - DABC Bldg., 6, M T H Rd, (TVS - பாடி எதிரில்),
சென்னை - 50. ∴போன் - 6544929/ 6545029
266, மேட்டுப்பாளையம் ரோடு, (சாய்பாபா கோயில் பஸ் ஸ்டாப்), கோயம்புத்தூர் - 43 ∴போன் : 452929, 452930, 98422 42929
23, நந்தி கோயில் தெரு, தெப்பக்குளம், திருச்சி - 2, ∴போன் - 704414

# பாபா பாலிடிக்ஸ்!



கிட்டத்தட்ட பத்து வருடங்களுக்கு முன்னால் 'பாண்டியன்' புடத்திலேயே அரசியல் பொடியைத் தூவத் துவங்கிவிட்டார் ரஜினி.

"தமிழகத்தில் வெடிகுண்டு கலாசாரம் தலை தூக்கி விட்டது"– இந்தப் பேச்சில் துவங்கி, "மீண்டும் ஜெ. ஆட்சிக்கு வந்தால் தமிழ்நாட்டைக் கடவுளால் கூட காப்பாற்ற முடியாது" என்று முத்தாய்ப்பாகச் சொன்னது வரை 1996 சட்டமன்ற தேர்தலில் ரஜினியின் முத்திரை பளிச்சென்று தெரிந்தது. தி.மு.க. – த.மா.கா. கூட்டணி பிரும்மாண்டமான வெற்றி பெற்றது. ஜெயலலிதாவே கூட அவரது தொகுதியில் ஜெயிக்க முடியவில்லை. அதன்பின் தி.மு.க. ஆட்சியின்போது வந்த 'படையப்பா'விலும் மிச்ச சொச்சமாக நீலாம்பரியை வார்த்தை சாட்டையால் சொடுக்கிய வசனங்கள், அரசியலோடு முடிச்சு போட்டுப் பார்க்க வைத்தது.

இப்போது 'பாபா' வந்திருக்கிறார். கந்தக வசனங்களுக்கு 'பாபா'விலும் பஞ்சமில்லை.

எம்.ஜி.ஆர். போல ரஜினி தமது இமேஜை வளர்த்துக் கொண்டு வரவில்லை என்பதே ரஜினியின் பெரிய பலவீனம். ரஜினி அரசியலுக்கு வராததற்கு மிக முக்கிய காரணம் அவரது குடும்பத்தினர் அதை எதிர்ப்பது தான் என்ற கருத்தும் இருக்கிறது. சேர்த்த பணம் செலவாகும் என்பதால் ரஜினி அரசியலுக்குள் நுழைவதை அவர்கள் எதிர்க்கிறார்களாம். ஆனால் ரஜினியை நன்கு அறிந்தவர்கள் இந்தக் கருத்தை ஒதுக்குகிறார்கள். "ரஜினி ஒரு காரியத்தை நிறைவேற்ற வேண்டும் என்று யத்தனித்தால் யாரும் அவரைத் தடுக்க முடியாது" என்கிறார்கள்.

ரஜினி பெரிதும் மதித்து வரும் சுவாமி சச்சிதானந்தா, 'ரஜினி ஒரு நாள் அரசியலுக்கு வருவார்' என்கிறார். "தீய பழக்கங்களை வளர்க்கக் கூடிய காட்சிகளைக் கொண்ட

'ஆ'வென ஆலாய்ப் பறந்த ரசிகர்களுக்கும் மீடியாவுக்கும் டன் கணக்கில் அல்வா கொடுத்திருக்கிறார் பாபா. ஆளுக்கொரு யூகத்தில் கதையைக் கிளப்பிய கோடம்பாக்கப் பட்சிகளுக்கு முதல் வணக்கம்! (அவர்கள் சொன்ன கதையே ரசிக்கும்படியாக இருந்தது!)

கதை: வயதான தம்பதிக்குக் குழந்தை பிறக்கிறது (பாபா). இந்தக் குழந்தை பாபாஜியின் வடிவம் என்றும் வளர்ந்து விவரம் தெரிந்த பிறகு பாபாஜியிடமே சென்றுவிடும் என்று சொல்கிறார்கள் சாமியார்கள்.

சாமி, மந்திரம், தந்திரம் எதையும் ஏற்காமல் தானுண்டு தண்ணியுண்டு, சிகரெட் உண்டு, அநீதியைத் தட்டிக் கேட்பதாகச் சண்டையுண்டு என்று சுதந்திரமாகத் திரியும் பாபா, சாமியார் ஒருவரால் (சாயாஜி ஷிண்டே) இமயமலைக்கு அழைத்துச் செல்லப்படுகிறார். அங்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக வாழும்(?!) பாபாஜியைச் சந்தித்து, தமது சந்தேகங்களுக்கு விளக்கம் பெறுகிறார் பாபா. அவர் ஏழுமுறை பயன்படுத்தக்கூடிய மந்திரம் ஒன்றைக் கொடுக்கிறார்.

இந்த அமானுஷ்ய மந்திர சக்தியைத் தம்மாத்துண்டு விஷயங்களுக்காகச் சோதித்துப் பார்த்து ஆறுமுறை வீணடிக்கிறார் பாபா. ஏழாவது முறையாக மந்திரத்தைப் பயன்படுத்தி முப்பது வருஷத்துக்குத் தாமே முதலமைச்சராக இருக்குமாறு செய்ய பாபாவை வற்புறுத்துகிறார் முதலமைச்சர். பாபா மறுக்க, அவரைக் கொல்வதற்கு மந்திரவாதி (அம்ரிஷ்பூரி) வரவழைக்கப்படுகிறார். இதற்கிடையில் பாபா, தாம் விரும்பும் நேர்மையான எம்.எல்.ஏ. ஒருவரை முதல்வராக்குகிறார். பாபாவைக் கொல்ல வரும் அரசியல்வாதிகளின் தடாலடித் தாக்குதலில் பலியாகிறார் பாபாவின் அம்மா. அவர் சாகும் தருவாயில், 'நீ இமய மலைக்கே போய்விடு' என்று சொல்ல, செல்கிறார் பாபா. அங்கே பாபாஜியைச் சந்திக்கிறார். ''நீயே யோசித்து முடிவெடு'' என்கிறார் பாபாஜி. பாபா மக்களைத் தேடி சாமியார்களுடன் நாட்டுக்கு வர, அந்நேரம் பார்த்து முதல்வரைக் கொல்கிறார் மாஜி முதல்வர். மலைக்குத் திரும்பாமல் பாபா, மக்கள் பணிக்குத் திரும்புகிறார் – கையில் கத்தியுடன்!

முதல் பாதி வரை கொஞ்சம் கலகலப்போடு, நிறைய எதிர்பார்ப்போடும் செல்லும் படம், அடுத்த பாதியில் விட்டலாச்சார்யா படத்துக்கு வந்து விட்டோமோ என்ற உணர்வை ஏற்படுத்துகிறது.

ரஜினியின் நண்பராக வந்து கலகலப்பாக்குவதுடன் படத்தின் முதுகெலும்பாகவும் நிற்கிறார் கலக்கல் மணி. ஸாரி... கவுண்டமணி! 'இப்போ ராமசாமி'யாக அரசியல்வாதி கெட்டப்பில் ஆஷிஷ் வித்யார்த்தி! அந்த துறுதுறுப்பும் படபடப்பும் அட!

முதுகுக்குப் பின்னாலிருந்து கத்தியை உருவி, சர்ரென்று வீசி, ''கத்தியை நீ எடுத்தா சண்டை; நானெடுத்தா சமாதானம். நீயெடுக்கறியா நானெடுக்கட்டுமா...?'' ''பாபா கவுண்டிங் ஸ்டார்ட்;'' ''பாபா யோசிக்காம பேச மாட்டான்; பேசின பிறகு யோசிக்க மாட்டான்!'' ''பாபா லேட்டா வந்தாலும் லேட்டஸ்டா வருவான்'' போன்ற வசனங்களும் சண்டைக் காட்சிகளும் ரஜினி ரசிகர்களைத் துள்ள வைக்கும்.

ஏ.ஆர். ரஹ்மானின் இசையில் இரண்டு பாடல்கள் தேறுகின்றன.

படத்தில் ஏகப்பட்ட லாஜிக்



*ரஜினி படங்களை வன்னிய இளைஞர்கள் பார்க்கக் கூடாது'' என்று டாக்டர் ராமதாஸ் கூறியதும், தொடர்ந்து ஜெயங்கொண்டம் தியேட்டரைத் தாக்கி, படப்பெட்டியை பா.ம.க. ஆட்கள் கைப்பற்றிச் சென்றதும், ரஜினி அரசியலில் புதுத் திருப்பத்தைக் கொண்டு வந்திருக்கிறது. 'பாபா'வுக்குப் பிறகு படங்களில் நடிக்க மாட்டேன்' என்று ரஜினி சமீபத்தில் ஒரு முறை சொன்னார். தொடர்ந்து படங்களில் நடிக்காத நிலையில், அவரது பலமாக இருக்கும் இளைஞர் பட்டாளத்தை அவரால் தக்க வைத்துக் கொள்ள முடியுமா என்பதும் சந்தேகமே!*

*ரஜினி நேரடி அரசியலில் குதிக்காவிட்டாலும், அவர் கைகாட்டும் நபரைத் தமிழக மக்கள் ஏற்றுக் கொள்வார்களா*

முட்டல்கள். 'ரஜினி படத்தில் லாஜிக் பார்க்கலாமா?' என்ற பொதுவான நியதியின்படி அதை விட்டு விடலாம்.




வழக்கமான காதலியாக வந்து, வழக்கமான எதிர்ப்பு காட்டி, வழக்கமான ஃப்ளாஷ் பேக் சொல்லி, வழக்கமான டூயட் ஆடுவதோடு மனிஷாவின் வேலை ஜூட்! இந்த வழக்கமானவைகளுக்கு பாலிவுட்டிலிருந்து ஒரு கதாநாயகி வரவேண்டுமா! உடல் இளைத்துப் பாவாடை தாவணியில் வரும் சங்கவி, ரஜினியின் வீட்டிலேயே இருந்து ஒரு தலையாய் அவரைக் காதலிக்கிறார். பாதியில் அவரையும் காணோம். அவர் பற்றிய மற்ற கேள்விகளா...மூச்!

ஒரேயொரு மந்திரத்தைப் பயன்படுத்துவதற்காகவே ஜப்பான் நடிகைக்கு ஒரு வாய்ப்புக் கொடுத்து வீணடித்திருக்கிறார்கள்.

தலைகாட்டி விட்டுச் செல்லும் அரை டஜன் நடிகர்களைப் பார்க்கும்போதெல்லாம் பரிதாபம் ஏற்படுகிறது. அதில் நாஸரும் ஒருவர்.

இப்படிப்பட்ட ஒரு கதைக்கு எழுத்தாளர் எஸ். ராமகிருஷ்ணன், டைரக்டர் ஷங்கர் போன்றவர்களெல்லாம் கதை டிஸ்கஷனில் இருந்தார்கள் என்பதைக் கேள்விப்படுகிற போது ஏழு மருமகப் பெண்கள் கதைதான் ஞாபகம் வருகிறது. ஆளுக்கொரு கை உப்பைப் போட்டார்களாம் சமையலில்!

**அட்வைஸ் 1:** இனி இப்படியொரு படம் எடுக்க நினைத்தால் சக்ஸஸ் ஃபார்முலா அறிந்த டைரக்டர் இராம.நாராயணனிடம் கொடுங்கள். உள்ளூர் அம்மன், கிராபிக்ஸ் கலக்கல் என்று படத்தை இமயமலை உச்சிக்கே கொண்டு சென்றுவிடுவார்.

**அட்வைஸ் 2:** 'ஆன்மிகப் படமா? அரசியல் படமா?' என்பதை முதலில் தீர்மானித்துவிட்டுப் படமெடுப்பது, ரசிகர்களைக் குழப்பத்திலிருந்து விடுபட வைக்கும்.

**அட்வைஸ் 3:** கல்லாப் பெட்டியை நிரப்புவதற்காக ஜப்பான் நடிகை, மாநிலத்துக்கொரு நடிகர் என பாகம் பிரித்துக் கையாண்டிருப்பதில் காட்டியிருக்கும் அக்கறையைக் கதை விஷயத்தில் காட்டியிருந்தால் தப்பித்திருக்கலாம்.

**- ஏக்ஜி**

---

என்ற சந்தேகமும் உண்டு. சிதம்பரம் இன்னமும் காங்கிரஸுடன் இணையாவிட்டாலும், ரஜினிக்கு அவர் மீது ஓர் எதிர்பார்ப்பு இருப்பதாகச் சொல்கிறார்கள். கலைஞர் மீது பெரிய மரியாதை வைத்திருக்கும் ரஜினி, தமது சொல், செயல் எதுவும் அவரைப் பாதிக்காத வண்ணம் பார்த்துக் கொள்கிறார். அதே சமயம் ஜெயலலிதாவும் ரஜினி விஷயத்தில் மிக உஷாராக நடந்து வருகிறார். எந்த விதத்திலும் அவரை 'உரசிப்'பார்க்க விரும்பவில்லை ஜெ. நாளை அரசியல் உலகில் என்ன நடக்குமென்று கணிக்க முடியாது. இப்போதைய நிலையில் குழப்பமே தொடர்கிறது. 'பாபா' படம் ஓட இது போன்ற சூழல் கண்டிப்பாக உதவும் என்று சொல்லத் தேவையில்லை.

'பாபா' படத்தில் 'நான் நானாக இருந்தால் நாட்டுக்கு நல்லதடி, விவகாரம் இல்லையடி' என்று பாடுகிறார் ரஜினி.

என்ன தலையைப் பிய்த்துக் கொள்ளலாமா?

**– ப்ரியன்**

# தாராள ஹெராயின் தடுமாறும் சென்னை!



சென்னை அடையாறில் நகரச் சந்தடிகளை விட்டு விலகி, அமைதியாக இருக்கிறது அந்த மருத்துவமனை. போதை அடிமைகளை மீட்டு, புதுவாழ்வுக்கான திசையைக் காட்டுவதில் இரண்டு தலைமுறையாக முன்னணியில் இருக்கும் மருத்துவமனை. இங்கேதான் இருபத்தெட்டு வயது *ரகுவைச் சந்தித்தோம்.

"நீ ஹீரோவா நடிக்கலாம் மச்சி" என்று சக நண்பர்களால் அடிக்கடி புகழப்பட்ட ரகு, இன்று கண்களுக்குக் கீழே கருமை படர்ந்து, எலும்பும் தோலுமாய் மெலிந்து கிடக்கிறார். இவர் ஒரு ஹெராயின் அடிக்ட். மெட்ரிக் படிக்கும் போது, ஹெராயின் புகைக்கக் கற்றுக் கொண்ட உயர்தட்டு நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர். கைநிறைய பாக்கெட் மணி. தவறான நண்பர்களின் நட்பு. விளைவு, தீவிர ஹெராயின் ஸ்மோக்கராகி இன்று டீ – அடிக்ஷன் சென்டரில் மனநிலை பாதிக்கப்பட்டுக் கிடக்கிறார். அருகில் எந்தக் கெட்டப் பழக்கமும் இல்லாத அவரது தந்தை. ஆனால் ஒரு காலத்தில் இவர் 'பவுடர் பைனான்சியர்'. அதாவது ஹெராயின் கடத்துபவர்களுக்கு லட்சக்கணக்கில் நிதி உதவி அளித்து வந்த பைனான்சியர் என்பது அதிர்ச்சிகரமான உண்மை. இவர் மீதான வழக்கு இன்றும் விசாரணையில் இருக்கிறது.

• தடைசெய்யப்பட்ட போதை ஊசிகள்

அதே மருத்துவமனையின் மற்றொரு அறையில் முப்பது வயது ஸ்ரீபால். இரண்டாண்டுகளுக்கு முன்பு



• பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன

இவர், மூன்றாமாண்டு படித்துக் கொண்டிருந்த மருத்துவக் கல்லூரி மாணவர். புற்றுநோய் மற்றும் விபத்துக்களில் சிக்கி, வலியால் துடிப்பவர்களுக்குக் கொடுக்கப்படும் ஆண்டி டிப்ரசென்ட் ஊசிகளில் விளையாட்டாகத் தொடங்கிய பழக்கம், ஹெராயினை ஊசி மூலம் எடுத்துக் கொள்வதில் கொண்டு வந்து தள்ளி விட்டது. ஸ்ரீயாஸ் கூட்டணியில் ஹெராயின் ஊசிக்கு அடிமையான பன்னிரண்டு பேரில் நான்கு பேர் மட்டுமே டீ-அடிக்ஷன் மூலம் மீட்கப்பட்டிருக்கிறார்கள். ஸ்ரீயாஸ் உட்பட மற்றவர்கள் டீஅடிக்ஷன் சிகிச்சைக்குப் பிறகு, குடும்பத்தினரின் கண்காணிப்புத் தீவிரமாக இல்லாததால் பழைய நிலைக்கே வந்து விட்டார்கள். ஒரு விலைமாது கொலையுண்ட வழக்கில் ஸ்ரீயாஸும் சேர்க்கப்பட்டிருக்கும் நிலையில்... இவரது அம்மா, அப்பா, தங்கைகள் என குடும்பத்தினர் எல்லோருமே மன நிம்மதி பாதிக்கப்பட்டு, மன அழுத்தத்திற்காக இவர்களும் மருந்து சாப்பிட்டு அழுகிறார்கள்... அழுது கொண்டே இருக்கிறார்கள்.



மகாபலிபுரம் அருகேயுள்ள மீனவ கிராமத்தைச் சேர்ந்தவர் சண்முகம். வயது இப்போது நாற்பது. பி.எஸ்ஸி., படித்துக் கொண்டிருந்தபோது, அடாவடியாகத் தெரிந்த இவரின் துணிச்சலையும் துடுக்குத்தனத்தையும் பயன்படுத்திக் கொண்டார் மீனவக் குப்பத்து தாதா ஒருவர். இரண்டு கிலோ ஹெராயினைக் கடத்தி வர சண்முகம் பயன்படுத்தப்பட்டார். ஆனால் வழியிலேயே



• சங்கர் ஜிவால்



• பால் கனகராஜ்



• டாக்டர் லட்சுமி விஜயகுமார்

பிடிபட்ட சண்முகத்துக்கு ஐந்து வருடம் சிறைத் தண்டனையும் ஐம்பதாயிரம் ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. சிறையிலிருந்து திரும்பி வந்த சண்முகம் மீது போலீஸ் அடுத்தடுத்து சிறு சிறு வழக்குகளைத் தொடுக்க, வெறுத்துப் போன சண்முகம், இப்போது முழு நேரப் பவுடர் பிசினஸில், பிஸியாகி விட்டார். ''என்னைப் போலீஸ் திருந்த விடலை. எனக்கும் வேறே பிழைப்பு தெரியலை! இது சும்மா கண் துடைப்புக்கு'' என்கிறார், தமது மீன் பிடி மோட்டார் படகைக் காட்டி.

சென்னை உயர்நீதிமன்ற வளாகத்தில் போதைப் பொருள் வழக்குகளுக்கென்று பிரத்யேகமாகச் செயல்படும் முதன்மை தனிநீதிமன்றத்தில் பிரபல வழக்கறிஞராயிருந்தவர் மதனகோபால். தமது மனைவி மற்றும் மகளுடன், நெரிசலான, பாண்டிபஜார் கடை வீதிக்கு ஷாப்பிங் செய்ய வந்தபோது, குடும்பத்தாரின் கண் எதிரிலேயே சுட்டுக் கொல்லப்பட்டார். இவரது கொலையில் போதைப் பொருள் மாஃபியா கும்பல் சம்பந்தப்பட்டிருப்பது உறுதியாகிவிட்டது என்று பேட்டி தந்திருக்கிறார் சென்னை மாநகர போலீஸ் கமிஷனர். "ஆனால் கொலையின் பின்னணியில் ஒளிந்திருக்கும் 'தலைமை மூளை' யார் என்பதைக் கண்டுபிடிப்பதில் எங்களுக்கே மூச்சுத் திணறல்தான்'' என்கிறார்கள் பெயர் சொல்ல விரும்பாத தமிழக காவல் துறை அதிகாரிகளில் சிலர். இந்தக் கொலை கூட மும்பை, ஜெய்ப்பூர், டெல்லி போல போதை மருந்து உலகில் தினம் தினம் நடக்கும் 'சுபாரி' கில்லிங் ஆக இருக்குமோ என சந்தேகப்படுகிறதாம் போலீஸ் (அதென்ன சுபாரி கில்லிங்? - பார்க்க பெட்டிச் செய்தி).

"கடவுளே என்ன நடக்கிறது சென்னையில்?! மும்பை மாதிரி சென்னையும் ஆகிப் போச்சா...? இப்படிப் புலம்பவே ஆரம்பித்து விட்டார்கள் சென்னைவாசிகள். மும்பையைப் போல ஒரு மெகா போதை மருந்து மாபியா உலகம் சென்னையில் இல்லை என்று பலரும் மறுத்தாலும், பல்வேறு உண்மைகள் நம்மை பயமுறுத்தவே செய்கின்றன.

பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான், பங்களாதேஷ் போன்ற நாடுகளிலிருந்து ராஜஸ்தான் வழியாக சென்னைக்குக் கடத்தி வரப்படும் ஹெராயின், இலங்கைக்குக் கடத்தப்படுகிறது. இலங்கையிலிருந்து தாய்லாந்து, மியான்மர், ஹாங்காங், மலேசியா, நாடுகளுக்குக் கடத்தப்பட்டு அங்கிருந்து லத்தீன் அமெரிக்க நாடுகளுக்குள் சுலபமாக நுழைந்து விடுகிறது.

ராஜஸ்தானில் நுழையும் ஹெராயின் எப்படிக் கடத்தி வரப்படுகிறது? சென்னை அல்லது தூத்துக்குடிக்கு, சரக்கு ஏற்றி வரப்படும் நேஷனல் பர்மிட் லாரிகள்தான் முதல் தேர்வு. இந்த லாரிகளில் சரக்குக்கு நடுவே ஐந்து கிலோ அல்லது பத்து கிலோ பாக்கெட்டுகளாக மறைத்து வைக்கப்படும். பல நேரங்களில், தங்கள் லாரியில் ஹெராயின் இருக்கிறது என்பது ஓட்டுநர் மற்றும் கிளீனருக்கோ கூடத் தெரியாது.

ஜெய்ப்பூர் அல்லது மன்சூரில் ஒரு கிலோ ஹெராயின் குறைந்தபட்சம் அறுபதாயிரம் ரூபாய்க்கு வாங்கப்பட்டு, சென்னை வந்து சேர்ந்து விட்டால் அதன் மதிப்பு ஐந்து மடங்காகி விடுகிறது. அதாவது சென்னையில் ஒரு கிலோ ஹெராயின் விலை மூன்று லட்சம் என்கிறது ஒரு பட்சி. 'இதுவே தூத்துக்குடிக்குச் சென்று விட்டால் பத்து மடங்கு. இலங்கையில் இருபது மடங்கு. அங்கிருந்து கலப்படம் செய்யப்படாமல் கடல் கடந்து விட்டால் ஒரு கிலோ ஹெராயின் உலகச் சந்தையில் ஒரு கோடியாம்!

இலங்கையிலிருந்து உலக நாடுகளுக்குக் கடத்துவது சுலபமாக இருப்பதால் இலங்கைவாசிகள் ஹெராயின் கடத்தலில் அதிகம் ஈடுபாடு காட்டுகிறார்கள். போபால், ஜெய்ப்பூர், இந்தூர், நகரங்களில் நீண்ட காலமாக இலங்கை வம்சாவழியினர் வசித்து வருவதற்கும், ஹெராயின் கடத்தலுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாகச் சொல்கின்றன ஆய்வுகள். தவிர ஹெராயினை, தங்கள் சொந்த உபயோகத்துக்குப் பயன்படுத்துவதிலும் இலங்கைவாசிகள் முன்னணியில் இருக்கவே செய்கிறார்கள். ஹெராயின் கடத்தலில் தமிழகம் பாதுகாப்பான ஒரே தரை வழியாக இன்ற

ளவும் இருந்து வருவதால்தான் சென்னையில் தனது கொடிய கரங்களை அகல விரித்திருக்கிறது போதைப் பொருள் மாஃபியா உலகம்.

இங்கே கடத்தல்காரர்களுக்கு இணையாக இன்ஃபார்மர்களும் அதிகம். காரணம் நார்காட்டிக் கண்ட்ரோல் பீரோ தரும் சன்மானத் தொகை. ஒரு கிலோ ஹெராயின் தமிழகத்தில் பறிமுதல் செய்யப்பட்டால், அதற்குத் தகவல் தந்த இன்ஃபார்மருக்கு இருபதாயிரம் ரூபாய் சன்மானம் தருகிறது என்.சி.பி.

சென்னையைப் பொறுத்தவரை நாற்பதாயிரம் பேர் ஹெராயின் பழக்கத்திற்கு அடிமையாகி இருக்கிறார்கள் என்கிறது யு.என்.டி.சி.பி. என்ற ஆய்வு நிறுவனம். இவர்களில் பதினைந்தாயிரம் பேர் ஊசி மூலம் ஹெராயின் எடுத்துக் கொள்ளும் உயர்தட்டு வகுப்பினர். எஞ்சியவர்கள் ஹெராயின் புகைப்பதற்குப் பழக்கப்பட்டவர்கள். ஊசி மூலம் எடுத்துக் கொள்ளும் பழக்கமுள்ளவர்களில் இருபத்தாறு சதவிகிதம் பேருக்கு எச்ஐவி தொற்றை உறுதி செய்திருக்கிறது சென்னையைச் சேர்ந்த மற்றொரு அரசு சாரா சேவை அமைப்பு.





முன்ஜாக்கிரதை நடவடிக்கை
சிலை திறப்பு விழா
மியூசிய வளாகத்தில்!

— ப்ரணா

ஐம்பது மில்லி கிராம் முதல் ஒரு கிராம் வரை அளவு கொண்ட ஹெராயின் பவுடர்களை கோல்டு மற்றும் சில்வர் சிகரெட் காகிதங்களில் மடித்துத் தரும் சில்லறை விற்பனை தான் சென்னையில் தூள் பறக்கிறது. தவிர சில்லறை விற்பனையில் சுகர், குளுக்கோஸ், பால் பவுடர், போன்ற பொருட்களோடு கலப்படம் செய்து ஹெராயின் விற்கப்படுவதால் லாபம் பல மடங்கு கிடைக்கிறது என்கிறார்கள் சில சில்லறை வியாபாரிகள். வடசென்னையில் வண்ணாரப்பேட்டை, ராயபுரம், காசிமேடு, எர்ணாவூர் போன்ற பகுதிகளிலும், தென் சென்னையில் வேளச்சேரி, பல்லாவரம், மடிப்பாக்கம் போன்ற பகுதிகளிலும் ஒரு கிராம் ஹெராயின் எண்ணூறு ரூபாய்க்குக் கிடைக்கிறது என்கிறார்கள் டீ – அடிக்ஷன் சென்டர்களில் சிகிச்சை எடுத்து வரும் பலரும்.

இலங்கைக்குக் கடத்திச் செல்லும் பாதையில் தமிழகம் முக்கிய தளமாகி விட்ட நிலையில், நார்காட்டிக் கண்ட்ரோல் பீரோவின் தென்னிந்திய தலைமையகம் சென்னையிலேயே செயல்பட்டு வருகிறது. ஆனால் இப்படியொரு பிரிவு இங்கே சுறுசுறுப்பாகச் செயல்படுகிறதா? சொல்கிறார் என்.சி.பியின் தென்மண்டல இயக்குனர் சங்கர் ஜிவால் ஐ.பி.எஸ்:

"கடந்த ஓராண்டில் மட்டும் பன்னிரண்டு வழக்குகளைத் தொடுத்திருக்கிறோம். இதில் பதினொரு வழக்குகளில் தண்டனை வழங்கப்பட்டிருக்கிறது. தமிழகத்தில், சென்னை தவிர கோவை, சேலம், திருநெல்வேலி, தூத்துக்குடி, நாகர்கோவில், கன்னியாகுமரியிலும் அதிக அளவில் ஹெராயின் பறிமுதல் செய்திருக்கிறோம். சென்னையைப் பொறுத்தவரை, மாமூல் பறிக்கும் ரௌடிகள் கட்டப் பஞ்சாயத்து, நில ஆக்கிரமிப்பு, விபசாரம் போன்றவற்றில் ஈடுபடும் சமூக விரோதிகள் போன்றோருக்கும் இலங்கை ஆட்களுக்கும் சமீபகாலமாகத் தொடர்புகள் அதிகரித்து வருவதைக் கேள்விப்படுகிறோம். ஆனால் இவர்கள் பாதுகாப்பாக வியாபாரம் நடத்தி வருகிறார்கள். பிராந்திய அளவிலும், தேசிய அளவிலும் போதை பொருள் கடத்தி வரப்படும் வழிகளின் 'மேப்பிங்' தகவல்களைத் தொடர்ந்து திரட்டி, அதனடிப்படையில் கடத்தல்காரர்களைப் பிடிக்கிறோம். தகவல் தரும் இன்ஃபார்மர்கள் பற்றி ரகசியங்களைக் காக்கவும், அவர்கள் விரும்பும் வண்ணம், விரும்பும் விதத்தில் சன்மானத் தொகையை அளிக்கவும் பாதுகாப்பான வழிகளை ஏற்படுத்தி வைத்திருக்கிறோம்" என்கிறார் சங்கர் ஜிவால்.

ஹெராயின் உள்ளிட்ட போதைப் பொருள் கடத்தலுக்குத் தண்டனைச் சட்டங்

கள் கடுமையானதாக இருக்கின்றனவா? தண்டனைகள் பற்றி விழிப்புணர்ச்சி இருக்கிறதா என்றால் 'இல்லை' என்கிறார் சென்னை உயர்நீதிமன்றத்தில் போதைப்பொருள் வழக்குகளில் தனி கவனம் செலுத்தி வரும் வழக்கறிஞர் ஆர்.சி. பால் கனகராஜ்.

"1985 ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்ட போதைப் பொருள் மற்றும் மனமயக்கும் பொருட்கள் தடைச்சட்டத்தின்படி கஞ்சா, ஹெராயின், ஓபியம், போதை ஊசிகள் வைத்திருப்போர், பயன்படுத்துவோர், கடத்துவோர் மீது கடுமையான சட்டம் பாய்ந்தது. பத்து முதல் இருபது ஆண்டுகள் வரை ரெமிஷன் இல்லாத சிறையும், இரண்டு லட்சம் வரை அபராதமும் விதிக்கப்பட்டு வந்தது. ஆனால் 1999 ஆண்டு இதே சட்டம் திருத்தப்பட்டு ஒரு கிராம் ஹெராயினுக்குக் கூட முழுத்தடை விதிக்கப்பட்டது. இதைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்ட தமிழக காவல் துறை, தலைவலி தரும் ரவுடிகள் மீது, ஹெராயின் வழக்குகளைப் போட்டு, இந்தச் சட்டத்தை முறைகேடாகப் பயன்படுத்தியது.

"இதைக் கருத்தில் கொண்டு இதே சட்டம் 2000ஆண்டில் மேலும் திருத்தம் செய்யப்பட்டு மறுபடியும் தண்டனைகள் சீராக்கப்பட்டிருக்கின்றன. தண்டனைகள் கடுமையாக இருந்தாலும், தண்டனைகள் பற்றிய விழிப்புணர்ச்சி அறவே இல்லை என்பதுதான் உண்மை. ஹெராயின் உள்ளிட்ட போதைப் பொருள் வழக்குகளில் அப்பாவிகள்தாம் அதிகம் மாட்டிக் கொள்கிறார்கள். உண்மைக் குற்றவாளிகள் சுதந்திரமாக வெளியே திரிகிறார்கள்" என்கிறார் இவர்.

ஹெராயினும், கஞ்சாவும் தவிர மருத்துவ உலகில் பயன்படுத்தப்படும் போதை ஊசிகளும் சர்வ சாதாரணமாகப் புழங்கும் சென்னையில், டி-அடிக்ஷன் சென்டர்களின் தேவையும் அதிகரித்துக் கொண்டேதான் இருக்கிறது.

சென்னை கீழ்ப்பாக்கம் மருத்துவமனையில் டீ – அடிக்ஷனுக்கென்று மிகப் பழைமையான வார்டு இருந்தாலும், தனியார் மருத்துவமனைகளே அதிக கவனம் செலுத்தி வருகின்றன. அடையாறு டி.டி.கே மருத்துவமனையும், தரமணி வி.எச்.எஸ். மருத்துவமனையும் போதைப் பொருள் அடிமைகளுக்கான கூட்டு சிகிச்சைகளை வழங்கி வருகின்றன. என்றாலும் போதை அடிமைகளை, சிகிச்சை மூலம் மீட்டு வருவது பெரும் சவாலாகவே தொடர்கிறது என்கிறார் இச்சிகிச்சையில் தனிக்கவனம் செலுத்திவரும் டாக்டர் லட்சுமி விஜயகுமார்.

"நூறுபேர் சிகிச்சைக்கு அழைத்து வரப்பட்டால் முப்பது பேரை மீட்பதே பெரிய வெற்றி. போதைப் பழக்கத்திலிருந்து மனத்தளவில் மீள வேண்டும் என்று நினைத்தால் கூட உடல் ஏங்கிக் கொண்டே இருக்கும். ஹெராயின் போன்ற போதைப் பழக்கத்துக்கு அடிமையானவர்களுக்கு, மனநல சிகிச்சை முடிந்த பிறகு 'நாட்ரக்ஸ்சோன்' என்ற மாத்திரையைக் கொடுத்து வருகிறோம். ஆனால் இந்த மாத்திரையைப் பயன்படுத்தும் காலகட்டத்தில் குடும்பத்தினரின் தீவிர கண்காணிப்பும், பாதுகாப்பும், பரிவும் அவசியம். கொஞ்சம் அலட்சியமாகவிட்டாலும், ஆபத்து" என்கிறார்.

குடும்பம் தோறும் ஓர் ஆல்கஹால் அடிமை உருவாகிவரும் சூழ்நிலையில், ஹெராயின் போன்ற போதைப் பொருட்களும், பான்பராக் போல பெட்டிக் கடைகளில் கிடைக்கத் தொடங்கினால், சென்னை மற்றொரு மும்பையாக மாறும் நாள் வெகு தொலைவில் இல்லை என்பதுமட்டும் உறுதியாகத் தெரிகிறது.

– நமது நிருபர்

படங்கள்: ராஜன்

## சுபாரி கில்லிங்!

படிக்கும்போது தறுதலையாகச் சுற்றிக் கொண்டிருக்கும் இளைஞர்கள், படித்து முடித்து விட்டு வேலையில்லாமல் அலைய நேரிடுகிறது. இத்தகைய இளைஞர்களை அடையாளம் கண்டு, போதைக்கும், பணத்துக்கும் முதலில் அடிமையாக்கி விடுகிறது டிரக் மாஃபியா கும்பல். இங்கே லாபமும் அதிகம், தொழில் போட்டியும் அதிகம் என்ற நிலையில் எதிரிகளுக்குப் பஞ்சமே இருப்பதில்லை. எதிரிகளைத் தீர்த்துக் கட்ட, போதைக்கு அடிமையான இளைஞர்களிடம் ஆயுதம், பணம், ஹெராயின் இவற்றைக் கூலியாகக் கொடுத்து, ஆளை மட்டும் அடையாளங்காட்டி, கொல்லச் சொல்கிறார்கள். கொல்பவனும் ஏன் என்று காரணம் கேட்காமல் வாயில் சுபாரி பாக்கு போட்டு மெல்வது போல கூலாகக் கொலை செய்து விடுகிறான். கொலை செய்யத் தூண்டிவிடும் ஆட்கள், சங்கிலி அடுக்குகளைப் போல ,நீள்வதால், மூல காரணமான ஆளைக் கண்டுபிடிக்க முடியாமல் போலீஸ் திணறும். சுபாரி கொலைகளில் இதுவரை 'தலைமை மூளை' மாட்டியதே இல்லை என்பதுதான் போதை மாஃபியா உலகின் அவிழ்க்க முடியாத முடிச்சு!

# மதுரையில்

ஆடி மாத வெயிலும் அனலும் அந்த திறந்தவெளி மைதானத்தில் கூடியிருந்த ஆயிரக்கணக்கானவர்களை, பாடாய்ப்படுத்துகிறது. எங்காவது ஓர் அடி நிழல் கிடைத்தால் கூட இளைப்பாறலாமா என்று கூட்டம் அலைகிறது. கீழ்வானத்தில் நம்பிக்கை ஊட்டும்படியாக கருமேகங்கள் திரள்கின்றன. வானத்தில் பட்டாம்பூச்சியாய்த் தெரிகிறது ஹெலிகாப்டர். வெயிலை மறந்து குரல்கள் எழுச்சியுடன் ஒலிக்கின்றன. "அன்னை சோனியா காந்தி வாழ்க!" கோஷம் அந்த ஹெலிகாப்டரையே கூட தொட்டிருக்கும்!

மதுரை சுற்றுச் சாலையில் கூடிய அந்தக் கூட்டம் நிச்சயம் 'அழைத்து வரப்பட்ட' கூட்டமல்ல. "ஆட்களைக் கூட்டி, வேனும், வேனுக்குள் 'தேனும்' வைக்கும் பழக்கம் எங்களுக்குக் கிடையாது!" என்று சொல்கிறார் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்.

த.மா.கா. காங்கிரஸ் இணையும் விழா எதிர்பார்த்ததை விட ஆரவாரத்துடனும், நம்பிக்கையூட்டும்படியாகவும் நடந்தது என்பதைச் சொல்லித்தான் ஆகவேண்டும்.

"மதுரை போலீஸ் கமிஷனருக்குக் கஞ்சித் தொட்டி என்றாலும், பிடிக்காது. கதர்ச் சட்டை என்றாலும் பிடிக்காது என்பது மட்டும் தெளிவாய்த் தெரிகிறது. இல்லையானால் இவ்வளவு விட்டேத்தியாக இருப்பார்களா?" என்று சொன்னார் கோவில்பட்டி சின்னசாமி. மேடைக்கருகில் மைக்கில் பேசிய பீட்டர் அல்போன்ஸ், "சோதனை என்ற பெயரில், போலீஸ் எங்கள் தொண்டர்களைத் திசைதிருப்ப வேண்டாம்" என்றார். ஆயிரக்கணக்கில் வந்து குவிந்த தொண்டர்களை, முறைப்படுத்தி, கூட்டத் திடலுக்குள் அனுப்பி வைக்க போலீஸார்





உதவியது மிகக் குறைவு. அதே போல், வாகனங்களையும் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வராமல் 'குண்டக்க மண்டக்க' விட்டு விட்டார்கள். இத்தனையையும் மீறி, கூட்டம் ஒருவித பொறுமையோடு மேடையை நோக்கித் திரண்டது.

சோனியா மாநாட்டுத் திடலுக்கு வந்த போது நேரம் 4.55. மேடைக்குக் கீழே எல்லா கோஷ்டித் தலைவர்களும் சோனியாவுக்குப் பொன்னாடையோடு காத்துக் கொண்டிருந்தார்கள். சோனியாவோடு வந்தவர்கள் ரமேஷ் சென்னிதாலா, மணிசங்கர் அய்யர், இளங்கோவன் மற்றும் வாசன். சோனியா வருவதற்கு முன் பீட்டர் அல்போன்ஸ் "சோனியா காந்தி அவர்கள் இன்னமும் பத்து நிமிடங்களுக்குள் மேடைக்கு வந்து விடுவார்கள்; தமிழகத்தின் சரித்திரம் மாற இன்னமும் பத்து நிமிடங்கள் இருக்கின்றன" என்றார்! 'நேரத்துக்கேற்ற பேச்சுதான்' என்று மெச்சிக் கொண்டனர் தொண்டர்கள்.

# மறுமலர்ச்சி!

மேடையில், சோனியாவுடன் வந்தவர்களைத் தவிர எஸ்.ஆர்.பியும். ஏ.ஐ.சி.சி. செயலாளர் சர்மாவும் மட்டுமே அனுமதிக்கப்பட்டனர். ஜெயந்தி நடராஜன் எவ்வளவோ முயன்றும், கூட்ட முடிவில்தான் மேடைக்குச் செல்ல முடிந்தது.

'இறைவணக்கம்' என்று 'தாய் மண்ணே வணக்கம்' பாடலைத் துவங்கினார்கள், மேடைக்கு சற்றுத் தொலைவில் இன்னொரு மேடையில் இருந்த லட்சுமண் ஸ்ருதி குழுவினர். மேடையில் எல்லோரும் பாடல் சீக்கிரம் முடிந்து விடும் என்று நின்று கொண்டிருக்க மூன்று நான்கு நிமிடங்களுக்கு மேல் நீடித்தது. இதனால் கொஞ்சம் பொறுமையிழந்த இளங்கோவன், சைகையிலேயே நிறுத்துங்கள்' என்று சொல்ல, அப்போதும் பாடல் தொடரவே, 'பாடலை உடனே நிறுத்தவும்' என்று மைக்கில் சொல்லி நிறுத்தச் செய்தார். கொஞ்சம் திட்டமிட்டிருந்தால் தவிர்க்கப்பட்டிருக்கக்கூடிய நிகழ்வு!

மேடையில் சோனியா அருகில் இருந்த வாசன், தூரத்தில் வைக்கப்பட்டிருந்த கட்-அவுட்களையும், மேடையருகே உட்கார்ந்திருந்த பிரமுகர்களையும் காண்பித்து ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். ஐந்து நிமிடங்களுக்கு ஒருமுறை சோனியா கூட்டத்தைப் பார்த்துக் கைகளை ஆட்டிக் கொண்டிருந்தார்.

எல்லோரையும் வரவேற்றுப் பேசிய வாசன் "காலம் கனிந்து விட்டது. தமிழகத்தில் காங்கிரஸ் ஆட்சி மலரப் போகிறது" என்றார், பலத்த கரகோஷங்களிடையே.




"திராவிடக் கட்சிகள் மக்களை ஏமாற்றி விட்டன" என்றார் ரமேஷ் சென்னிதாலா. "எந்தக் கொம்பன் வந்தாலும், தமிழ கத்தில் மீண்டும் காங்கிரஸ் ஆட்சி அமைவதைத் தடுக்க முடியாது" என்றார். கூட்டத்தில் த.மா.கா.வினர் பெரும்பான்மையாக இருந்ததால் இளங்கோவன் பேச்சுக்கு உற்சாகக் கைதட்டல் கொஞ்சம் குறைவுதான்.

சோனியாவின் பேச்சை மொழிபெயர்த்தார் பீட்டர் அல்போன்ஸ். ஏற்கெனவே மணிசங்கர் அய்யரால் தயார் செய்யப்பட்ட உரை. மாநில அம்மாவிடம் கொஞ்சம் பாசம் காட்டும் மணிசங்கர், அ.தி.மு.க. ஆட்சிக்கு வந்த சில மாதங்களிலேயே அனைத்துத் தரப்பு மக்களும் விரக்தியடைந்ததை உரையில் குறிப்பிட்டிருந்தாலும், அ.தி.மு.க. ஆட்சி என்று குறிப்பிடவில்லை. 'கடந்த 25 வருடங்களாக தமிழக அரசியலை வெறுப்பும் பொறாமையும்தான் ஆக்கிரமித்து வருகின்றன' என்று பொதுவாகவே விமர்சித்தார் சோனியா.

"நாட்டில் பதினான்கு மாநிலங்களில் காங்கிரஸ் ஆட்சி செய்கிறது. தமிழ்நாட்டையும் காங்கிரஸ் ஆளும் மாநிலமாக மாற்ற முடியும். நம்மால் செய்ய முடியும்" என்று சோனியா உறுதியான குரலில் சொன்ன போது தமிழக காங்கிரஸ் பிரமுகர்களுக்கே ஊக்க டானிக் தந்தது போல் இருந்தது.

த.மா.கா. சார்பில் சோனியாவுக்கு பார்லிமெண்ட் கட்டட சிற்றுருவ பொம்மை, நினைவுப் பரிசாகக் கொடுக்கப்பட்டது. காங்கிரஸ் சார்பாக தங்கச் செங்கோல், கிரீடம்! மொத்தம் 80 சவரன்கள், வேலூர் மாவட்ட காங்கிரஸ் பிரமுகர் ஒருவர்தான் அதற்கு ஸ்பான்ஸர்.

சென்னை எழும்பூரில் ரயில் ஏறியதிலிருந்து, மதுரையில் கூட்டம் முடிந்து போன நிலையிலும் நமக்குத் தெரிந்த சில காங்கிரஸ், த.மா.கா. பிரமுகர்கள் விடாமல் கேட்ட ஒரே கேள்வி : "என்ன ஸார் எப்போது தலைவரை மாற்றப் போகிறார்களாம்? ஏதாவது தெரியுமா?" என்பதுதான்!

இதுபற்றிக் கூட்டத்திலேயே ஏதாவது அறிவிப்பு வரும் என்ற எதிர்பார்ப்பு இருந்தது. ஆனால் பேச்சின் முடிவில் வாசனை அ.இ. காங்கிரஸ் கமிட்டி செயலாளராக நியமிப்பதாகச் சொல்லி முடித்துக் கொண்டார் சோனியா.

"ஏ.ஐ.சி.சி.யில் ஏற்கெனவே 24 செயலாளர்கள் இருக்கிறார்களாம். நமக்காகப் பச தில்லியில் இப்போ ஆள் இருக்கு" என்று திருப்திப்பட்டுக் கொண்டனர் த.மா.கா.வினர்.

"கட்சியில் மீண்டும் வந்து இணைபவர்களுக்கு தகுந்த பொறுப்பும், மரியாதையும் தரப்படும்" என்று சோனியா சொன்னது மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது" என்றார் சென்னையைச் சேர்ந்த நிஜாமுதீன்.

"ஆளுங்கட்சியையும், அதன் செயல் முறைகளையும் கடுமையாக விமர்சித்தால்தான் மக்களிடம் செல்வாக்கு பெற முடியும். ஆனால் காங்கிரஸ்காரர்களுக்கு அ.தி.மு.க.வைப் பெயர் சொல்லி விமர்சிக்க மட்டும் ஏனோ மிகவும் தயக்கமாக இருக்கிறது. அதுதான் ஏன் என்று புரியவில்லை" என்று அப்பாவித்தனமாகக் கேட்டார் நெல்லை கோவிந்தன்.

எப்படிப் பார்த்தாலும், மதுரை த.மா.கா. - காங்கிரஸ் மாநாடு ஒரு பெரிய நம்பிக்கையை காங்கிரஸ் தொண்டர்களுக்கு உண்டாக்கியிருக்கிறது. இந்த மறுமலர்ச்சியைச் சரியான விதத்தில் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது காங்கிரஸ் தலைமையின் கடமை. சொந்தக் காலில் நிற்க வேண்டிய அளவுக்குச் சரியான வழிகாட்டுதலை தலைமை அவ்வப்போது சுட்டிக்காட்ட வேண்டும். அதை விட்டு விட்டு, பாராளு மன்றத் தேர்தலில் நிறைய இடங்கள் வேண்டுமென்பதற்காக, தன்மானத்தைத் துறந்து கழகத்தோடு கூட்டணி சேருமானால் இன்னமும் முப்பத்தைந்து வருடங்கள் போனாலும், ஆட்சியைப் பிடிக்க முடியாது!

இப்போது கடைசியாக வந்த செய்தியின் படி, த.மா.கா.விலிருந்து வந்த பிரமுகர்கள் மற்றும் காங்கிரஸ் கோஷ்டித் தலைவர்களை உறுப்பினர்களாகப் போட்டு ஒருங்கிணைப்பு கமிட்டி ஒன்றை அமைத்திருக்கிறது காங்கிரஸ் மேலிடம். எனவே, இப்போதைய நிலையில் இளங்கோவன் பதவிக்கு ஆபத்து இல்லாவிடினும் கோஷ்டி குடைச்சல் தொடரும் வாய்ப்பிருக்கிறது.

— ஸ்ரீநிவாஸன்

படங்கள் : ராஜன்






**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

# முதல்வர் செய்யும் மூளைச் சலவை!

ஜெயலலிதா ஹைதராபாதிலிருந்து திரும்பிய பிறகுதான் மதுரை கஞ்சித்தொட்டி அடிதடி விவகாரம் குறித்த உண்மைகள் வெட்ட வெளிச்சமாகியிருக்கின்றன. அதுவரை வெளியான செய்திகளுக்கு முதல்வரின் அங்கீகாரம் இல்லாததால் அவை எப்படி உண்மையாயிருக்க முடியும்!

அ.தி.மு.கவினர் அத்தனை பேருமே உத்தம புத்திரர்கள் அல்லவா! அவர்கள் பெட்டிப் பாம்பாக அடங்கியிருக்க, தி.மு.க. ஆட்கள்தான் விஷப் பாம்பாய்ச் சீறியிருக்கிறார்கள்; காவல் துறையினரைத் தாக்கியிருக்கிறார்கள்; அவமதித்திருக்கிறார்கள்; மதுரை போலீஸ் கமிஷனரின் கையில் கொதிக்கிற கஞ்சியை ஊற்றிக் காயப்படுத்தியிருக்கிறார்கள். அதனால் தான் மதுரை மேயர், தமிழக சட்டசபையின் முன்னாள் சபாநாயகர் உள்பட பலர், கொலை முயற்சி குற்றச்சாட்டின் பேரில் கைது செய்யப் பட்டனர்.



2002 ஆகஸ்ட் 25
சித்ரபானு ஆவணி 9
மலர் : 61
இதழ் : 4




இந்தப் பத்திரிகைகள் யாவுமே வழக்கம்போல் ஜெயலலிதா விரோத நிலையை மேற்கொண்டு அ.தி.மு.க. மீது பழிபோட்டு விட்டன; அவை எல்லாமே தி.மு.கவுக்கு வால் பிடிக்கும் பத்திரிகைகள் அல்லவா! ஆதலால் மதுரை கஞ்சித்தொட்டி விவகாரம் குறித்து ஆங்கில இதழ்களில் வெளியான செய்திகளும் சரி, தமிழ் இதழ்களில் வெளியானவையும் சரி, அப்பட்டமான பொய்கள்! தொலைக் காட்சி செய்திகளும் கூட திரித்துதான் வெளியிடப்பட்டுள்ளன. எல்லாமே அ.தி.மு.க. அரசை எதிர்க்க நடத்தப்படும் சதியன்றி வேறென்னவாக இருக்க முடியும்!

– தமிழக முதல்வர் ஜெயலலிதாவின் ஆகஸ்ட் 13 அறிக்கையைப் படிக்கும்போது யாருமே இந்த முடிவுக்குச் கலபத்தில் வந்து விடுவார்கள். அந்த அளவுக்கு நம்மை மூளைச் சலவை செய்யக் கூடிய அறிக்கை அது!

ஜெயலலிதா அரசு நிர்வாகத்தில் தேர்ந்தவராயிருக்கிறாரோ இல்லையோ, உண்மையைப் பொய்யாக்கி, பொய்யை உண்மையாக்கிக் காட்டும் கலையில் மிகக் கைதேர்ந்தவராயிருக்கிறார்!

அந்த வித்தையைக் கண்டு மயங்கி விடாமல் நாம் அவரை நோக்கிச் சில கேள்விகள் எழுப்பியாக வேண்டும்.

மதுரை, செல்லூரில் தி.மு.கவினர் நடத்திய கஞ்சித் தொட்டிக்கு அ.தி.மு.கவினர் ஏன் போக வேண்டும்?

கஞ்சி விநியோகம் நிறுத்தப்பட வேண்டும் என அ.தி.மு.க. கட்சிக்காரர்கள் காவல் துறையினரை ஏன் வற்புறுத்த வேண்டும்?

போட்டிக்காக அ.தி.மு.கவினர் நடத்திய பிரியாணி மையம், கஞ்சித் தொட்டியிலிருந்து இருநூறு மீட்டர் தூரமே இருக்க ஏன் அனுமதி வழங்கப்பட்டது; அல்லது பிரியாணி மையத்துக்கு இத்தனை அருகில் கஞ்சித் தொட்டி நடத்த அனுமதிப்பானேன்?

ஆளுங்கட்சிக்காரர்கள் சொன்ன பேச்சைக் கேட்டுக் கொண்டு காவல்துறை கைகட்டி வேடிக்கை பார்த்தது நியாயமா?

கைகலப்பு ஆரம்பித்தபின் வந்து சேர்ந்த மதுரை கமிஷனர் கேட்டுக் கொண்ட பிறகும் அ.தி.மு.க.வினர் கல் எறிந்து தாக்குவதை நிறுத்தவில்லையே?




கைகலப்பு முற்றிவிடக் கூடும் என்று எதிர்பார்த்து கண்ணீர்ப் புகை வீச போலீஸார் தயாரா யிராமல் போனது ஏன்...?

தாமே முன்வந்து முக்கிய தலைவர்கள் கைதான நிகழ்ச்சியில், ஒரு சில மூத்த தலைவர்களை மட்டும் லத்தியால் தாக்கிக் காயப்படுத்த வேண்டிய அவசியம் என்ன...?

ஆளுநர் – மதுரை காவல்துறை கமிஷனர் சந்திப்பு தி.மு.கவினருடைய முறையீடினால் நிகழ்ந்தது என்ற செய்தியை அவசர அவசரமாக ஜெயலலிதா ஏன் மறுக்க வேண்டும்?

மதுரை போலீஸ் கமிஷனர் குற்றமற்றவர் என்று தமிழக காவல்துறை டி.ஜி.பி. சான்றிதழ் தருவது வேலிக்கு ஓணான் சாட்சி என்கிற கதையல்லவா?

உள்துறைச் செயலர் நரேஷ் குப்தா திடீரென்று பதவி மாற்றம் செய்யப்பட்டதற்கு என்ன காரணம்...?

ஆகஸ்ட் ஒன்பதாம் தேதி நடந்த வன்முறைச் சம்பவம், செய்திகளுக்கு ஆற அமர ஆகஸ்ட் 13 அன்று முதல்வர் விளக்கமும் மறுப்பும் அளிப்பது எவ்வகை சுறுசுறுப்பில் சேர்த்தி?

ஜெயலலிதா உண்மைகளை அப்படியே புரட்டிப் போட முயற்சி செய்கிறார். அதன் மூலம் அவர் மக்களை ஏமாற்ற முயற்சி செய்வதோடு, செய்தித்தாள்களுக்கும் முட்டாள் பட்டம் கட்டு கிறார். தற்போதைய தமிழக அரசைப் போன்ற பத்திரிகை விரோத அரசு தமிழ்நாட்டின் வரலாற்றில் இதற்கு முன் இருந்ததில்லை. பத்திரிகை விரோதம் என்பது ஏதோ சில குறிப்பிட்ட நிறுவனங்களுக்கு விரோதமான நிலை அல்ல; அது ஜனநாயக மரபுகளுக்கு விரோதமானது; மக்கள் விரோதமானது.

அதிகார பலம் கொண்டு செய்யப்படும் பொய்ப் பிரசாரங்கள் எல்லாவற்றையுமே மக்கள் நம்பிவிட மாட்டார்கள். திருநெல்வேலி பக்கங்களில் ஒரு பழமொழி உண்டு: 'தோசையைத் திருப்பிப் போடலாம்; இட்லியைத் திருப்பிப்போட முடியுமா...?' என்ற சொலவடை. ஜெயலலிதா இட்லியைத் திருப்பிப் போட முயற்சிப்பதோடு நிற்கவில்லை; கஞ்சித் தொட்டியையே கவிழ்க்கப் பார்க்கிறார்! ○

# கல்லடித்துக் கலைத்தது யார்?

✉ 'தாகம் தீர்க்கும் மூன்றெழுத்து' தலைப்பில் 'திருச்சி வீகேயென்' பற்றிய கட்டுரை கண்டேன். அவர் தாகம் தீர்ப்பவர் மட்டுமல்ல; விளையாட்டு ஆர்வம் வளர்ப்பவரும் கூட.
திருக்குவளை. ச. செயப்பிரகாசு.




✉ ஓவியர் அரஸ் கைவண்ணத்தில் உருவான அட்டைப் படம் அபாரம்!
வடலூர்,
வெ. லட்சுமி நாராயணன்.

✉ 'ஸ்ரீ' படத்தை மீண்டும் ஒருமுறை பார்த்துவிட்டு உமது விமரிசனத்தை எழுதவும். அதில் 'வடிவேலு' என்ற நடிகர் இருப்பதை மறந்துவிட்டு என்னய்யா விமரிசனம் எழுதுகிறீர்...?
திருவாரூர், ஆர். சுப்பு.

✉ மாணவிகளை மட்டுமே பலி வாங்கிக் கொண்டிருந்த ராகிங் எமன், மாணவர்களையும் விட்டு வைக்கவில்லையே, அரசும் சட்டமும் கை கட்டிக்கொண்டு வேடிக்கை பார்க்கும் வரை இக்கொடுமைக்கு முற்றுப்புள்ளி வைக்க முடியாது.
பெரியகுளம், அ. ரமேஷ் ஞானாம்பாள்.

✉ பரிசு பெற்ற 'மூவர்' சிறுகதை படித்தேன். மனித நேயம் அரிதாக விட்ட இக்காலத்தில் அதனை இயல்பாக வலியுறுத்திய ஓர் அருமையான கதைக்குப் பரிசு அளித்தமைக்குப் பாராட்டு.
சென்னை-28, சியாமளா ரங்கநாதன்.

✉ வளமாலியின் கையைப் பிடித்துக் கொண்டு அழுதது காவேரி மட்டுமல்ல, நாங்களும்தான். ஜீவன் தொட்ட சிறுகதையைப் படைத்த சத்தியப்பிரியனுக்குப் பாராட்டு.
வேலூர் - 4, திருமலை நாயகன்.

✉ 'சடக், படக்' கார்டூன் வயிறு குலுங்கச் சிரிக்க வைத்தது.
தஞ்சாவூர், ஆர். சாவித்திரிபாய்

✉ 'தேன்கூடு' பகுதி காணப்படவில்லையே; கல் அடித்துக் கலைத்தது யார்?
நெய்வேலி - 3, சாந்தி சுந்தர்.

✉ 'துணையா, தொல்லையா?' என்று தலைப்பிட்டு, வாஜ்பாய் தலை மேல் கை வைத்துக் கொண்டு நொந்து போவது போல கார்டூன் போட்டால் என்ன அர்த்தம்?
மதுரை,
என். பாலகிருஷ்ணன்.

✉ மாணவ சமுதாயம் நல்ல சிந்தனைகளை வளர்த்துக் கொண்டால் தான் ராகிங் கொடுமைகளைத் தடுக்கலாம்.
குடியாத்தம், ஏ.கே. சரத்பாபு.

✉ பழநி எழுதிய 'பூச்சுமை' படித்தேன். நீண்ட நேரத்துக்கு என் மனத்தில் சோகச் சுமை இருந்தது.
சென்னை - 17, இரா. இராசேந்திரன்.

# அந்த விழிப்'பூ' சுகமானது!



**நா**ன், ஷாம்லி, தம்பி ரிச்சர்ட் மூணு பேரும் ஏதாவது ஒரு சமயத்துலே ரொம்ப ஒற்றுமையா இருந்தோம்னா, கிறிஸ்துமஸ் நெருங்கிடுச்சுன்னு அர்த்தம்.

எங்க வீட்டுக்கு அருகேயுள்ள வசதி குறைஞ்ச பிள்ளைகளும் சேர்ந்துக்குவாங்க. அமர்க்களத்துக்குக் கேட்கணுமா?

நான் சின்னப் பெண்ணா இருந்தப்போ, டிசம்பர் இருபத்துநாலாம் தேதி இரவு, எனக்கு என்னென்ன வேணும்னு பட்டியல் போட்டு, எழுதி தலையணைக்கு அடியில் வைச்சுடுவேன். மறுநாள் காலைலே, எல்லா பொருளும் படுக்கைக்குப் பக்கத்திலே தயாரா இருக்கும். நானும் சாண்டாகிளாஸ் தாத்தாதான் வந்து பரிசு வைச்சுட்டுப் போயி ருக்கார்னு நம்பிடுவேன்! அந்த சாண்டா கிளாஸ் வேறு யாருமில்லே, தாடி வைக்காத என்னோட அப்பா பாபுதான்னு தெரியற வயசுவரை அனுபவிச்ச சந்தோஷமே வேறு.

**ச**ரி, அது பழைய கதை! இந்த வருஷம் கிறிஸ்துமஸ் சமயத்திலே அஜீத்துக்கு ஷூட்டிங் இருந்தது. அவருக்கு இதிலே எல்லாம் ஆர்வம் இருக்குமோ இல்லை யோன்னு நினைச்சு, அப்பா வீட்டுக்குப் போய்க் கொண்டாடிக்கலாம்னு சும்மா இருந்துட்டேன். கிறிஸ்துமஸுக்கு முதல் நாள் எங்க வீட்டுக்குப் பெரிய பார்சல் வந்தது. 'ஏதோ ஷூட்டிங்குக்குத் தேவையான பொருள்'னு நினைச்சு, அக்கறை காட்டாம இருந்துட்டேன்.

படப்பிடிப்பு முடிஞ்சு அஜீத் வந்தார். "ஏ.. ஷாலு... அந்தப் பெட்டியைப் பிரிச்சுப் பார்... சம்திங் இன்ட்ரஸ்டிங்" என்றார். பிரித்துப் பார்த்தால், ஆறடி உயர கிறிஸ்துமஸ் மரம்! அடேயப்பா! செம அழகு! அவ்வளவு பிஸி ஷெட்யூலுக்கு நடுவிலும், தானே அலைஞ்சு திரிஞ்சு எனக்குப் பரிசுப் பொருள் வாங்கி வந்திருக்கிறார்... அவ்வளவு தான்! என்னோட குஷிக்குக் கேட்கணுமா? ஒரே குதியாட்டம்தான்!

உடனே நடுக்கூடத்தை ஒழுங்கு செய்து, பார்சலைப் பிரிச்சு, அழகான மரமாக செட் பண்ணி, நட்சத்திரம், பூ, பல்பு, சின்ன சின்ன பொம்மைகள் எல்லாவற்றையும் அலங்காரம் செய்து முடிக்கும் போது, நள்ளிரவைத் தாண்டிவிட்டது. மரத்தை செட் பண்ணு வதற்குள் பயங்கர கேலி, தமாஷ், சண்டை!

பேய், பிசாசு எல்லாம் வந்துட்டுப் போனதும், இரண்டு பேரும் 'ஹாப்பி கிறிஸ்துமஸ்' சொல்லிட்டுத் தூங்கப் போனோம். அஜீத் உடனே தூங்கிட்டார். ஆனால் நான்... தூங்காமல் தூங்கிய அந்த விழிப்பு சுகமானது!

சந்திப்பு : அனு



# அதிகாரி இல்லாமல் அலுவலகம்!

அதிகாரி என்று ஒருவர் மேற்பார்வை செய்யாமலே ஒரு நிறுவனம் நடைபெறுவதைப் பார்த்திருக்கிறீர்களா? ஆழ்வார்பேட்டையில் ஒரு கம்ப்யூட்டர் சென்டர் அப்படித்தான் இயங்கி வருகிறது என்றால் நம்புங்கள்! உரிமையாளர் அயல் நாட்டில் இருந்தாலும் ஊழியர்கள் தத்தம் வேலையை ஒழுங்காகச் செய்து வரும் அதிசயம் இங்கேதான் நடக்கிறது. நிறுவனத்தின் பெயர்: சூப்பர் காப்ஸ். உரிமையாளர் சுப்பிரமணியனுக்குத் தம் ஊழியர்கள் மேல் இருக்கும் நூறு சதவிகித நம்பிக்கையை ஒரு புறம் இது நிரூபிப்பதோடு, ஊழியர்களின் விசுவாசத்தையும் அல்லவா இது காண்பிக்கிறது?

பிரகாஷ் என்ற இளைஞர்தான் மூத்த ஊழியர். போட்டோ ஸ்கேனிங், பேஜ் மேக் அப், டிசைனிங் எல்லாம் இவர் பார்த்துக் கொள்வதோடு, கம்ப்யூட்டரில் ஏதேனும் பிரச்னை என்று சக ஊழியர்கள் சொல்லும் பட்சத்தில் உடனே 'ட்ரபிள் ஷூட்டரா'க மாறி உதவுவார்.

வெண்ணிலா, விசாலாட்சி, தீபா மூவரும் ஈமெயில், கடிதங்கள், எஸ்டிமேட்டுகள் என்று வாடிக்கையாளர்களின் பணிகளைப் பங்கு போட்டுக் கொண்டு தாங்களாகவே செய்து முடித்துவிட்டு அதற்கான கட்டணங்களைக் கணக்கிட்டு வசூலித்து விடுவார்கள். அதிக பக்கங்கள் இருக்கும் பணிகளை இரண்டு பேர் பங்கு போட்டுக் கொண்டு குறிப்பிட்ட சமயத்தில் முடித்து விடுவார்கள்.

பாரதியும், சுபாஷிணியும் ஜெராக்ஸ் பிரதிகள் எடுக்கும் தனிப் பகுதியைக் கவனித்துக் கொள்ளுகிறார்கள். வழக்கமான வாடிக்கையாளர்களுக்கு அக்கவுண்ட் இருக்கிறது. அவரவர் பக்கத்தில் அவற்றைப் பதிவு செய்து கையொப்பம் வாங்கி விட்டால், மாத முதல் வாரத்தில் பட்டியல் தயார் செய்து அனுப்பிவிடுகிறார்கள்.

"தேவையான பேப்பர், டோனர், ரிப்பன் எல்லாம் ஸ்டாக் கைவசம் இருப்பதைப் பொறுத்து ஆர்டர் செய்து விடுகிறோம். சமயத்தில் வந்துவிடும்!" என்கிறார் பிரகாஷ்.

வேலை நேரத்தில் எல்லாரும் படு ஸீரியஸ். மற்ற நேரத்தில் ஊழியர்களிடையே நிலவும் ஒற்றுமையும், மகிழ்ச்சியும் 'ஆஹா' போட வைக்கும்.

அரசு தரப்பிலான வேலைகள், ஸ்டேட்மென்ட்டுகள் சமர்ப்பித்தல், பணம் செலுத்துதல் எல்லாவற்றையும் ஆடிட்டர் தக்க சமயத்தில் செய்து விடுகிறார்.

அன்றன்றைக்கான வங்கி வேலையை பிரகாஷ் பார்த்துக் கொள்கிறார்.

மாலையில் அலுவலகம் மூடும் முன்பு, உரிமையாளரின் மகள் சுஜாதா, வங்கிக் கணக்குகளைச் சரி பார்த்து உறுதி செய்து கொள்வதோடு, ஆர்டர் செய்ய வேண்டிய ஐட்டங்களையும் குறித்துக் கொடுத்துவிட்டுச் செல்கிறார்.

புனேயில் கமானி இன்ஜினியரிங் நிறுவனத்தை ஊழியர்களே முற்ற முழுக்க நடத்துவதாக ஒரு செய்தி உண்டு. 'சூப்பர் காப்ஸ்' கம்ப்யூட்டர் சென்டருக்கு வருபவர்களுக்கு அதை நேரிடையாகப் பார்க்கும் வாய்ப்பும், பார்த்த பிறகு நம்பிக்கையும் ஏற்படும்!

— சாருகேசி

# உங்களால் முடியும்!






Sree Griha

Easy Home Finance

**வீட்டு வசதி கடன் திட்டம்**

- கவர்ச்சிகரமான வட்டி விகிதங்கள்
- வசதியான நீண்டகால தவணைத் திட்டங்கள்
- உடனடி பரிசீலனை - விரைவான சேவை

மேலும் விவரங்களுக்கு அருகில் உள்ள கிளையை அணுகுங்கள்.

FORTUNE-CH



## Bharat Overseas Bank Ltd.

A bank owned by 7 banks.

H.O: Habeeb Towers, 196, Anna Salai, Chennai 600 002. Tel: 852 2983, 852 0748. Fax: (91)-(044)-859 4615.
Telex: 041-7493 BOB-IN E-mail : bobl@vsnl.com Visit us at : www.bharatoverseasbank.com

ஜி. கிருஷ்ணமூர்த்தி
தலைவர்

*We'll be with you, right through*

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்

ரூ.1,250/- ஆறுதல் பரிசு பெறும் வைர விழா வைட்டமின் சிறுகதை

பிளஸ் டு பரீட்சைகள் முடிந்த அன்று மாலை, முத்து அவனது பள்ளித் தலைமை ஆசிரியர் அனந்த கிருஷ்ணனைப் பார்க்கச் சென்றான். வீட்டில் பூச்செடிகளுக்குத் தண்ணீர் வார்த்துக் கொண்டிருந்தார் ஆசிரியர். அறுபதைத் தொட்ட உருவம். இந்தக் காலத்து மேல்பூச்சுகள் எதுவும் அவரிட மில்லை. பஞ்சக் கச்ச வேட்டி. நெற்றியில் திருநீறு. கண்களில் பிரகாசம். மேலே போர்த்தியிருக்கும் மேல் வேட்டி.

"வணக்கம் ஸார்..." என்றான் முத்து, கேட்டைத் திறந்தபடி. நிமிர்ந்து பார்த்த அனந்த கிருஷ்ணனின் முகம் மலர்ந்தது.

"வா.. முத்து... உள்ள வா..." என்ற அழைத்த படி கையிலிருந்த பூவாளியை அருகேயிருந்த மேடை மேல் வைத்தார். ஆசிரியரின் வீடு ஆசிரியரைப் போல் பழைமையாக இல்லாமல், அதே சமயம் முற்றிலும் புதுமையாகவு மில்லாமல் வரவேற்றது.

''எப்படி முத்து பரீட்சையெல்லாம் எழுதினே? உனக்குத் திருப்தியாக இருந்ததா?" என்று கேட்டார்.

''யெஸ் ஸார். எனக்கு நல்ல திருப்தி ஸார். நன்றாகவே செய்திருக்கிறேன். எல்லாம் உங்க ஆசிர்வாதம் ஸார்.." என்றான் முத்து.

முத்துவை முன் தாழ்வாரத்து நாற்காலியில் அமரச் செய்து தானும் எதிரே அமர்ந்தார். அனந்த கிருஷ்ணன்.

"உன்னால் ஒரு நாள் நம் பள்ளிக்கூடத்திற்கே பெருமை வரப் போகிறதப்பா...'' என்றார் பின்னர் கனிவுடன்.

முத்து மெல்லச் சிரித்தான்.

''எனக்கு அந்த அதிர்ஷ்டம் கிடைக்குமான்னு தெரியாது ஸார். ஆனால் அப்படியே கிடைத்தாலும் அதற்கு நீங்கதான் காரணம்.'' என்றான்.

முத்து பதினேழு வயதிற்குரிய வளர்த்தியுடன் வெடவெடவென்று இருந்தான். அடர்த்தியான கிராப். அரும்பியிருக்கும் மீசை. மாநிறம் தான். ஆனால் முகத்தில் களை இருந்தது.

''இருக்கட்டும்.. மேல என்ன படிக்கிறதா முடிவு பண்ணியிருக்கே? உன் மார்க்குக்குக் கட்டாயம் இன்ஜினியரிங்கிலோ மெடிக்கலிலோ ஸீட் கிடைக்கும்..'' என்றார்.



தேவ் விரதன்

# மரமென் வேட்டை

முத்து அவரை யோசனையுடன் பார்த்தான்.

"அப்பாவால் முன்ன போல வயல்ல வேலை



செய்ய முடியல ஸார்... அதுதான் கவலையா இருக்கு." என்றான் முத்து. நிஜமாகவே அவன் குரலில் கவலை தெரிந்தது.

அனந்த கிருஷ்ணன் பூங்குளம் உயர் நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியர் பொறுப்பேற்று பல வருஷங்கள் ஆகிறது. தஞ்சை மண்ணில் பிறந்து அங்கேயே வளர்ந்து, படித்து, ஆசிரியராக, பின் தலைமை ஆசிரியராகப் பணியாற்றும் அவர் எத்தனையோ மாணவர்களைப் பார்த்துவிட்டார்.

இன்று அவரிடம் படித்த மாணவர்கள் பலர் இந்தியாவிலும், வெளிநாட்டிலும் பல இடங்களில் மிக உயர்ந்த பதவிகளை வகித்தும் வாழ்ந்தும் வருகின்றனர். படிக்கும்போது அத்தனைப் புத்திசாலியாக இல்லாத மாணவன்கூட பட்டணம் சென்று கெட்டிக்காரனாகி, பணம் கொழிப்பதைப் பார்த்திருக்கிறார்.

ஆனால் சமீப காலமாக அவர் மனத்தை சில விஷயங்கள் மிகக் கடுமையாக அறுத்துக் கொண்டிருந்தன.

பூங்குளம், காவிரிப் பாசனத்தில் வளம் கொழிக்கும் கிராமம். பல நிலச் சொந்தக்காரர்கள் பையன்களையும், பெண்களையும் நகரத்துக்குப் படிக்க அனுப்பிவிட்டு, வீடு வாசல், நிலங்களை விற்றுவிட்டுக் குடி பெயர்ந்து சென்று கொண்டிருப்பது அவர் மனசுக்கு மிகவும் வேதனையைத் தந்தது. நிலத்தைப் பஞ்சத்துக்குப் பிள்ளை போல் விற்பதும் அதை வாங்கியவர்களும் பயிர்த் தொழிலைக் கொஞ்சம் கொஞ்சமாக விலக்கி 'ரியல் எஸ்டேட்' என்ற பெயரில் விற்று காசு பண்ணுவதும் அவரை மிகவும் பாதித்து வந்தது.

சென்ற ஆண்டுகூட அவர் பள்ளியில் மிகச் சுமாராக மதிப்பெண்கள் பெற்றுத் தேர்ச்சி பெற்ற அரசு என்ற மாணவன், ஏதோ நேற்று முளைத்த ஒரு பொறியியல் கல்லூரியில் 'பேமெண்ட் ஸீட்' என்று நிலத்தை விற்று ஒரு லட்ச ரூபாய் கொடுத்துச் சேர்ந்தான். அவன் தந்தையிடம் அவர் அதுபற்றிப்

பேசும்போது குறிப்பிட்டார்.

"ஏனப்பா. உன் நிலம் நல்ல நிலம்.. அதை ஏன் விற்று உன் பிள்ளையை இஞ்சினியரிங் படிக்க அனுப்பற...? நீயே நல்ல விவசாயி. உன் தொழிலை அவன் தொடர்ந்து கவனிக்கலாமே..?" என்று பேச்சோடு சொன்னான்.

இதைக் கேட்ட அரசுவின் தந்தை வெகுண்டெழுந்தார்.

"என்ன அய்யரே இப்படிப் பேசற. நான்தான் படிக்காம பாழாப் போனேன். என் பிள்ளையும் அப்படியாகணும்கிறயா. உங்க பிள்ளைங்கதான் பெரிய படிப்பு படிக்கலாமா? நாங்க படிக்கக் கூடாதா. இல்ல முடியாதா உங்களுக்கு குழந்தைக் குட்டிங்க இல்ல. இப்ப எவ்வளவு பேர் கம்ப்யூட்டர் படிச்சிட்டு அமெரிக்கா போய் வேல பாக்கறாங்க தெரியுமா? உங்க புத்தி மாறாது. நீங்கதான் முன்னேறணும்; மத்தசாதிக்காரங்க மேல வரக் கூடாதுங்கறதுதான் உங்க எண்ணம்.." என்று ஆவேசமாகக் கத்த ஆரம்பித்துவிட்டார்.

அனந்த கிருஷ்ணன் தன் தவறை உணர்ந்து மௌனமாகத் திருப்பிவிட்டார். அந்த அப்பாவி விவசாயியிடம் 'பல இஞ்சினியர்கள் வேலையற்றுத் திரிகின்றனர். கம்ப்யூட்டர் படுத்துவிட்டது' என்று சொன்னால் புரியாது.

ஆனால், முத்துவின் தந்தை ஆசைப்படுவதில் நியாயம் இருக்கிறது. முத்து மிகவும் புத்திசாலிப் பையன். நல்ல மார்க் வாங்கி வருபவன்.

அவன் இஞ்சினியரிங் போவதில் பிரச்னை இராது. ஆனால், படிக்க வைக்க அவன் தந்தையிடமும் பணம் போதுமா என்பது சந்தேகம்தான். ஒரு வீடும், கொஞ்சம் நிலமும் இருந்தது. முத்துவுக்கு மேலே ஒரு பெண். அவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தாயிற்று. கும்பகோணத்தில் இருந்தாள். முத்துவுக்குக் கீழ் இன்னொரு பையன் இருக்கிறான். ஆறாவதோ ஏழாவதோ படிக்கிறான். முத்து அளவு சூடிகையில்லை. முத்துதான் படித்து குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும்.

சித்திரை மாதத்து அக்னி வெய்யில் வறுத்தெடுத்துப் புழுங்கிக் கொண்டிருந்தது.

அன்று மறு நாள் பிளஸ் டூ முடிவுகள் வெளியாக வேண்டும்.

அனந்த கிருஷ்ணன் தூக்கமும் இல்லாத விழிப்புமற்ற ஒரு சொப்பன அவஸ்தையில் இருந்தார்.

அவர் வீட்டுத் தொலைபேசி மணி ஒலித்தது.

போனை எடுத்த அவர் மனைவி, 'உங்களுக்குத்தான்' என்றார். வாங்கியைக் கையில் வாங்கிக் கொண்ட அனந்த கிருஷ்ணன். "ஆமாம்... நான் பூங்குளம் உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர்தான் பேசுகிறேன்." என்றார்.

ஒரு நிமிஷம் மௌனத்திற்குப் பின் அவர் முகம் மிகவும் பிரகாசமானது.

"ஆஹா. அப்படியா! என்ன சந்தோஷமான சமாசாரம். நிஜமாகவா? ரொம்ப புத்திசாலிப் பையன். நிச்சயம். கட்டாயம் வாங்க." என்றார் உரத்த குரலில்.

ஃபோனை வைத்துவிட்டு, "அம்புஜம். முத்து, இந்தத் தமிழ்நாட்டிலேயே பிளஸ்டூவில் முதலாவது மாணவனாகத் தேர்ச்சி பெற்று இருக்கிறானாம். எத்தனைச் சந்தோஷமான சமாசாரம். இதோ உடனே போய் அவனிடம் சொல்ல வேண்டும். பத்திரிகைக்காரங்க நாளைக்கு அவனைப் பார்க்க வருவாங்களாம். அவன் போட்டோ வேணுமாம். நம்ம ஊருக்கு எத்தனை பெருமை!" என்று ஏதேதோ பேசியபடி சட்டையை எடுத்து மாட்டியபடி ஓட்டமும் நடையுமாக முத்துவின் வீட்டை நோக்கி நடந்தார் அனந்த கிருஷ்ணன்.

எதிரில் சைக்கிளில் பத்து அடி தூரத்திலேயே அவர் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்த முத்து, சட்டென சைக்கிளை நிறுத்தி கீழே இறங்கினான்.

"அடடா.. உனக்கு நூறு ஆயுசு. உன்னைப் பார்க்கத்தான் வர்றேன். நீ தமிழ் நாட்டிலேயே முதலிடத்தில் பாஸ் பண்ணியிருக்கே முத்து." என்று கூவி அவனை நடுத் தெருவிலேயே கட்டிப் பிடித்துக் கொண்டார்.

"ஸார். நானே உங்களிடம் அன்று சொன்னதைப் பற்றிப் பேச வேண்டும்னுதான் வந்திட்டு இருந்தேன். வாங்க வீட்டுக்குப் போவோம்" என்று சைக்கிளைத் தள்ளியபடி நடந்தான் முத்து.

மறு நாள் பத்திரிகைகளிலும் தொலைக்காட்சியிலும் முத்துவின் முகமும் பேட்டியும் தனியிடத்தைப் பெற்று பலர் கவனத்தை ஈர்த்தது.

"மாநிலத்தில் முதலாவது இடத்தைப் பெற்றுத் தேர்ச்சி பெற்ற மாணவன் விவசா

---

"தமிழ் நாட்டை இரண்டா பிரிக்கலாம்னு சொல்றீங்களே... எதுக்கு?"

"எங்க கட்சில இரண்டு கோஷ்டி இருக்கு... இரண்டா பிரிச்சா இரண்டு கோஷ்டிக்கும் உதவுமே!"

– அம்பை தேவா



யம் பார்த்துக் கொண்டு கிராமத்தில் இருக்கப் போகிறார். பொறியியல், மருத்துவம் படிக்க ஆர்வமில்லை." என்று கொட்டை எழுத்துகளில் அலறியது.

முத்து தெளிவாகப் பேசியிருந்தான்.

"முதல் மார்க் வாங்கியவர்கள் இஞ்சினியரிங்கும், மருத்துவமும்தான் படிக்க வேண்டுமா என்ன? எனக்கு அதில் உடன்பாடு இல்லை. பூங்குளம் கிராமத்திலும் அதே போல் பல கிராமங்களிலிருந்தும் இளைஞர்கள் கூட்டம் கூட்டமாக பொறியியல் என்னும் மாயமானை விரட்டி விரட்டி வேட்டையாடிக் கொண்டிருக்கிறார்கள். நான் என் குடும்பத்திற்குச் சொந்தமான நிலத்தையும், வீட்டையும், மனிதர்களையும் துறந்து இந்த மாயமான் வேட்டையில் இறங்கத் தயாரில்லை. நான் தஞ்சை கல்லூரியில் கணிதம் படித்து பூங்குளம் பள்ளியிலேயே ஆசிரியராகப் பணியாற்ற ஆசைப்படுகிறேன். எங்கள் கிராமமும் எங்கள் நிலமும்தான் எனக்கு முக்கியம். புத்திசாலிப் பையன்கள் எல்லாம் கிராமத்தை விட்டும், நாட்டை விட்டும் வெளியேறி விட்டால் இந்த இயற்கை வளம் மிக்க கிராமங்கள் யாருக்கு? படிப்பவர்கள் படிக்கட்டும். ஆனால் ஆயிரத்தில் என்னைப் போல் ஓர் இளைஞனாவது சிந்தித்தானானால் இந்திய கிராமங்கள் பாழாகாது. விவசாயம் வீண் போகாது."

முத்துவின் பேச்சு பாராட்டு பெற்ற அளவு கண்டனத்தையும் கொண்டு வந்தது.

முத்துவின் தந்தை நல்லசிவம் அனந்த கிருஷ்ணனிடம் வேதனையுடன் பேசினார்.

"என்ன ஸார் இந்தப் பையன் இப்படிப் பேசறான். இவன் போய்ப் படிச்சு நாலு காசு சம்பாதிச்சாத்தானே எங்களுக்குப் பெருமை?" என்று அழும் குரலில் நூறாவது தடவையாகச் சொன்னார்.

"ஏம்ப்பா அப்படி நினைக்கிறீங்க? நாலு காசை விட நம்ம நிலமும், மனுஷங்களும் உறவும் பெரிசு இல்லயா? அதைவிட மனசு திருப்தின்னு ஒண்ணு உண்டில்லையா? நான் ஹெட் மாஸ்டர் ஸார் கிட்ட பேசி அவர் சம்மதத்தோடதான் பத்திரிகைக்காரங்க கிட்டே பேட்டி தந்தேன். இந்தியாவின் உயிர் கிராமங்கள்ள இருக்குன்னார் காந்தி . ஆனா இன்னிக்கி அந்த உயிரை மதிக்கிறோமா? இன்னிக்கு எவ்வளவு இஞ்சினியரிங் பட்டதாரிங்க வேலையில்லாம இருக்காங்க தெரியுமா? அந்த கும்பல்ல நானும் ஒருத்தனா இருக்கணுமா? இஞ்சினியரிங்கும், வெளிநாட்டு வேல வாய்ப்புந்தான் படித்த புத்திசாலி இளைஞர்களின் எதிர்காலமா? அரசியல் சாக்கடைன்னு சொல்லி படிச்சவங்க எல்லாம் ஒதுக்கினதாலதான் இன்னிக்கு அரசியல்ல மோசமான நிலைமை இருக்கு. அதைப் போல விவசாயமும் கிராமமும் வேண்டாம்னு படித்த இளைஞர்கள் கிளம்பினா கிராமங்கள்ளாம் யாருக்கு? எனக்கு இந்த பூங்குளம் கிராமம், அதன் மண், விவசாயம் இதுதான் முக்கியம். கம்ப்யூட்டரும், நவீன வசதிகளும் நாளுக்கு நாள் மாறிக்கிட்டு இருக்கும். பசியும், அரிசிச் சோறும் மாறாது. சோறு வேண்டாம்னு சொல்லுவமா? இந்த கிராமம் விவசாயத் துறையில் முதலிடம் பெற நான் பாடுபடப் போறேன். அதுதான் என் லட்சியம். என் எதிர்காலம் இந்த கிராமத்திலதான்."

அனந்த கிருஷ்ணன் மிகத் தெளிவாக உறுதியாகப் பேசும் அந்த இளைஞனை மிகுந்த வியப்புடன் பார்க்கிறார்.

தகப்பனுக்குப் பிரணவத்தின் அர்த்தத்தை உபதேசித்ததாக தமிழ்க் கடவுள் முருகனைப் பற்றிச் சொல்வார்கள். இந்த அளவு சூட்சும புத்தியை இந்தக் குழந்தைக்குக் கொடுத்தது யார்? அந்தக் கடவுள்தான்....!

"கவலைப்படாதே நல்லசிவம். உன் பையனாலே பள்ளிக் கூடத்துக்குப் பெருமை. இந்த ஊருக்கும் பெருமை. அவனால இந்தக் கிராமமும் இந்த மக்களும் எதிர்காலத்தில் நிச்சயம் பெருமை அடையப் போறாங்க..." என்கிறார் அனந்த கிருஷ்ணன் உணர்ச்சி பொங்க.

சித்திரை மாசத்து உஷ்ணத்தைத் தணிப்பது போல 'ஜோ'வென்று இடியும் மின்னலுமாக கோடை மழை பொழியத் தொடங்குகிறது. மண்வாசனை, மலரின் மணம் போல் பரவுகிறது.

"வாங்கப்பா, போலாம். எனக்கு இந்த மண் வாசனையோட மழையில நனையணும் போல இருக்கு. வரேன் ஸார்!" என்றபடி தந்தையைக் கைப் பிடித்து அழைத்துக் கொண்டு மழையில் நனைந்தபடி வீட்டை நோக்கி நடக்கிறான் முத்து...

நிஜமான புத்திசாலி இளைஞன். ○



Parthan
weds
Sruthi
on 14-11-2002

# 'மாயா' ஜால அழைப்பு!



Venkat
weds
Nandini
on 4-12-2002

ஆடி மாதம் ஓடிப்போய்விட்டது. திருமண சீஸன் தொடங்கிவிட்டது!

ஆரம்பம், அழைப்பிதழ்தானே? பிள்ளையார் படமும், திருப்பதி பாலாஜி படமும் விட்டால், திருமண அழைப் பிதழ் எல்லாமே கிட்டத்தட்ட ஒரே மாதிரிதான். விலையும் எக்கச்சக்கம்!

இங்கே நீங்கள் பார்க்கும் திருமண அழைப்பிதழ் எல்லாம், ஓவியர் 'மாயா' வரைந்தவை. இனிமேல்தான் விற்



Kannan
weds
Shanthi

பனைக்கு வரப்போகின்றன.

*75 வயதான ஓவியர் 'மாயா', பத்திரிகைகளுக்குக் கதைகளுக்குச் சித்திரம் வரைவதைக் கூட நிறுத்திவிட்டார். இப்போது திடீரென்று இந்த ஐடியா எப்படி வந்தது?*

''எல்லா வருடமும் புது வருட வாழ்த்து அட்டைகள் வாங்குவார் என் மகன். இந்த வருடம் வேண்டாமே என்று அவர் மனைவி சொல்லியிருந்தார். பிறகு, 'எல்லார்கிட்டே இருந்தும் நமக்கு வருகிறது. நாம் அனுப்பாமல் இருந்தால் நன்றாக இருக்குமா?' என்று முடிவு எடுக்கவே, கார்டு தேடி வாங்கக் கடைக்குப் போனார். எல்லாக் கடைகளிலும் புது வருட வாழ்த்து அட்டைகள் தீர்ந்து போயிருந்தன. திருமண அழைப்பிதழ் அட்டைகள் இருந்தன. "உள்ளே வாசகங்கள் எதுவும் இல்லாததால் இதை வாங்கிக் கொண்டு போங்கள்'' என்று கடைக்காரர் சொல்லவே அவற்றை வாங்கிப் பார்த்திருக்கிறார். அவற்றில் எதுவுமே நமது திருமணத்தோடு சம்பந்தமே இல்லாத மாதிரி தோன்றியது அவருக்கு. என்னிடம் வந்து, ''நம் திருமணச் சடங்குகளை விளக்கும் படங்களையே அழைப்பிதழ் மாதிரி அச்சிட்டால் என்ன?'' என்று கேட்டார்.உடனே, நம் திருமணச் சடங்குகளையே காட்சிகளாக்கி, படங்கள் வரைந்து அழைப்பிதழ்கள் தயாரித்தேன். ஹிந்து திருமணங்களிலேயே, பல சாதியினருக்கும் ஏற்ற மாதிரி வரைந்தேன். உடுப்பிக்காரர்கள் திருமணத்தில், மணமகன் ஒரு தடியை வைத்திருப்பதைக் கவனித்தேன். திருமணத்துக்குப் பிறகு தான் அந்தத் தடியை விடுவானாம்! (அப்புறம் மனைவி கைக்குப் போய்விடுமோ?) கிறிஸ்துவத் திருமண அழைப்பிதழில் அவர்களின் முக்கியச் சடங்கைக் காண்பித்தேன்'' என்கிறார் மாயா.



''தலைவர் கூடவே இரண்டு 'நர்ஸ்' இருக்காங்களே..ஏன்?''

''அவருக்கு டாக்டர் பட்டம் கொடுத்ததிலிருந்து ஒருமாதிரியாத்தான் நடந்துக்கறார்.''

— நெல்லைராஜ்

'சப்தபதி'யின் அர்த்தம் என்ன? தலையில் நுகத்தடியை வைப்பதன் பொருள் என்ன? காசி யாத்திரையின் உட்பொருள் என்ன? வாழ்க்கையில் உயர்வும் இருக்கும், தாழ்வும் இருக்கும் என்று காண்பிக்கும் ஊஞ்சல் சடங்கு – என்று ஒவ்வொன்றையும் விளக்கத்தோடு வெகு அழகாகத் தயாரித்திருக்கிறார் மாயா.

"இதில் ஸ்க்ரீன் பிரிண்ட்டிங், கம்ப்யூட்டர், ஆஃப்செட் பிரிண்ட்டிங், எம்போஸிங், கோல்டு ஃபாயிலிங் என்று நிறைய மெனக்கெட வேண்டும். அப்போதுதான் கார்டு முழுமையாகும்'' என்கிறார்.

ஆறு ரூபாய், எட்டு ரூபாய் விலையில் இந்த அழகான கார்டுகள் விற்பனைக்கு வரவிருக்கின்றன. சதாபிஷேகம், சஷ்டியப்தபூர்த்தி எல்லாவற்றுக்கும் பொருத்தமான கார்டுகள்.

கிடைக்கும் லாபத்தில் இருபத்தைந்து சதவிகிதம் மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளின் கல்விக் கூடங்களுக்கு நன்கொடையாக வழங்கப் போகிறாராம்.

"ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும், திருமணம் என்பது ஒரு திருப்புமுனை. அதைக் கொண்டாடும்போது, அதற்குப் பொருத்தமான அழைப்பிதழில் பதிவு செய்து வைக்க வேண்டாமா?'' என்கிறார் ஓவியர் 'மாயா'.

— சித்தார்த்

# ஸ்ரீ சுபம் திருமண ஆலயம்

உங்கள் வீட்டில் விரைவில் திருமண விழா நடைபெற வேண்டுமா?
உடனே இலவசமாக பதிவு செய்து கொள்ளுங்கள்

பிரமணாள் மற்றும் பிராமணாள் அல்லாத அனைத்து சமூகத்தினருடைய கல்யாண வரன்களுக்காக ஜாதகத்துடன் முழு விவரங்கள் 25.09.2002 வரை இலவசமாக பதிவு செய்யப்படும்

## ஸ்ரீ சுபம் திருமண ஆலயம்

143, (Old No.54) கே.எச்.ரோடு, அயனாவரம்,
சென்னை - 23. (நூர் ஓட்டல் பஸ் நிறுத்தம்.)

**நேரம் காலை 10 மணி முதல் மாலை 5 மணி வரை**

சென்னைக்கு வெளியே இருப்பவர்கள் தபால்தலை ஒட்டப்பட்ட கவருடன் முழு விவரங்கள் அனுப்பவும்

அமைப்பாளர்கள்
M.S.வரதராஜன் M.A., B.Ed.
V.கோபாலகிருஷ்ணன், ஆடிட்டர்

போன் :
044-6602719

அழகுமிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு



உங்களுக்காகவே
இயற்கையான
வழியில்...

# குணா
## கூந்தல் தைலம்



முடி நீண்டு அடர்த்தியாக வளர்வதுடன், முடி உதிர்தல், செம்பட்டை நிறம், பித்த நரை, தலை அரிப்பு, பொடுகு மற்றும் சொறிந்தால் செதில் உதிர்வதையும் தடுக்கிறது. சித்த மருத்துவ முறைப்படி தயாரிக்கப்பட்டது. எந்தவித பக்க விளைவுகளையும் ஏற்படுத்தாது. ஆண்கள் பெண்கள் அனைவருக்கும் ஏற்றது.



Mfrs:
***Agasthiar Pharmaceuticals***
Post Box No: 588, Salem - 636 005

சங்கரனிடம் போனது மட்டுமே ரேவதியால் சொல்ல முடிந்தது. பார்த்துப் பேசியதாய்ப் பொய் சொல்ல இயலவில்லை.

அவள் பேசாமல் இருந்தாள்.

"அதெல்லாம் சொல்ல முடியுங்களா தம்பி? இங்க நடந்ததைப் போய்ச் சொல்லியிருப்பாங்க. இந்த அம்மா விக்கி அழுதிருக்கும். அவரு பரிதாபப்பட்டிருப்பாரு. எதுனா வழி சொல்லிக் கொடுத்திருப்பாரு. சங்கரன் சாதாரண ஆளா? அவருக்குத் தெரியாத வக்கீலா? அவருக்குத் தெரியாத போலீஸா? மொத்த சென்னைப் பட்டணமே அவர்கிட்ட கைகட்டி நிக்குது. எங்க போய் நின்னாலும் எழுந்து கைகூப்பி வரவேற்கிறாங்க. அவரு ஒரு ஆளைப் பார்த்து உதவி செய்யுங்கன்னா செய்துடறாங்க. ஏன் விவரம் தெரியாம இந்தம்மாக்கிட்ட வேகமா பேசற. அந்தம்மா என்ன சொல்லிட முடியும்?"

"நீங்க சொல்லுங்க. என்னா தரணும்?"

"அவராண்ட பேசுங்க. இது பெரிய இடத்துக்குப் போயிடுச்சு. அதனாலே நான் பேசறதோ இவங்க பேசறதோ அவர் பேசறதோ நடக்காது. நீ வீட்டுக்குப் போயிட்டு வா. உடனே வராதே. ஒரு மாசம் கழிச்சு வா. ஏன்னு மறுபடியும் புரிஞ்சுக்கோ. நானும் காலி பண்றேன். அவரும் காலி பண்றாரு. ஆனா, வெறுமனே காலி பண்ணமாட்டோம். விக்கத்தானே போற. விக்கறவன்கிட்ட துட்டை வாங்கிக் கொடு. போ. முடிஞ்சு போச்சு."

நாடார் எழுந்து கதவைத் திறந்துவிட்டார். அவன் இறங்கி வெளியே போனான்.

தெருமுனையில் இருந்த ஜீப்பில் தாவி ஏறிக் கொண்டான். மற்றவர்களும் ஏறிக் கொள்ள அந்த ஜீப் சிறிப் பறந்தது.

நாடாரும், ரேவதியும் கீழிருந்தபடி அவன் போவதைப் பார்த்துவிட்டு உள்ளுக்குள் வந்தார்கள்.

"போங்கம்மா, எப்போ சங்கரன் பேரைச் சொன்னீங்களோ, அப்போ எல்லா விஷயமும் சரியாப் போயிடும். போங்க. மாடிக்குப் போங்க. அதெப்படி டப்புனு சங்கரன் பேரைச் சொன்னீங்க. எனக்குக் கூட ஐயரு சொன்னது மறந்து போச்சு.

ரேவதி திகைத்தாள்.

'எப்படிச் சொன்னோம்? ஏன் அவர் பெயரைச் சொன்னோம்' என்று யோசித்தாள்.

அவளுக்குத் தெரியவில்லை.

# மனம் உருகுதே

பாலகுமாரன்

நாடாருக்கு நன்றி சொல்லிவிட்டு மாடிக்குப் போனாள். புருஷனைப் பார்த்தாள்.

ராதாகிருஷ்ணன் ரேவதியை உற்றுப் பார்த்தார்.

'வா' என்று கைநீட்டிக் கூப்பிட்டார். மெல்ல ரேவதி புருஷனுக்கு அருகே வந்தாள். அவர் மீது சாய்ந்து கொண்டாள்.

ரேவதியை நன்றியோடு ராதாகிருஷ்ணன் அணைத்துக் கொண்டார்.

மனத்திலிருந்தும், வயிற்றிலிருந்தும்,




சங்கரன் பெரிய மனு ஷர்னா!"

நெஞ்சிலிருந்தும் ஒரு பெரிய பாரம் இறங்கியது.

"என்ன நடந்தது ரேவதி?"

"சங்கரன் காப்பாத்திட்டார்ன்னா."

"சங்கரனா, சங்கரன் வந்திருந்தாரா?"

"வரலை, நேரா வரலை. என் வாக்குலே வந்தார். சட்டுனு ஒரு வார்த்தை சொன் னேன். அவன் ஆடிப்போயிட்டான்.

"என்ன சொல்ற?"

"சங்கரன் இதுல ஈடுப்பட்டிருக்கார். அவருதான் போலீஸ்ல மனு கொடுக்கச் சொன்னார்னு டக்குனு சொன்னேன். 'அப்படியா...? அப்படியா. சங்கரனைத் தெரியுமா?'ன்னான். நாடார் உடனே ஆரம்பிச்சுட்டார். சங்கரன் சொல்லித்தான் போயிருப்பாங்க. சங்கரனுக்குத் தெரியாத

ஆளா? சங்கரனுக்குத் தெரியாத மனுஷனா? வீணா வந்து சண்டை போடாதே. கத்தாதே அப்படினுட்டார். அவன் என்ன காக வேணும்னு கேட்க ஆரம்பிச்சுட்டான். காலி பண்றது நிஜம். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ பண்ணிடுவோம். உண்டான காசைக் கொடுத்திடு. நீ விக்கத்தானே போற? விக்கறவன்கிட்டே வாங்கிக் கொடு அப்படின்னு சொல்லிட்டார். அவனும் சரின்னு போயிருக்கான். இப்போதைக்கு எந்தப் பிரச்னையுமில்லை. அவன் கூட்டிண்டு வந்த ஆளைப் பார்த்தேளா? உயரமும், அகலமுமா. எனக்கு வயிறே கலங்கிப் போச்சுன்னா."

"எனக்கும் ரேவதி. நானும் பயந்துட்டேன். கத்தி, போடா வெளியன்னு ஆத்திரத்துல சொல்லிட்டேனே தவிர உள்ளுக்குள்ள ஒரே குழப்பம். நாலஞ்சு தடவை பின் பக்கம் போயிட்டு வந்துட்டேன். கை காலெல்லாம் வெடவெடன்னு ஆடறது. மார் அடைச்சுக்கறது. சரியான தலைவலி. ஏண்டா... ஏண்டா இப்படிப் பண்றோம்னு உள்ளுக்குள்ள ரொம்ப கதறிட்டேன்."

"தெரிஞ்சது. உங்க மூஞ்சிய பார்த்தாலே, சோகம் அப்பிண்டு கறுத்துப் போய் மிகப் பெரிய கவலையில இருக்கேள்னு தெரிஞ்சுது. நல்ல வேளை. எதனால என் நாக்குல அப்படி வந்ததுன்னு தெரியலை. யார் மனுஷா இருக்கான்னு நினைச்சுண்டே கீழ இறங்கிவரபோது சட்டுனு அவர் பேர் தோணிச்சு. அவரைப் பார்க்கவேயில்லை. அவரோட பேசவேயில்லை. ஆனால் தெள்ளத் தெளிவா அவர் பேர் கண் முன்னாடி எழுத்தா நின்னுது. சங்கரன் அப்படின்னு ஆரம்பிச்சேன். அவன் பயந்துட்டான். நான் இப்போ சொல்றேன். இந்த இக்கட்டிலேர்ந்து நம்மள காப்பாத்தினது சங்கரன். சங்கரன் பேரைச் சொல்லாமலிருந்தால் இந்த வீட்ல அத்தனை சாமானையும் அவன் உடைச்சுட்டுப் போயிருப்பான்."

வாசற்பக்கம் சத்தம் கேட்டது. மணி ஒலித்தது.

அவர் பின் பக்கம் நகர்ந்து கொள்ள ரேவதி கதவு திறந்தாள்.

நாடார் உள்ளே நுழைந்தார்.

"ஏம்மா... இப்பம் வந்ததுல ஒரு பையன் எங்க ஊரைச் சேர்ந்தவன்தான். சரியான பொறுக்கி. என்னடா ஆளுங்கல்லாம் வந்திருக்கீங்க எதுக்குடா அப்படின்னு போனவனை மடக்கிக் கூப்பிட்டேன்.

ரத்த விளர் பண்ணம்னுதான் வந்தாங்களாம். அடிச்சா யாரும், அதுவும் பண்ண முடியாதுன்னு சொல்லத்தான் ட்ரை பண்ணாங்களாம். வெளிய போன்னு பத்து பேர் பார்க்க துரத்தினே இல்ல. ஆயிரம் பேர் பார்க்க உன்னை இழுத்துக்கிட்டுப் போவேன். என்ன பண்ண முடியும் அப்படிங்கறதுதான் திட்டமாம். இருபதாயிரம் ரூபா பேசி பதினைஞ்சாயிரம் ரூபா கொடுத்து இங்க வந்து இன்னொரு அஞ்சாயிரம் ரூபா கொடுத்திருக்கான். ஒண்ணும் பண்ணாமல் இருபதாயிரம் ரூபா செலவு பண்ணியிருக்கான். மடையன்!"

நாடார் சொல்லிவிட்டு வாய்விட்டுச் சிரித்தார்.

"சரி. எதுக்குச் சொல்ல வரேன்னா இனிமேயும் காலி பண்ணமாட்டேன், போடா, வெளியே அப்படின்னு மறந்து போயும் சொல்லிடாதீங்க. இது அவன் வீடு. நீங்க காலி பண்ண ஒத்துக்கிட்டீங்க. அதுக்கு நான் சாட்சி. சங்கரன் பேரையும் இழுத்துட்டீங்க. அவன் போய் சங்கரன் கிட்ட நிப்பான்.

"காலி பண்ண ஒத்துக்கிட்டாங்க ஸார். இன்னும் காலி பண்ணலைன்னு போய் நிப்பான். அதனால அதுக்கும் முன்னாடி சங்கரன் கிட்டே போய் என்ன ஏதுன்னு பேசிக்கோங்க. சங்கரன்கிட்ட இதுக்கு

> **"நூறாண்டு வாழ என்ன வழி" என்று ஒரு மேதையிடம் கேட்டார் ஒருவர். "எப்போதும் உழைத்துக் கொண்டே இருங்கள். எமன் வரும் போதெல்லாம் நீங்கள் ஏதாவது வேலை செய்து கொண்டிருந்தால் வேலை செய்பவரைத் தொந்தரவு செய்ய வேண்டாம் என்று போய் விடுவார்" என்றார் மேதை!**
>
> - வந்தவாசி பா. ஜெயக்குமார்.

முன்னாடி பேசியிருக்கிங்களா?"

"இல்லை" ரேவதி பதில் சொன்னாள்.

"போய்ப் பேசுங்கய்யா. அவர் பேரை இழுத்துட்டீங்க. அவருக்குத் தெரிய வேணாமா?"

"இன்னிக்குக் காலையில போனோம். இப்போ வேண்டாம் அப்புறம் வான்னுட்டாங்க."

"நாளைக்குப் போங்க."

அன்று இரவு ராதாகிருஷ்ணனும், ரேவதியும், குழந்தைகளும் அமைதியாகத் தூங்கினார்கள்.

மறு நாள் காலை விடியலில் எழுந்தார்கள். குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பி, வீடு பூட்டிக் கொண்டு சாவியை நாடாருடைய கடையில் மாட்டிவிட்டு புருஷனும், மனைவியும் சங்கரனின் வீட்டு வாசலுக்குப் போனார்கள்.

இந்த முறை வாசலிலேயே கைகூப்பி உள்ளே வரலாமா என்று கீழே இருக்கிற பெண்மணியை ராதாகிருஷ்ணன் கேட்டார்.

மேலேயிருந்து குரல் கேட்டது.

"வரச் சொல்லுங்கோ."

அது பெண் குரலாக இருந்தது. அவர்கள் படியேறினார்கள். வராண்டாவில் நின்றார்கள். ஹால் தெரிந்தது.

"ஓம் வாராஹி ஓம். உன்மத்த பைரவி பாதுகாப்யாம் நமஹ;



ஓம் வாராஹி ஓம். உன்மத்த பைரவி பாதுகாப்யாம் நமஹ... "

"உரக்கச் சொல்லுங்கோ.. ஓம் வாராஹி ஓம். உன்மத்த பைரவி பாதுகாப்யாம் நமஹ"

யாருக்கோ மந்திர உபதேசம் அங்கு நடந்து கொண்டிருந்தது.

சிவப்புத் துணியை போர்த்திக் கொண்டு தடிமனான ஒருவரும் ஒல்லியான ஒருவரும் தங்களை மூடிக் கொண்டு அவர் காதில் இவர் மந்திரம் சொல்ல அந்த மந்திர சப்தம், அமைதியான அந்த ஹாலில் எல்லா பக்கமும் எதிரொலித்தது.

உபதேசம் கேட்பவருக்குக் காது கேட்காது போலிருக்கிறது. எனவே, தடிமனாக உட்கார்ந்து கொண்டிருந்தவர் உரக்கச் சொன்னார்.

அவர்தான் சங்கரனாக இருக்க வேண்டுமென்று ரேவதிக்கும், ராதாகிருஷ்ணனுக்குத் தெரிந்தது.

மறுபடியும் முணுமுணுப்பாய் மந்திரம் சொல்லச் சொல்லி அவர் கேட்டுக் கொண்டிருந்தார். வேறு மந்திரங்கள் ஏதோ சொல்லச் சொல்லி அவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தார்.

ரேவதியும், ராதாகிருஷ்ணனும் சுற்றிப் பார்த்தார்கள்.

வீடு முழுவதும் விதானம் அமைத்தது போல வர்ணம் தீட்டப்பட்டிருந்தது. உட்காரும் இடத்தில் சுவருக்குப் பின்னே சிம்மாசனம்போல் வர்ணம் தீட்டப்பட்டு அதன்மீது 'ஓம்' என்று போட்டு ஆரஞ்சு சூரியன் தகதகத்துக் கொண்டிருந்தான். சுவரில் அங்கங்கே ஆள் உயரத்திற்கு 'குருப்யோ நமஹ' என்று வடமொழியிலும், ஆங்கிலத்திலும், தமிழிலும் எழுதப்பட்டிருந்தன. குஜராத்தியிலும், அதேவிதமான எழுத்துக்கள் இருந்தன. தெலுங்கிலும் அதே மாதிரி எழுதப்பட்டிருந்தது.

வீட்டில் நுழைந்தவர்கள் அந்த வார்த்தையைப் படிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் பளிச்சென்று கண்ணைப் பிடுங்குகிற விதமாய் அந்த எழுத்துக்கள் இருந்தன.

படியேறியதும் எதிரே மிகப் பெரிய வெங்கடாசலபதி படம் மாட்டப்பட்டிருந்தது. அவர் ஆசனத்திற்கு நேர் எதிரே ஹனுமார் சிலை ஒன்று இருந்தது. வலப்

பக்கம் முழங்கை உயரத்தில், பஞ்ச உலோகத்தில், மீனாட்சி சிலை பளபளப்பாக அமைந்திருந்தது. மீனாட்சிக்கு கொசுவம் வைத்தப் புடைவைபோட்டு, திலகமிட்டு மெல்லிய மலர் மாலைகள் சார்த்தி பாதத்திற்கு சந்தனக் காப்பு வைத்து கீழே கோலம் எழுதி அருகே சாளக்ராமம், மேரு போன்றவைகளை வைத்து அந்த ஹால் பூஜையறையாக மாற்றப்பட்டிருந்தது.

அவருடைய ஆசனத்தில் மான் தோல் இருந்தது. அவருக்கு அருகே இன்னொரு மரப் பலகை இருந்தது. அந்த மரப் பலகையில் ஒரு பெண்மணி உட்கார்ந்திருந்தார். எதிரே உள்ள மணைப் பலகையில் உபதேசம் கற்பவர் பட்டுத் துணிக்குள் ஒளிந்திருந்து கேட்டுக் கொண்டிருந்தார். சிவப்புப் பட்டை மெல்ல சங்கரன் நீக்கினார். எதிரே உள்ளவரின் உச்சந்தலையில் கைவைத்து ஆசிர்வதித்தார். உபதேசம் கேட்டவருக்கு, சங்கரனைவிட அதிகம் வயதிருக்கும். கிழவராக இருந்தார். எழுந்திருந்து சங்கரனை விழுந்து நமஸ்கரித்தார்.

சங்கரன் நிமிர்ந்து ரேவதியையும் ராதாகிருஷ்ணனையும் பார்த்தார்.

அந்தக் கண்களில் கனிவு இருந்தது. சிரிப்பு இருந்தது.

ராதாகிருஷ்ணனும் ரேவதியும் தங்களை அறியாமல் கைகூப்பினார்கள்.

சங்கரன் பதிலுக்குக் கைகூப்பினார். அந்தக் கைகூப்பலில் அன்பும், பணிவும், அக்கறையும், உண்மையும் தெரிந்தன.

ராதாகிருஷ்ணன் சட்டென்று நெகிழ்ந்து போனார்.

எத்தனை பேர் கைகூப்பியதும் ஆசிர்வதிக்கிறார்கள். எதுவும் தெரியாதவர்கள் எப்படி உடனே கர்வம் கொள்கிறார்கள். கண்களை உருட்டி வேகமாகப் பார்க்கிறார்கள். எல்லாம் தெரிந்ததாக ஏளனப் புன்னகை செய்கிறார்கள். ஐயனே... சங்கரா... இதுதான் உன் வழக்கமா? கும்பிட்டால் பதிலுக்குக் கும்பிடுவாயா? உன்னை ஆவலோடு பார்த்தால் கருணை பொங்கப் பார்ப்பாயா என்று உள்ளுக்குள் புலம்பினார்.

ரேவதிக்குத் திகைப்பு அள்ளிக் கொண்டிருந்தது.

(தொடரும்)



## வங்காள தாமரை!

'சன்' தொலைக் காட்சியில் ஒளிபரப் பாகும் 'ஆகாயத் தாமரை' தொடரின் கதை நூற்றாண்டு பழமையானது என்கிறார் இயக்குநர் ந.வீ.நடராஜன். இரவீந்திரநாத் தாகூர் எழுதிய 'சோக்கர் பாலி' என்கிற நாவல்தான் ஆகாயத் தாமரையாக மலர்ந்திருக்கிறது. தொடர் பெண்மையைப் பேசுவதால் பவதாரிணியிடம் இசைப்பொறுப்பை விட்டுவிட்டார்களாம்.



## கை கொடுத்த ரசிகர்!

'லக்' இல்லாமல் செத்துப் போன மோனல், கதாநாயகியாக நடித்த கடைசிப் படத்தின் பெயர் 'பெஸ்ட் ஆஃப் லக்!' படத்தின் இறுதிக் கட்டத்தில், பணம் கிடைக்காமல் தயாரிப்பாளர் தவிக்கவே, மோனலின் பரம ரசிகர் ஒருவர் மன முவந்து ஃபைனான்ஸ் செய்திருக்கிறாராம்!

- அஜய்

# ஆதிபகவனும் ஆயில் பெயிண்டும்!









• ராஜ்குமார்

**ந**வீன ஓவியங்களின் கருத்தும் சிந்தனையும் தளமும் நவீனமாகவே இருந்து வரும்வேளையில் பழைமையும் பெருமையும் வாய்ந்த திருக்குறளை நவீன ஓவியமாக வரைந்து வருகிறார் நெல்லையைச் சேர்ந்த ராஜ்குமார்.

"ஒருமுறை சென்னையில் பல்லவனில் போய்க் கொண்டிருந்தபோது என் பக்கத்திலிருந்த அயல்நாட்டுக்காரர் ஒருவர் பஸ்ஸில் எழுதப்பட்டிருந்த திருக்குறளைக் காட்டி, விளக்கம் கேட்டார். அப்போதுதான் மொழியின் பேதங்கள் எனக்குப் புரிந்தன. மொழியற்ற ஓவியத்தின் பாஷை மனிதர்களை இணைக்கும். 'அகர முதல எழுத்தெல்லாம்' என்கிற குறளுக்கான ஓவியத்தை 'அ' எனும் எழுத்தை மையப் படுத்தி உலகம் இயங்குவது போல் வரைந்துள்ளேன்" என்கிறார்.

ராஜ்குமாருக்குப் பெரிய கனவுகள் உள்ளன. சென்னையிலுள்ளது போல் ஒரு சோழ மண்டலத்தை நெல்லையில் உருவாக்க வேண்டும் என்பது எதிர்கால ஆசை .

சந்திப்பு : தமயந்தி





# ஆந்திராவில் ஆலோசனை!

நெசவாளர்கள் பிரச்னை இப்படி விஸ்வரூபம் எடுக்கும் என்று அம்மாவுக்கு மூன்று மாதங்கள் முன்பே தெரியுமாம். எப்படி? அவரது தொலைக்காட்சிக்காக 'தொகுதி உலா' என்ற நிகழ்ச்சி படம் பிடிக்கப்பட்டது. எதேச்சையாக, நெசவாளர்கள் ஆதிக்கம் இருக்கும் ஒன்றிரண்டு தொகுதிகளில்தான் முதல் கட்ட படப்பிடிப்பு நடந்ததாம். அப்போது நெசவாளர்கள் தங்கள் துயரத்தை, கொந்தளிப்புடன் வெளிப்படுத்தினார்களாம். அப்படிப் படம் பிடித்துக் கொண்டு வந்ததைப் போட்டுப் பார்த்தபோது அரசுமீது குற்றப் பட்டியல் வாசித்ததுபோல இருக்கவே, 'ஆட்சிக்கு வந்த இந்தக் குறுகிய காலத்துக்குள் நாமே நமது தொலைக்காட்சியில் இது போன்ற நிகழ்ச்சியைத் திரையிட்டால் சரியாக வருமா?' என்ற விவாதம் செய்து ஒதுக்கிவிட்டார்களாம். ஆனால் அதே படப்பதிவில் பாலாறு மணல் திருட்டைப் பற்றி மக்கள் சொன்ன குற்றச்சாட்டுக்களின் அடிப்படையில், மணல் உரிமம் பெற்றிருந்த தோழியின் உறவினர்களின் உரிமங்கள் ரத்து செய்யப்பட்டனவாம்.

அம்மாவின் மூன்று நாள் ஹைதராபாத் வாசம் எதற்காக? விரைவில், சுப்ரீம் கோர்ட்டில் டான்ஸி மற்றும் கொடைக்கானல் ஹோட்டல் வழக்கு அப்பீல்கள் விசாரணைக்கு வருகின்றன. அந்த வழக்குகளை எப்படிச் சந்திப்பது என்ற யுக்தி வகுக்கத்தான் ஆந்திர தலைநகர் பயணம் என்கிறது ஒரு தகவல். அம்மா சேம்பரின் தலைமை வழக்கறிஞர் கே.கே. வேணுகோபால். ஜோதி ஆகியோர் ஆலோசனை பெறப்பட்டதாம். இதற்கிடையில் அரசாங்க தரப்பும், குற்றம் சாட்டப்பட்டவர் தரப்பும் ஒரே பக்கம் இருக்கும் நிலையை சுப்ரீம் கோர்ட்டில் எடுத்து வைத்து அதற்கு ஏதேனும் நிவாரணம் சொல்ல வேண்டும் என்று கோரிக்கைவிட இருக்கிறதாம் தி.மு.க. தரப்பு.

இப்போதெல்லாம் ஸ்டாலின் சுற்றுப் பயணத்தில் படு பிஸி. செல்லும் இடங்களில் மக்கள் திரள்கிறார்களாம். சமீபத்தில் சிவகாசி தொகுதியில் (வைகோ தொகுதி) பல கூட்டங்களில் பேசினார் ஸ்டாலின். ஸ்டாலின் கூட்டங்களுக்கு மக்கள் திரள்வது குறித்து, போலீஸ் தகவல்கள் ஆளுங்கட்சியைப் பதற்றப்பட வைத்திருக்கின்றன. அவரை முடக்குவதற்கான வழிகள் ஆராயப்படுகின்றன. மேம்பால வழக்கில் இந்த மாதக்கடைசியில் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட இருக்கிறதாம்.

போயஸ் தோட்டத்து 'ராஜகுரு' வெறுப்பில் இருக்கிறாராம். வைகோ, நெடுமாறன் ஆகியோர் கைதைத் தொடர்ந்து கடுப்பாக இருந்த அவர், தஞ்சையில் தமிழ் தினப்பத்திரிகை அலுவலகத் தாக்குதலில் ஈடுபட்ட அவரது ஐந்து தோழர்களை போலீஸ் கைது செய்தவுடன் மேலும் கொதித்துப் போய்விட்டாராம். "சட்டமன்றத் தேர்தலில் மிகக் கஷ்டப்பட்டு கூட்டணி அமைத்து வெற்றி தேடிக் கொடுத்தேன். இதற்கு காட்டப்படும் நன்றி இதுதானா?" என்று பொருமுகிறாராம்.

— சஞ்சயன்

## காதில் விழுந்தவை:

# சருகு தாழி

இரா. கண்ணன்

**தா**த்தாவுடனான என் சிறுவயது அனுபவங்கள் நேர்மையற்றவையாகத்தான் இருந்திருக்கின்றன. 'தாத்தா' என்னும் தமிழ்ச் சொல் பொதுப்படையாக முதியார்களைக் குறிக்கும் பெயர்ச்சொல் என்றே நினைத்திருந்தேன். பின்னரே அது உயிர்த் தொடர்பான ஓர் உறவைக் குறிக்கும் முறைச்சொல் என்பதாக உணர்ந்தேன்!

தாத்தாவைப் பற்றி எழுதும் போது எங்கள் கிராமத்து மடம் சார்ந்த நினைவுகள் தவிர்க்க இயலாததாகிவிடுகின்றன.

**ஊ**ரின் வடகோடியில் பஜனை கோயிலையொட்டி ஊர்ப்பொது மடம் அமைந்திருந்தது. சதுரக் கற்களாலான காரைச் சுவர். பெரிய பெரிய உத்திரங்களும் சட்டங்களுமாய், செங்கல் குத்திய 'மட்டப்பா' கட்டடம். சுமை தாங்கி போல் கனமான தேக்கு நிலைகளும் வெண்கலப் பூண் இழைத்த உயரமான கதவுகளும் இன்றைய மதிப்பில் இலட்சங்களாய் விலை பெறும். நிலவுடைமைச் சமூகத்தின் அதிகாரி மையம். மடம் ஊரைப் பார்த்தாற் போல் தெற்காக இருக்க அதனோடு ஒட்டியிருந்த பஜனை கோயில் கிழக்கு பார்த்திருந்தது. இரண்டையும் இணைக்கும் விதமான நீண்ட 'ட' வடிவத் தாழ்வாரம்.

தாழ்வாரத்தின் கீழ்முனை கோவில் சார்ந்த பகுதி என்பதால், தூய்மையும் புனிதமும் விளங்கிற்று. கிராமத்துப் பெண்களின் படைப்பாற்றல், அழகிய கோலங்களாய்க் கலை வடிவம் பெற்று அங்கே தெய்வீகச் சூழல் கவிந்திருக்கும். மேற்கு முனையோ, கொச்சை நாற்றமெடுக்கும் முதியோர்களின் வாழ்விடமாய் மாறிப்போயிருந்தது. இம்முரண்பாட்டின் அடிப்படையிலேதான் அன்றைய முதியோர்களின் 'இருத்த'லை விளங்கிக் கொள்ள வேண்டியதிருக்கிறது.

பஜனை கோவிலில் வழங்கப்படும் புளியோதரையும் திருத்துழாயும் தீர்த்தமுமே முதியவர்களுக்கு காலை நேர ஆகாரம். மதியம் எங்கே சாப்பிடுவார்கள் என்றெல்லாம் எனக்குத் தெரியாது! ஆனால், மாலையாகி விட்டால் உயரமாய் ஒடுங்கிய தேகத்துடன் என் அப்பாவைப் போலவே ஏறு நெற்றியுடைய முதியவர் ஒருவர், எங்கள் வீட்டில் வந்து நிற்பார். நைந்து போன வேட்டி. மூக்குப்பொடி கறைகளுடன் மேல் துண்டு. பழுப்பேறிய வெண்தாடி. அவர் தெருவுக்குள் நுழைந்ததுமே எங்கள் வீட்டு நாய் மோப்பம் பிடித்துக் குரைக்கத் தொடங்கிவிடும். என் அம்மாவின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கும்!

முதியவர் நேராகத் தொழுவத்தில் நுழைந்து கவிழ்த்து வைத்திருக்கும் கும்பா மற்றும் குவளையை எடுத்து, தொட்டித் தண்ணீரில் கழுவி, வாய் கொப்பளிப்பார். பிறகு வீட்டிற்கும் தொழுவிற்கும் இடைப்பட்ட நடையில் கும்பாவை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விடுவார்.



முதியவர், குத்துக்காலிட்டு முழங்காலில் முகம் பதியுமாறு கண்கள் மூடி நெடுநேரம் தவமிருப்பார். என் தாயார் அவரைக் கடந்து போக நேர்கையில் எல்லாம் அர்ச்சனை செய்து விட்டுத் தான் போவார். கிழவர் சலனமற்றுக் கல்லாய்ச் சமைந்திருப்பார். அவரது தவ நிலையும் அம்மாவின் அர்ச்சனையும் எல்லையற்று நீடிக்கும் வேளையில் அப்பா இடைப்பட்டு அம்மாவைக் கடிந்து கொண்டாரென்றால் அன்று அவர்களுக்குள் பிணக்கு வந்த நாளாயிருக்கும்.

**அ**ப்பொழுதெல்லாம் கரிசல் பிரதேசத்தில் நெல்லரிசிப் பண்பாடு அரிதாகவே இருந்தது. நெல்லுச் சோறு மேட்டிமை



''தலைவரே! நூறு ஜோடிகளுக்கு இலவசத் திருமணம் பண்ணிவச்சது தப்பாப் போயிடுச்சு!''

''என்னாச்சு?''

''பிரசவமும் இலவசமா பார்த்துக் குடுங்கன்னு வந்து நிக்கறாங்க...!''

— அன்னூர் அருள்மூர்த்தி

---

யுடையதாகவும் வளமை சார்ந்த அடையாளமாகவும் கருதப்பட்டது. சாமை, வரகு, தினை, கம்பு, சோளம் போன்ற மண்ணின் விளைவுகளே பெரும்பான்மை மக்களின் உணவுப் பழக்கமாயிருந்தது. நெல்லுக்கு அடுத்தபடி நிலையில் சாமையும் வரகும்! கடைசிப் படி நிலையில் கம்பும் சோளமும்! கம்மஞ்சோறும் கருவாட்டுக் குழம்பும் கரிசல் பிரசித்தம்!

முதியவருக்கு கருவாட்டுக் குழம்பென்றால் உயிர்தான். ஆனால் அம்மாவோ ஊறுகாய் அளவுக்குத்தான் குழம்பை ஊற்றுவார். இரண்டு வாய்க்குக் கூட பற்றாதுதான். கிழவர் ஒன்றும் பேசமாட்டார். கிடைப்பதை ஏற்றுக் கொள்ளும் பெரிய மனசு அவருக்கு. மனம் நிறைந்த பூரிப்புடன் சாப்பிடத் தொடங்குவார்.

ஆட்காட்டி விரலால் கம்மஞ்சோற்றை விண்டு குழம்பில் பட்டதோ படவில்லையோ எனத் தொட்டு வாயிலிட்டு எச்சில் கூட்டி அமுதம் போல் ரசித்து உண்பார். விழுங்கும் போது, நாக்கு மேலண்ணத்தில் ஒட்டி விடுபடும் சொட்டாக்கு ஒலியும், இடுங்கிய கண்களில் தோன்றும் பரவசமும் அற்புதமான மெய்ப்பாடுகள்! துளியூண்டு கருவாட்டுக் குழம்பை கடைசி விள்ளல் வரைக்கும் பங்கிடு செய்யும் நேர்த்தி அரிதான கலைவடிவம். இதில் சிறப்பம்சம் என்னவெனில் கடைசி உருண்டைக்கு சற்று கூடுதலாகவே, குழம்பு மீந்திருக்குமாறு பார்த்துக் கொள்வதுதான்! அந்தக் கடைசி 'வாய்' அவருக்கு விசேடமானது. உணவுக்குப் பின் நீர் அருந்தமாட்டார் கருவாட்டுக் குழம்பின் சுவை நெடு நேரம் நாவிலே தங்கியிருக்க வேண்டும் என்ற விருப்பம்! நிறைந்த மனதாகச் சாப்பிட்டு முடிப்பார். 'ஜென் ம. மெடிட்டேசன்' என்பார்களே அதைப் போல் அவர் உண்ணும் அழகில் ஒரு தியானத் தன்மை நிறைந்திருந்ததாகவே இப்பொழுது தோன்றுகிறது.

பள்ளி விடுமுறை நாட்களில் எம் போன்ற சிறார்களுக்கு மடத்து முதியவர்களுடன் விளையாடுவதென்றால் அச்சுவெல்லம்தான்! அவர்களின் பொடி மட்டையில் நைசாக மிளகாய்ப் பொடி கலப்பது; தெருப் புழுதியை அள்ளி எறிவது, தடியை ஒளித்து வைப்பது என்று நிறையவே விளையாடியிருக்கிறோம். அந்த நிமிடத்தில் தாத்தாக்களுக்கு 'சுள்'ளென்று கோபம் வரும். மறு வினாடியில் எல்லாவற்றையும் மறந்து விடுவார்கள். அதுதான்! குழந்தைகளைப் போலத் தான்!

மடத்தில் அத்தனைக் கிழவர்கள் இருந்தாலும் உயரமாய் வற்றல் தேகத்துடன் கத்தி மூக்குக் கிழவர் ஒருவர் இருப்பாரே, அவரைக் கண்டால் எனக்குச் சுத்தமாகப் பிடிக்காது. பின்னே..! தினமும் சோற்றுக்கு எங்கள் வீட்டிற்கே வந்து நின்றால்? கேட்டால் அவர் என் அப்பாவைப் பெற்று, வளர்த்தவராம். அதுதானாம்! எனக்கு அப்பா தானே சம்பாதித்து சோறு போடுகிறார் அப்படியென்றால் முதியவருக்கு அவருடைய அப்பாதானே சோறு போடவேண்டும். என்னுடைய தர்க்கவியலான வாதத்திற்கு அப்பொழுது யாரும் பதில் சொல்லவில்லை!

ஆவணி மாதத்தில் மேல் காற்று ஓய்ந்து மழைக்கு கோப்பெடுக்கும் வேளையில் தாத்தா சட்டடியாகப் படுத்து விட்டார். மடத்திலேயிருந்து வீட்டுக்குக் கொண்டு வந்து போட்டார்கள். மார்புக் கூடு மட்டும் ஏறி இறங்கிக் கொண்டிருந்தது. விதைப்பு நேரத்தில் இப்படி இழுத்துக் கொண்டிருந்தால் வேலை கெட்டு விடுமே என்று அப்பாவுக்கும் அம்மாவுக்கும் கவலையாகிவிட்டது. என் கையால் கடைவாய்ப் பால் ஊற்றச் சொன்னார்கள். என்னவெல்லாமோ செய்தார்கள். எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை. ஒரு நாள் தாத்தாவுக்கு எண்ணெய் தேய்த்து பச்சைத் தண்ணீரில் குளிப்பாட்டினார்கள். அன்று இரவு தாத்தா செத்துப் போய்விட்டார்!

மறுபடியும் ஒரு முறை தாத்தாவைக்

# மலரொளி தேன் துளி!

● கல்கி வைரவிழா மலர் கண்களையும், மனத்தையும் ஒருசேர நிறைவு செய்தது. எழுத்தாளர்களை உயர்வாக மதித்து சுகி. சிவம் எழுதிய வேதவியாச விநாயக புராணம் கனகச்சிதம்.

க.நா. இராஜேஸ்வரன், ஈரோடு.

● ஓர் அறுபது ஆண்டுகால இலக்கிய உழைப்பின் தொகுப்பாய் மலர்ந்து இதயத்தைப் பரவசப்படுத்தி விட்டது.

த. சத்தியநாராயணன், அயன்புரம்

● பட்டை தீட்டிய வைர மலரொளி; எம்.எஸ். அமுத கீதம் திகட்டாத தேன் துளி!

எஸ். தனலட்சுமி, பெங்களூர்.

● இசை நாடா, மலர் எல்லாமே கல்கியின் தரத்திற்கு மேலும் மெருகு சேர்க்கிறது. 75 வயது கடந்த எனக்கு கல்கியிடம் ஒரு மோகம். அதுவும் அருள்வாக்கைத் தொடர்ந்து பிரசுரம் செய்யும் ஒரே பத்திரிகை என்று ஸ்ரீமுகத்தில் குறிப்பிட்டிருப்பது அனுகிரஹம்தான். ராஜாஜிக்கு அண்ணாதுரை எழுதிய கடிதம் மிகவும் ரம்யமாக இருக்கிறது.

டி.எஸ். குருமூர்த்தி, கும்பகோணம்.

● நல்ல படைப்புகளைக் கொண்டு 'கல்கி' தன்னை நிரூபித்து வருவது மகிழ்ச்சி தருகிறது.

சுப்ரபாரதிமணியன், திருப்பூர்.




● அறுபதாண்டு தமாஷ்களின் தொகுப்பு, படித்து மகிழத்தக்கதாக அமைந்திருந்தது. நிறைய ஓவியங்கள், கல்கியில் வெளியான சிறந்த கதைகள், பெரியவர் சதாசிவம், எம்.எஸ். படங்கள் அனைத்தும் கண்களையும் கருத்தையும் கவரும் வகையில் உள்ளன.

ஜனகன், சென்னை – 17

குளிப்பாட்டி புத்தாடை உடுத்தி பட்டா சாலையில் சாத்தி வைத்தார்கள் நெற்றியில் திருமண். கழுத்தில் செவ்வந்தி மாலை. தொங்கிய கைகளைச் சேர்த்து வைத்து வெற்றிலை பாக்கு. கால் மாட்டில் நிறை நாழி. அதில் கொத்தாய் பத்திக்குச்சி. சாவு வாசனை. பெண்கள் வட்டமாய் கட்டியழுதபடி ஆட்டு மந்தைக் குரலில் ஒப்பாரி வைத்தார்கள். அந்த மந்தையில் அம்மாவுமிருந்தார். விடிய விடிய பிரபந்தம் வாசிப்பு. பெரிய சாவு!

இன்று...?

அறிவுயுகம்...!

பழைமை அழிந்தது. ஊர்ப் பொது மடமும்தான்! சுவர்கள் வெடிப்புற்று பறவைகளிட்ட எச்சத்தில் அத்திச் செடிகள்... மடத்துத் தாழ்வாரம் முதியோர்களற்று வெறுமையாய்... பஜனை கோயிலில் நித்ய பூஜை ஒழிந்து வெகு நாட்களாயிற்று. புரட்டாசி மார்கழி மாத சனிக்கிழமைகளில் மட்டும் ஏதோ நடக்கின்றது. மாக்கோலமில்லை. புனிதமில்லை. தாழ்வாரத்தின் இரு முனைகளும் முரண்பாடின்றி புழுதி படிந்து சமச்சீர் தன்மையுடன்!

எல்லாம் நகரமயமாதலின் விளைவு!

இருக்கட்டும்! நகரத்திலே முதியோர்களுக்கென்று ஊர்ப் பொது மடங்கள் உண்டா? அவர்களுக்குப் போக்கிடம்?

முதியோர் இல்லங்கள்..!

பழைய அநாகரிகத்தின் புதிய வடிவம்!

அறிவுயுகம் அல்லவா?



# சிவகாமியின் சபதம்

ஐம்பத்து நான்காம் அத்தியாயம்

## சபை கலைந்தது

சபா மண்டபத்தில் ஏற்பட்ட கிளர்ச்சி ஒருவாறு அடங்கிச் சற்று அமைதி ஏற்பட்டதும் மகேந்திர பல்லவர் மேலும் தொடர்ந்து கூறலானார்:-

"சபையோர்களே! நீங்கள் சொல்கிறபடி பல்லவ சாம்ராஜ்யம் என் ஒருவனையே நம்பியிருப்பதாக நான் ஒத்துக் கொள்ளவில்லை. இதோ என் வீர மகன் மாமல்லன். பல்லவர் குலப் பெருமையை நிலை நாட்டுவதற்கு இருக்கிறான். ஆனாலும் வாதாபி மன்னனை நான் அவனுடைய படை வீட்டில் சந்தித்தது வெறும் சாகஸத்துக்காக அல்ல. புலிகேசியை நான் நேரில் பார்ப்பதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது. சற்று முன்னால் உங்களையெல்லாம் பெருங் கலக்கத்துக்கு ஆளாக்கிய நாகநந்தியடிகள் ஒன்பது மாதத்துக்கு முன்னால் நமது கோட்டைத் தளபதியிடம் ஒரு ஓலை கொடுத்துப் புலிகேசிக்கு அனுப்பியிருந்தார். ஆயனரிடம் சிற்பக் கலை கற்க வந்திருந்த இந்த வீர வாலிபர் அந்த ஓலையில் உள்ள செய்தி இன்னதென்று அறியாமல் எடுத்துக்கொண்டு போனார். வழியில் இவரிடமிருந்து அந்த ஓலையை நான் வாங்கிக் கொண்டு புலிகேசியின் கூடாரத்துக்குச் சென்றேன். ஆனால், நான் புலிகேசியிடம் கொடுத்தது நாகநந்தியின் ஓலை அல்ல. நான் மாற்றி எழுதிய ஓலையைக் கொடுத்தேன். அதன் பயனாகவும், நமது வீர சேனாதிபதி கலிப்பகையாரின் போர்த் திறமை காரணமாகவுந்தான் வாதாபி சைனியத்தை வட பெண்ணைக் கரையில் எட்டு மாதத்துக்கு மேல் நிறுத்தி வைக்க முடிந்தது."

**அமரர் கல்கி**

"பிரபு! நாகநந்தியின் ஓலையில் என்ன எழுதியிருந்ததோ?" என்று முதன்மந்திரி சாரங்கதேவர் கேட்டார்.

"காஞ்சி நகரைப் போன்ற பாதுகாப்பு அற்ற நகரம் வேறு இருக்க முடியாதென்றும் வாதாபி சைனியம் வழியில் எங்கும் தங்காமல் நேரே காஞ்சிக்கு வந்து சேர வேண்டுமென்றும், மூன்றே நாளில் காஞ்சியைப் பிடித்து விடலாம் என்றும் எழுதியிருந்தது...!"

சபையின் நாலா பக்கங்களிலிருந்தும் அப்போது கோப கர்ஜனை முழக்கங்கள் ஒருமிக்க எழுந்து ஒலி செய்தன.

சக்கரவர்த்தி கையமர்த்திக் கூறினார்: "நாகநந்தி அச் சமயம் எழுதியிருந்தது முற்றும் உண்மை. அப்போது வாதாபியின் பெருஞ் சைனியம் நேரே காஞ்சிக்கு வந்திருந்தால் மூன்று நாளைக்கு மேல் நாம் எதிர்த்து நின்றிருக்க முடியாது. சளுக்கரின் பதினையாயிரம் போர் யானைகளிலே ஒரு பதினைந்து யானைகள் நமது கோட்டைக் கதவுகளையெல்லாம் தகர்த்தெறிந்திருக்கும். அப்போது வைஜயந்தி பட்டணத்துக்கு நேர்ந்த கதி காஞ்சிக்கும் நேர்ந்திருக்கும். சபையோர்களே! கதம்பகுல மன்னர்கள் வாழையடி வாழையாக வாழ்ந்து அரசு செலுத்திய வைஜயந்தி பட்டணம் இருந்த இடத்திலே இப்போது கரியும் சாம்பலும் மேடிட்டிருப்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?"

சபையில் மறுபடியும் வியப்பொலிகளும் இரக்கக் குரல்களும் எழுந்தன. மகேந்திர பல்லவர் மீண்டும் தொடர்ந்து சொன்னார்: "இந்தக் காஞ்சி மாநகரம் உலகம் உய்ய அவதரித்த புத்த பகவானுடைய காலத்திலிருந்து ஆயிரம் வருஷமாகச் சீரும் சிறப்பும் பெற்று விளங்குகிறது. 'கல்வியிற் கரையிலாத காஞ்சி மாநகரம்' என்று நமது புலவர் பெருமான் திருநாவுக்கரசரால் பாடப் பெற்ற இந்தத் திருநகரின் புகழானது சீன தேசம், சாவகத் தீவு, யவனர் நாடு, ரோமாபுரி ஆகிய தூர தூர தேசங்களிலெல்லாம் நெடுங் காலமாகப் பரவியிருக்கிறது. இப்பேர்ப்பட்ட நகரம் என்னுடைய காலத்தில் அழிந்தது என்னும் அபகீர்த்தியை நான் அடைய விரும்பவில்லை. இந்தக் காஞ்சி நகரைப் பாதுகாப்பதுதான் என்னுடைய முதற் கடமை. அந்தக் கடமையை நிறைவேற்றுவதற்கு நீங்கள் என்னுடன் ஒத்துழைப்பீர்களா?"

இவ்வாறு சக்கரவர்த்தி கேட்டபோது, சபையினர் ஒருமுகமாக, "அப்படியே! அப்படியே!" என்று கோஷித்தார்கள்.

சக்கரவர்த்தி மறுபடியும் கையமர்த்தி! "இந்த யுத்தம் நேர்ந்ததற்கு மூல காரணம் இன்னதென்று உங்களுக்குத் தெரிவித்தேன். இது என்னால் நேர்ந்த யுத்தம், ஆகையால், என் போக்கில் இதை நடத்தி முடிப்பதற்கு உங்களிடம் அனுமதி கோருகிறேன்" என்றார்.

"அப்படியே!" என்று மீண்டும் சபையில் கோஷம் எழுந்தது.

பின்னர் மகேந்திரர், சபையில் பின் வரிசைகளில் இருந்த தென் பல்லவ நாட்டின் கோட்டத் தலைவர்களைக் குறிப்பாகப் பார்த்து, "கோட்டைக்குள்ளே இருக்கப் போகும் எங்களைக் காட்டிலும் கோட்டைக்கு வெளியில் கிராமங்களில் இருக்க வேண்டிய நீங்கள்தான் அதிகமான கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகும்படியிருக்கும். காஞ்சியைக் காப்பாற்றுவதற்காக எல்லாக் கஷ்டங்களையும் பொறுத்துக் கொள்ள நீங்கள் சித்தமாயிருக்கிறீர்களா?" என்று கேட்க, "சித்தம், சித்தம்!" என்று கோட்டத் தலைவர்கள் ஒரே குரலில் முழங்கினார்கள்.

"நாளைச் சூரியோதயத்துக்குள்ளே வாதாபி சைனியம் நமது கோட்டையை நெருங்கிவிடும். அதற்கு முன்னால்

நீங்கள் எல்லாரும் நகரை விட்டு, வெளியேறி விட வேண்டும். அவரவர்களுடைய ஊருக்கு விரைந்து செல்ல வேண்டும். காஞ்சி நகர் முற்றுகைக்கு உள்ளாகியிருக்கும்போது உங்களுக்கும் கோட்டைக்குள்ளேயிருக்கும் எங்களுக்கும் எவ்விதப் போக்குவரவும் இராது. கோட்டையைக் கைப்பற்ற முயன்ற புலிகேசி தோல்வியடையும்போது அவனுடைய கோபத்தையெல்லாம் சுற்றிலுமுள்ள நாட்டுப்புறங்களின் மீது காட்டுவான். அதற்கெல்லாம் நீங்கள் ஆயத்தமாயிருக்க வேண்டும். கோட்டத் தலைவர்களே! நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். காஞ்சியைக் காப்பாற்றுவதற்காக நீங்கள் சகலவிதமான தியாகங்களுக்கும் சித்தமாயிருக்கிறீர்களா? வாதாபி அரக்கர் படையினால் நேரக்கூடிய கொடுமைகளையெல்லாம் பொறுத்துக் கொள்வீர்களா? நாட்டில் கொடிய பஞ்சம் ஏற்பட்டு மக்கள் பட்டினி கிடந்து மடிய நேர்ந்தாலும் நீங்கள் மனம் கலங்காமல் இருப்பீர்களா?'' என்று சக்கரவர்த்தி கம்பீரமான குரலில் கேட்க, செஞ்சிக் கோட்டத் தலைவன் சடையப்ப சிங்கன் எழுந்து நின்று கூறினான்:

''பல்லவேந்திரா! யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. பல்லவ இராஜ்யத்தின் மணிமகுடமாக விளங்குவது காஞ்சி மாநகரம். காஞ்சி அழிந்தால் பிறகு யார் உயிரோடிருந்து என்ன பயன்? காஞ்சி நகரைக் காப்பாற்றுவதற்காக எந்த விதமான தியாகங்களைச் செய்யவும் நாங்கள் சித்தமாயிருக்கிறோம். தங்களுடைய சித்தம் எதுவோ அதன்படி நடந்து கொள்கிறோம். நான் கூறியது தான் இங்கேயுள்ள எல்லோருடைய அபிப்பிராயமும்!''

''ஆம்! ஆம்!'' என்று கோட்டத் தலைவர்கள் அனைவரும் ஏகமனதாக ஆமோதித்தார்கள்.



ச் சமயத்தில் சபா மண்டபத்தின் வாசற் புறத்திலிருந்து தூதன் ஒருவன் வந்தான். அவன் சக்கரவர்த்தியை நெருங்கிப் பணிந்துவிட்டு, கிழக்குத் திசையில் ஒரு பெரும் புழுதிப் படலம் தெரிகிறதென்றும், கடல் புரண்டு வருவது போன்ற பெரு முழக்கம் கேட்கிறது என்றும் தெரியப்படுத்தினான்.

மகேந்திரர், இடிமுழக்கம் போன்ற குரலில், ''சபையோர்களே! வாதாபிச் சைனியம் வந்துவிட்டது! நம்மில் ஒவ்வொருவரும் தம் வீர தீர சாகஸங்களைக் காரியத்தில் காட்ட வேண்டிய சமயமும் வந்துவிட்டது. அமைச்சர்களே! மந்திரிகளே! இத்துடன் இன்று சபை கலைகிறது.

நாளை முதல் முற்றுகை நீடித்திருக்கும் வரையில் ஒவ்வொரு நாள் இரவும் இரண்டாம் ஜாமத்தில் இங்கே மந்திராலோசனை சபை கூடும். இப்போது போய் அவரவர்களுடைய காரியங்களைப் பாருங்கள்!'' என்று கூறியதும், அமைச்சர்களும் மந்திரிமார்களும் துரிதமாக வெளியேறினார்கள்.

''கோட்டத் தலைவர்களே! நீங்கள் சற்றுமுன் கொடுத்த வாக்குறுதியினால் மிக்க சந்தோஷம் அடைந்தேன். அந்த வாக்குறுதியை மட்டும் நீங்கள் நிறைவேற்றி வைத்தால் புலிகேசியைக் கட்டாயம் வென்று ஜயக் கொடி நாட்டுவேன்'' என்று கூறி, தளபதி பரஞ்சோதியைப் பார்த்து, ''தளபதி! இவர்களைத் தெற்குக் கோட்டை வாசலுக்கு அழைத்துக் கொண்டு போங்கள்! இவர்கள் அகழியைத் தாண்டிச் சென்றதும், பாலத்தை உடைத்து எறிந்து விட வேண்டும். மற்றபடி கோட்டைப் பாதுகாப்புச் சம்பந்தமாக நாம் தீர்மானித்தபடி காரியங்கள் செய்கிறீர்கள், அல்லவா?'' என்று கேட்க, ''ஆம், பிரபு! தெற்கு வாசலைத் தவிர மற்ற மூன்று வாசல்களையும் முழுதும் அடைத்தாகி விட்டது. பாலங்களையும் தகர்த்தாகி விட்டது. மதில் சுவரின் மேல் வரிசையாகப் பதினாயிரம் வீரர்கள் வேலும் கையுமாய் ஆயத்தமாயிருக்கிறார்கள்!'' என்றார் தளபதி பரஞ்சோதி.

பரஞ்சோதியும் கோட்டத் தலைவர்களும் சென்ற பிறகு சபா மண்டபத்தில் சக்கரவர்த்தியும் மாமல்லரும் மட்டும் தனித்திருந்தார்கள். மாமல்லரின் முகம் உற்சாகம் இன்றி வாட்டமுற்றிருந்தது. சக்கரவர்த்தி மாமல்லர் அருகிலே சென்று அவருடைய தோளின் மீது கையை வைத்து, "மாமல்லா! இந்த யுத்தத்தை என் போக்கிலேயே நடத்த எனக்கு நீயும் அனுமதி கொடுக்கிறாயல்லவா?" என்று கேட்டார்.

"அப்பா! என்னை ஏன் கேட்கிறீர்கள்? உங்கள் விருப்பம் எதுவோ அதுவே எனக்கும் சம்மதம்!" என்றார் மாமல்லர்.

"சந்தோஷம், குமாரா! அரண்மனைக்குப் போய் உன் தாயாரிடம் நான் பத்திரமாய் வந்து சேர்ந்து விட்டதைச் சொல்லு. பொழுது விடிவதற்குள் இன்னும் ஒரு முக்கியமான காரியம் நான் செய்ய வேண்டியிருக்கிறது. அதையும் முடித்துவிட்டு அரண்மனைக்கு வந்து சேருகிறேன்" என்று கூற, மாமல்லர் அந்தப்புரத்தை நோக்கிச் சென்றார். சக்கரவர்த்தியோ அரண்மனை வாசலில் ஆயத்தமாய் நின்ற குதிரை மீதேறி இராஜ விஹாரத்தை நோக்கி விரைந்தார்.

## ஐம்பத்து ஐந்தாம் அத்தியாயம்

# முற்றுகை தொடங்கியது

மறுநாள் சூரியோதயம் ஆகும் சமயத்தில் கமலி தன்னுடைய வீட்டுத் திண்ணையில் கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தாள். இரவெல்லாம் கண் விழித்தபடியாலும் கண்ணீர் விட்டபடியாலும் அவளுடைய கண்கள் வீங்கியிருந்தன.

கண்ணபிரான் தகப்பனார் அவள் அருகில் உட்கார்ந்து ஆறுதல் மொழிகள் சொல்லிக்கொண்டிருந்தார்.

முதல்நாள் சாயங்காலம் குமார சக்கரவர்த்தி திரும்பி வந்த செய்தி கிடைத்தவுடனேயே கண்ணபிரானும் அவருடனே திரும்பி வந்திருப்பான் என்று கமலி எதிர்பார்த்தாள். புள்ளலூர்ப் போரில் வெற்றி மாலை சூடிய வீரரை வரவேற்க நகரமாந்தரெல்லாம் திரண்டு போன போது கண்ணபிரானின் தந்தை தாம் போய்க் கண்ணனை அழைத்து வருவதாகச் சொல்லி விட்டுப் போனார். இரவு வெகு நேரம் கழித்து அவர் திரும்பி வந்து, மாமல்லருடன் கண்ணன் வரவில்லை என்னும் செய்தியைத் தெரிவித்தார்.

காஞ்சி நகரில் யாருமே அன்றிரவு தூங்கவில்லையாதலால், மூன்றாம் ஜாமத்தில் சக்கரவர்த்தியும் திரும்பி வந்து விட்ட விவரம் கிடைத்தது. நாலாம் ஜாமத்தில் வாதாபிப் படைகள் கோட்டைக்குச் சமீபத்தில் வந்து விட்ட செய்தியும், கோட்டை வாசல்கள் அடைக்கப்பட்டுப் பாலங்கள் தகர்க்கப்படும் செய்தியும் கிடைத்தன.

ஆகவே, இனிமேல் கண்ணபிரான் கோட்டைக்குள்ளே வந்து சேருவதற்கே இடமில்லையென்று ஏற்பட்டது.

அதனாலேதான் கமலி துயரக் கடலில் ஆழ்ந்திருக்க, கண்ணனுடைய தந்தை அவளுக்கு ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்தார்.

அந்தச் சமயத்தில் திடீரென்று சாக்ஷாத் கண்ணனே வீட்டு வாசலில் வந்து நின்றால், அவர்களுக்கு எப்படியிருந்திருக்கும்?

கமலி சட்டென்று எழுந்து, "கண்ணா!" என்று அலறிக்கொண்டு ஓடிப் போய் அவனைத் தழுவிக் கொள்ள எண்ணி

யவள், கண்ணனுக்குப் பின்னால் சக்கரவர்த்திப் பெருமான் குதிரையில் வருவது கண்டு நாணமும் திகைப்பும் அடைந்து நின்றாள்.

"கமலி! கண்ணனைக் கொண்டு வந்து சேர்த்துவிட்டேன். இனிமேல் அவனை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்வது உன்னுடைய பொறுப்பு!" என்று சக்கரவர்த்தி புன்னகையுடன் கூறினார். பிறகு, "உன்னுடைய சௌக்கியத்தைப் பற்றிச் சிவகாமி ரொம்ப விசாரித்தாள், அம்மா! உனக்கு ஆண் குழந்தை பிறந்தால், உடனே சொல்லியனுப்பும்படி கூறினாள்" என்று சொல்லிக் கொண்டே சக்கரவர்த்தி குதிரையைச் செலுத்திக்கொண்டு போனார்.

சக்கரவர்த்தியின் பேச்சினால் வெட்கமடைந்த கமலி கண்ணபிரானைக் கடைக் கண்ணால் பார்த்துக்கொண்டே வீட்டிற்குள் சென்றாள். கண்ணபிரான் தந்தைக்கு முகமன் கூறி விட்டுக் கமலியைத் தொடர்ந்து உள்ளே சென்றான்.

"இதென்ன கமலி! நான் வந்ததில் உனக்குச் சந்தோஷம் இல்லையா! என்னைத் திரும்பிக் கூடப் பாராமல் உள்ளே வந்து விட்டாயே! ஒருவேளை கண் தெரியவில்லையா?" என்று கண்ணபிரான் கேட்க, கமலி "ஆமாம்; கண் தெரியவில்லைதான்! இரவெல்லாம் அழுது வீங்கிப் போய்விட்டது" என்றாள்.

"ஐயோ! ஏன் அழுதாய்?" என்று சொல்லிக்கொண்டு, கண்ணபிரான் அவள் அருகே நெருங்க, கமலி அவனுடைய கையை உதறி, "இந்த அருமையெல்லாம் நேற்று எங்கே போய்விட்டது? நேற்றிரவே ஏன் வரவில்லை?" என்று கேட்டாள்.

"நேற்றிரவே ஏன் வரவில்லையா? எனக்கும் உனக்கும் மத்தியில் ஒரு பெரிய அகழியும் முதலைகளும் ஒரு பெரிய மதிற் சுவரும் இருந்தபடியாலேதான்" என்றான் கண்ணன்.

"அப்படியா? நீ இரவெல்லாம் கோட்டைக்கு வெளியிலா இருந்தாய்? அகழிப் பாலங்களை எல்லாம் இரவுக்கிரவே உடைத்து விட்டார்களாமே. நீ எப்படி உள்ளே வந்தாய்? நீ புறப்பட்டது முதல் நடந்ததையெல்லாம் விவரமாகச் சொல்" என்று கமலி பரபரப்புடன் கேட்டாள்.

"கமலி! நான் என்னத்தை என்று சொல்ல! நான் பிறந்த கதையைச் சொல்லவா, வளர்ந்த கதையைச் சொல்லவா? புள்ளலூர்ப் போர்க்களத்துக்குப் போன கதையைச் சொல்லவா? வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடியதைச் சொல்லவா? மாமல்லர் ஏற வேண்டிய ரதத்தில் புத்த பிக்ஷுவை ஏற்றிக்கொண்டு வந்ததைச் சொல்லவா? கோட்டைக்கு வெளியே ராத்திரி எல்லாம் அலைந்து திரிந்ததைச் சொல்லவா?" என்றான் கண்ணன். பிறகு தான் காஞ்சியிலிருந்து கிளம்பியது முதல் நடந்த அதிசயமான சம்பவங்களையெல்லாம் விவரமாகக் கூறினான்.

வராக நதிக்கரையில் புத்த பிக்ஷுவை ரதத்தில் ஏற்றிக்கொண்டு புறப்பட்ட பிறகு நடந்த சம்பவங்களைப் பற்றிக் கண்ணபிரான் கூறிய வரலாறு பின்வருமாறு:

குதிரைகளைக் கண்ணபிரான் எவ்வளவு வேகமாகத் துரத்திய போதிலும் புத்த பிக்ஷுவுக்குப் போதவில்லை. மேலும் மேலும் அவசரப்படுத்தினார். வழியில் இரண்டு இடத்தில் குதிரைகளை மாற்றிக் கொண்டு, அஸ்தமித்து ஒரு நாழிகைக்குப் பிறகு காஞ்சிக் கோட்டையின் தெற்கு வாசலை அடைந்தார்கள்.

பிறகு, புத்த பிக்ஷு சொன்னபடி அகழி ஓரமான சாலையின் வழியாகக் கண்ணபிரான் ரதத்தைச் செலுத்திக் கொண்டு போனான். கொஞ்ச தூரம் போனதும் பிக்ஷு ரதத்திலிருந்து இறங்கிக் காட்டுக்குள் நுழைந்து போனார். சற்று நேரத்துக்கெல்லாம் அகழியில் படகு செல்லும் சப்தம் கேட்கவே, கண்ணபிரான் அந்தத் திசையில் கூர்ந்து நோக்கினான். அப்போதுதான் கீழ் வானத்தில் சந்திரன் உதயமாகியிருந்தது. நீண்டு பரந்த மர நிழல்களுக்கு மத்தியில் ஆங்காங்கு ஊடுருவி வந்த நிலாக்

கிரணங்களின் சஞ்சல ஒளியில், அகழியில் ஒரு படகு போவதும் அதில் இரண்டு பிக்ஷுக்கள் இருப்பதும் கண்ணபிரானுக்குத் தெரிந்தன. படகு அக்கரைக்குச் சென்றதும் இருவரும் இறங்கினார்கள். கோட்டை மதிலின் சுவரோரமாகச் சென்றார்கள். திடீரென்று இருவரும் மாயமாக மறைந்தார்கள்.

கண்ணபிரான் நெடுநேரம் வரை அங்கேயே காத்திருந்தான். என்ன செய்கிறதென்று அவனுக்குப் புரியவில்லை. 'அவர்கள் எப்படி மறைந்திருப்பார்கள்?' என்று மூளையைச் செலுத்தித் தீவிரமாக யோசனை செய்தான். 'ஒருவேளை கோட்டைச் சுவரில் இரகசிய வழி இருக்குமோ' என்ற எண்ணம் தோன்றியதும் அவனுடைய உள்ளம் கலங்கியது. புத்த பிக்ஷு தன்னை அங்கேயே இருக்கச் சொல்லியிருப்பதால் எப்படியும் திரும்பி வருவாரென்றும், அப்போது இரகசியத்தைக் கண்டுபிடிக்கலாமென்றும், எண்ணிக் கோட்டைச் சுவரில் அவர்கள் மறைந்த இடத்தில் வைத்த கண்ணை வாங்காமல் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். எப்படியோ அவனையறியாமல் தூக்கம் வந்து கண்ணயர்ந்துவிட்டான். திடீரென்று அவன் கண் விழித்தபோது, தூரத்தில் கடல் குமுறிப் புரண்டெழுந்து வருவது போன்ற பயங்கரமான சப்தம் கேட்டது. முன்னொரு சமயம் ஏரி உடைத்துக்கொண்டு வெள்ளம் வந்த சப்தத்தை அவன் கேட்டிருக்கிறபடியால், மிக்க பீதியடைந்தவனாய், பரபரப்புடன் ஒரு மரத்தின் மேல் ஏறிச் சப்தம் வந்த திசையை நோக்கினான். வெகு தூரத்தில் வெண்ணிலாவின் ஒளியில் யானைகளும், குதிரைகளும், குடைகளும், கொடிகளும், வேல்களும் வாள்களுமாய்த் திரண்டு வந்த சேனா சமுத்திரத்தைக் கண்டான். வாதாபி சைனியந்தான் அது என்று தெரிந்துகொண்டு, எப்படியாவது கோட்டைக்குள் புகுந்துவிட வேண்டும் என்று தீர்மானித்து ரதத்தை அவசரமாகச் செலுத்திக் கொண்டு தெற்குக் கோட்டை வாசலை அணுகினான். கண்ணபிரான் சப்தம் போட்டுக் கோட்டைக் காவலாளிகளை அழைத்ததில் ஒன்றும் பலன் இல்லை. சற்று நேரம் அங்கேயே தயங்கி நின்ற பிறகு ஒரு யோசனை உதித்தது. 'புத்த பிக்ஷுக்கள் புகுந்த இரகசிய வழி ஒருவேளை தேடினால் கிடைக்கும்! அதன் வழியாய்க் கோட்டைக்குள் போய் விடலாம்' என்ற ஆசையுடன் திரும்பவும் அதே இடத்துக்கு வந்து சேர்ந்தான். அகழியை எப்படிக் கடப்பது என்ற கேள்வி ஏற்பட்டது. நீந்திப் போகலாம் என்று நினைத்ததும், அகழியில் நூற்றுக்கணக்கான முதலைகள் இருப்பது நினைவு வந்து கதி கலங்கிற்று. இதற்குள்ளாகப் படைகள் வரும் முழக்கம் இன்னும் நெருங்கிக் கேட்கலாயிற்று.

'முதலைகளுக்கு இரையானாலும் ஆகலாம்; எதிரிகளிடம் சிக்கக்கூடாது' என்று எண்ணிக் கண்ணபிரான் அகழியில் இறங்கத் தீர்மானித்தபோது திடீரென்று கோட்டை மதிலின் எதிரே ஒரு கதவு திறந்து துவாரம் காணப்பட்டது. அதற்குள்ளிருந்து இளம் புத்த பிக்ஷு ஓடி வருவது தெரிந்தது. கண்ணபிரான் சட்டென்று மரத்தின் பின்னால் மறைந்துகொண்டான். இளம் பிக்ஷு படகில் ஏறுவதையும், இக் கரைக்கு அதைச் செலுத்தி வருவதையும் பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது கண்ணபிரானுடைய மூளை தீவிரமாக வேலை செய்தது. இளம் பிக்ஷு கரையில் இறங்கியவுடனே படகைத் தண்ணீரில் கவிழ்க்கப் போவதைப் பார்த்ததும் கண்ணன் பாய்ந்து வந்து அதைத் தடுத்து, இளம் பிக்ஷுவையும் தூக்கிப் படகில் போட்டுக்கொண்டு, தானும் ஏறினான். மெதுவாகப் படகை அக்கரைக்குக் கொண்டு போய்ச் சேர்த்தான்.

சுவரில் திறக்கப்பட்ட துவாரம் அப்படியே இருந்தது. இளம் பிக்ஷுவை அந்தத் துவாரத்திற்குள் தள்ளிவிட்டு, தானும் உள்ளே புகுந்தான். அகழிக்கு

## அருள்வாக்கு

தங்களுக்கும் ஸமூஹத்துக்கும் ஒன்று செய்து கொள்வதற்கு முன்னால், பகவானுக்கு எல்லாரும் சேர்ந்து செய்ய வேண்டும். தீபாவளி என்றால் தாங்கள் எண்ணெய் தேய்த்துக் கொள்வது, புது வஸ்த்ரம் கட்டிக் கொள்வதோடு ஏழை பாழைகளுக்கும் எண்ணெய், சீயக்காய், துணி கொடுக்க வேண்டும். அது மட்டும் போதாது. எல்லோரும் சேர்ந்து கோயிலில் உள்ள அறுபத்து மூவர் உள்பட எல்லா மூர்த்திகளுக்கும் தைலம் சார்த்தி, புது வஸ்த்ரம் அணிவிப்பதில்தான் கொண்டாட்டத்தை ஆரம்பிக்க வேண்டும். இப்படியே, பொங்கல் என்றால் அவரவர் வீட்டுக்குச் சுண்ணாம்பு



அடித்துச் சுத்தப் படுத்துவதோடு, வசதியில்லாதவர்களுக்கும் இந்த உதவியைப் பண்ணுவதோடு, வசதியுள்ளவர், வசதியில்லாதவர் எல்லாருமே ஒன்றுகூடிப் பக்கத்திலுள்ள ஆலயங்களில் களை பிடுங்கி, தேய்த்து மெழுகி அலம்பி விட்டு, பொக்கை போறைகளை அடைக்க வேண்டும்.

இப்போது நமக்கு உள்ளே இருக்கிற அழுக்கும் முள்ளும்தான் கோயிலில் அழுக்காகவும் முள்ளாகவும் ரூபம் எடுத்திருக்கிறது. கோயிலில் செதுக்கி, மெழுகி, சுத்தப்படுத்துகிறபோது நம் மனஸின் முள்ளையும் அழுக்கையும் அகற்றித் துப்புரவாக்கிக் கொண்டு விடுவோம். அப்போது நம் மனஸே தங்கமாகி விடும். அந்தக் கனக ஸபையில் அன்பே உருவான சிவம் வந்து குடிகொண்டு, நாமே ஆலயமாகி விடுவோம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்.

அப்பால் அவன் நிறுத்திவிட்டு வந்த ரதத்தின் ஞாபகம் வந்தது. அந்த நினைவினால் அவன் திரும்பி வெளியே வரப் பார்த்தபோது மிகவும் உறுதி வாய்ந்த வஜ்ரக் கையொன்று தன்னைப் பிடித்து உள்ளே தள்ளுவதை உணர்ந்தான். அந்தக் கை மகேந்திர பல்லவருடைய வைரம் பாய்ந்த கைதான் என்பதை உணர்ந்ததும் கண்ணனுடைய ஆச்சரியம் அளவு கடந்ததாயிற்று. அப்போது சக்கரவர்த்தி, "கண்ணா! இந்தக் கள்ள பிக்ஷு பல்லவ இராஜ்யத்தில் இருந்த வாதாபியின் கடைசி ஒற்றன். இவன் தப்பிப் போகாத படி தடுத்ததால், பல்லவ சாம்ராஜ்யத்துக்கு ஒரு மகத்தான சேவை செய்திருக்கிறாய். வா, போகலாம். கமலி உனக்காகக் கவலையுடன் காத்திருக்கிறாள்'' என்று சொல்லிக்கொண்டே அந்த இரகசிய வாசலுக்குள்ளே தாமும் நுழைந்து இரகசியக் கதவை உள்ளிருந்தபடியே சாத்தினார்.

அவர்கள் புகுந்த இடம் காஞ்சி மாநகரின் பிரசித்தமான இராஜ விஹாரம் என்று விரைவில் கண்ணனுக்குத் தெரிந்தது.

மேற்கண்ட வரலாற்றை எல்லாம் கூறிவிட்டு, கண்ணபிரான் ''கமலி! ஏதோ உன்னுடைய மாங்கல்ய பலத்தினாலேதான் நேற்றிரவு நான் பகைவர்களிடம் சிக்காமலும், முதலைகளுக்கு இரையாகாமலும் பிழைத்து வந்தேன். நான் பிழைத்து வந்தது உண்மைதானா என்று இன்னமும் எனக்குச் சந்தேகமாய்த்தான் இருக்கிறது. உன்னுடைய இரண்டு தளிர் போன்ற கைகளினாலும், என்னைக் கட்டிக் கொண்டு பார்த்து, நான் உண்மையில் உயிரோடுதானிருக்கிறேனா என்று சொல்லு'' என்றான்.

''முடியாது, கண்ணா முடியாது! உன்னை நான் கட்டிக் கொண்டால் சின்னக் கண்ணனுக்குத் தொந்தரவாயிருக்கும்!'' என்று கூறி விட்டுப் பொருள் பொதிந்த புன்னகை புரிந்தாள் கமலி.

(தொடரும்)

# தேவமருந்து - 4

**பஞ்சபூதங்கள் உடம்பில் தாது வடிவங்களாகவும் உள்ளன. மனித உடலில் எத்தனை தாதுக்கள் உள்ளன? என்று சென்ற வாரக் கேள்விக்கான விடை : ஏழு**

தாதுக்கள்தான் உடம்புக்கு உருவத்தைத் தருகின்றன. அதாவது, (Structure) எனப்படும் அனாடமியை (உடற்கூறு) ஏற்படுத்துவது தாதுக்கள்தான்.

'cell is the structural and functional unit of living being' என்று அறிவியல் சொல்கிறது. 'தோஷ தாதுக்கள்தான் structural and functional unit of living being என்று ஆயுர்வேதம் சொல்கிறது.

தோஷங்கள்தான் functional unit. ஒரு மனிதனின் செயல்பாடுகளை, தோஷ ருபமாகவும், உடல் தன்மையை, தாது ருபமாகவும் ஆயுர்வேதம் விளக்கிக் கூறுகிறது.

இரண்டு கருத்தும் சரிதான். சொன்ன விதம்தான் வேறு!

நம் உடம்பில் ஏழு தாதுக்கள் உள்ளன என்பதைப் பார்த்தோம். முதல் தாது ரச தாது.

1. நாம் உண்கின்ற உணவாகிய ஆகார ரசம் (ஜீரணமாகி பிளாஸ்மாவாக மாறுகிறது), 2. ரத்தம் (பிளட்), 3. மாமிசம் (மஸில்), 4. மேதஸ் (கொழுப்பு), 5. அஸ்தி (எலும்பு), 6. மஜ்ஜா எலும்புக்குள் இருக்கும் சோறு, நரம்புத் திசுக்கள், நர்வஸ் டிஷ்யூ, (grey matter, white matter) இவை எல்லாம் மஜ்ஜா தான், 7 சுக்லம் (reproductive fluids) என இவைதான் அந்த ஏழு தாதுக்கள்.

இந்த ஏழு தாதுக்களை ஒட்டியே மனிதனின் உருவ அமைப்பும், செயல்பாடுகளும் அமைகின்றன

இந்தத் தாதுக்கள் தவிர, மலம், மூத்திரம், வியர்வை எனப்படும் மூம் மலங்களும் உடலில் உருவாகின்றன. உடலில் தேவைக்கு அதிகமாக உற் பத்தியாகும் வாத, பித்த, கபங்கள் இந்த மலங்கள் மூலமாக வெளியேறுகின்றன.

மலம் மூலமாக அதிகமான பித்தமும் வாயுவும் சற்றே கபமும் வெளியேறும்.



டாக்டர். எல். மகாதேவன்

சிறுநீர் வழியாக கபமும் பித்தமும் வெளியேறும். மஞ்சள் காமாலை, சர்க்கரை நோய் போன்ற வற்றுக்கு சிறுநீர் பரிசோதனை செய்யும்

# ஓஜோ சக்தி; ஓஹோ சக்தி!




போது இவை வெளிப்படும்.

வியர்வை மூலமாக பித்தம் வெளியேறும். ஹைப்பர் தைராய்டு எனப்படும் பித்த சம்பந்தப்பட்ட நோயாளிகளுக்கு அதிகமாக வியர்த்துக் கொட்டுவது இதனால்தான்.

அளவுக்கு அதிகமாக உற்பத்தியாகும் தோஷங்கள் மலத்தின் மூலமே வெளியேறுவதால், மலத்தின் வெளியேற்றத்துக்கும், ஆரோக்கியத்துக்கும் முக்கியமான சம்பந்தம் ஏற்படுகிறது. மலச்சிக்கல் இருந்தாலும், பேதி ஆனாலும் உடல் ஆரோக்கியம் பாதிக்கப்பட்டிருப்பதை உடனே அறியலாம்.

ஒரு மனிதன், பரம ஆரோக்கியமாக இருக்க, மூன்று விதமான தோஷங்களும், ஏழு விதமான தாதுக்களும், மும்மலங்களும் சமமாக இருக்க வேண்டும், சீராக இயங்க வேண்டும்.

இத்தனை விஷயங்களும் சீராக இயங்கி, அக்னி தத்துவமும் சீராக இயங்கினால், அவனுக்கு நோய் எதிர்ப்பு சக்தி கூடிக் கொண்டே போகும். அந்த நோய் எதிர்ப்பு சக்திக்கு 'ஓஜோ சக்தி' என்று பெயர்.

வாதசக்தியை பிராண சக்தியாகவும், பித்த சக்தியை தேஜோ சக்தியாகவும், கபத்தை, ஓஜோ சக்தியாகவும் மாற்றி, மனித ஆரோக்கியத்தை மேம்படுத்துவதே, ஆயுர்வேத மருத்துவனின் கடமை.

இதுவே, ஆயுர்வேதத்தின் அடிப்படைத் தத்துவம். 'வாத பித்த கபங்கள்னு சொல்றீங்களே டாக்டர், அதெல்லாம் உடம்புலே எங்கேயிருக்கு?'னு நிறைய பேர் கேட்கிறதுண்டு. தோஷங்கள் உடல் முழுவதும் இருக்கின்றன. பகவான் ஸர்வ வியாபியாக இருந்தாலும் ஆலயமாகிய ஓர் இடத்தில் நாம் வழிபடுவது போல வாத பித்த கபங்கள் உடலில் சில இடங்களில் பிரதானமாக

பேபி சுசித்ரா
படம் : யோகா



| பிரிவு | வாதம் | பித்தம் | கபம் |
|---|---|---|---|
| நாள் நேரம் | பகல் - 2-6<br>இரவு - 2 -6 | பகல்- 10 - 2<br>இரவு - 10 - 2 | பகல் 6- 10<br>இரவு 6- 10 |
| வாழ்க்கை | முதுமைப் பருவம் | இளமைப் பருவம் | குழந்தைப் பருவம் |
| உணவு | ஜீரணமான பிறகு | ஜீரணமாகும் சமயம் | உண்ட உடன் |

இருக்கு.

வாதம், நாபிக்குக் கீழேயும், பித்தம் நாபிக்கும், ஹ்ருதயத்துக்கும் நடுவிலும், கபம் ஹ்ருதயத்துக்கு மேலும் பொதுவாக இருக்கின்றன.

நம்முடைய ஆயுள் காலத்திலே கூட வாத பித்த கபங்களின் செயல்கள் ஒரு முறைப்படி இயங்குகிறது.

குழந்தைப் பிராயத்திலே கபம் அதிகமாக இருக்கிறது. எனவே, கபம் சம்பந்தப் பட்ட பிரச்னைகள்தான் அதிகமாக வரும். சளி, இருமல், கபம் சம்பந்தப்பட்டவை.

கபத்தின் ஆட்சி அதிகமாக இருக்கும் குழந்தைப் பருவத்தில் கல்வி, சாஸ்திரம்

> **தேவமருந்து - 2**
>
> **வினா :** இளமையாக இருப்பதற்கும் முதுமை அண்டாமல் இருப்பதற்கும் எடுக்கப்படும் சிகிச்சை அஷ்டாங்கதில் எந்தப் பிரிவில் வருகிறது?
>
> **விடை :** 'ஜரா'
>
> சரியான விடை எழுதி அமரர் கல்கி புத்தகங்களைப் பரிசாகப் பெறுபவர்கள் :
>
> டி.கே. சுப்பிரமணியன், 81, சன்னிதித் தெரு, திருப்பரங்குன்றம்.
>
> வி. வேலரசு, , புது எண்.9, பிள்ளையார் கோயில் தெரு, அரும்பாக்கம், சென்னை - 106

முதலியவற்றைப் படித்தால் அவை உடனே கிரகித்துக் கொள்ளப்படும். அதனால்தான் சாஸ்திரங்களை மிகச் சிறிய வயதில், அதுவும் அதிகாலை நேரத்தில் போதிக்கிறார்கள். (அதிகாலை நேரம் கபம் காலமாகும்) கபம் ஞான சக்தியாக இருப்பதால், கற்றுக் கொள்வதும், எளிதில் மறப்பதில்லை!

அடுத்து வருவது மத்திம பிராயம். இக் காலத்தில் பித்தத்தின் தன்மை அதிகமாக இருக்கும். இக் காலத்தில் வேலை, திருமணம் போன்ற செயல்கள் நடைபெறும். நோய்கள் என்று எடுத்துக் கொண்டால் ரத்தக் கொதிப்பு, அல்சர், மன உளைச்சல், ஸ்ட்ரெஸ் சம்பந்தமான நோய்கள் அதிகமாகக் காணப்படும்.

கடைசியாக வருவது அந்திமக் காலம். இந்தக் காலத்தில் வாயுவின் பாதிப்பு அதிகமாக இருக்கும். 'degenerative changes எனப்படும் தேய்மானங்கள் ஆரம்பமாகும். மலச்சிக்கல், தூக்கமின்மை, எண்ண அலைகள், மூட்டுவலி போன்ற வியாதிகள் முதியவர்களைப் பற்றிக் கொள்வது இந்தக் கால கட்டத்தில்தான்.

பொதுவாக ஒரு தினத்தில் காலை வேளையில் கபமும், மதிய வேளையில் பித்தமும், மாலை வேளையில் வாயுவும் அதிகமாக இருக்கும். இரவிலும் இதே தன்மையில் தோஷங்கள் செயல்படும். தூக்கமின்மை வாயுவை அதிகரிக்கும். அதிகமாகத் தூங்கினால் அது கபத்தை அதிகரிக்கும். இரண்டுக்குமிடையே ஒரு சமத்தன்மை ஏற்படுத்த வேண்டும்.

இந்த வாயு, பித்த, கபங்களின் இன்ஃப்ளுயன்ஸ் சமச்சீராக இருக்கும் பட்சத்தில் உடலின் செயல்பாடுகளும் ஆரோக்கியமாக இருக்கின்றன.

**எந்தக் காலத்திலே எந்த தோஷத்தினால் எலும்பு சம்பந்தப்பட்ட வியாதிகள் அதிகமாக வருகின்றன என்பதே இந்த வார மருத்துவக் கேள்வி.**



# பசுமடம்

## பசுக்கள் பாதுகாப்பு இல்லம்

( ஸ்ரீ கோசாலா ஸேவா டிரஸ்ட் மூலம் பராமரித்து பாதுகாக்கப்படுகிறது)

பெருமாளகரம், திருவேற்காடு (P.O), சென்னை - 600 077.

✆ : 4959302 Fax: 4616311 E-mail:sivasiva@vsnl.net

**குடும்ப நலனுக்காக பசுக்களை பாதுகாக்கவும், இறைச்சிக்காக பசு கொல்லப்படுவதை தடுக்கவும் எங்களுடன் இணைந்து இப்புனிதப்பணியில் சேவைசெய்ய உங்களையும் அன்புடன் அழைக்கிறோம்!**

**ஆன்மீக அன்பர்களுக்கு வணக்கம்! கோமாதா தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

இந்துக்களின் அனைத்து தெய்வங்களும் உள்ளடங்கிய "கோ" என்பது கோமாதாவாகிய "பசு" ஆகும். அது தாயைப் போன்றது. பிறந்த குழந்தைக்கு தாய்ப்பால் எவ்வளவு அவசியமோ அதற்கு நிகரான பசுவின் பால் குழந்தைப் பாதுகாப்புக்கு மிக அவசியமாகும். இத்தகைய புனிதமான காமதேனுவை - கோமாதாவை - பசுத்தாயை பராமரிப்பதும், பாதுகாப்பதும், பூஜைசெய்து வழிபடுவதும் ஒவ்வொரு இந்துவின் கடமையாகும். மேலும் பசுக்களை காப்பாற்றுவதே உண்மையான லட்சுமி பூஜை என்ற நல்லுணர்வுடனும், சமுதாய சிந்தனையுடனும் சென்னை திருவேற்காடு அருள்மிகு தேவி கருமாரியம்மன் திருக்கோவில் அருகில் "ஸ்ரீ கோசாலா ஸேவா டிரஸ்ட்" மூலம் பசுமடம் ஒன்றை பெருமாளகரம், திருவேற்காடு, சென்னை - 77 என்ற விலாசத்தில் ஏற்படுத்தியுள்ளோம். பசுக்களின் துன்பங்களைத் தனதுபோல் உணர்ந்து அவற்றைப் போக்கவும், மத்திய, மாநில அரசின் பசு வதை சட்டத்தை மதித்தும், குடும்பநலன் கருதியும் நமக்கும் பலவழிகளில் நன்மைதரும் பசுக்களை வாங்கி நமது பசுமடத்திற்கு அனுப்பிப் பாதுகாக்க, பராமரித்து பூஜை செய்து வழிபட, கொடுப்பதன் மூலம் தங்களுக்குக் கோமாதாவின் அருளைப்பெற இது ஒரு நல்ல வாய்ப்பாகும்.

நீங்கள் தானம் செய்யும் பசுவுக்கும், கன்றுக்கும் வைதீக முறைப்படி புரோகிதர்களை வைத்து நித்தம் பூஜைகள் உங்கள் பெயரில் நடத்தி வைக்கப்படுகிறது. மேலும் பசுத்தொழுவத்தில் கோமாதாக்களுக்கு நவீன விஞ்ஞான முறைப்படி பராமரிப்புகள், மின்விசிறிகள், வேதபாராயண ஸ்லோகங்கள், கர்னாடக தெய்வீகப்பாடல்கள் தொடர்ந்து ஒலிக்க ஒலிநாடாக்கள் இயக்கி வைக்கப்படுகிறது. இத்தகைய பராமரிப்புகள், வழிபாடுகள் அமைந்துள்ள கோசாலாவிற்கு கோதானம் செய்து கோமாதாவின் தெய்வீக அருளைப்பெற அன்புடன் அழைக்கிறோம். பசுவை பராமரித்து, பாதுகாத்து பூஜிக்கவும், பசுக்களின் தினப்படி ஆகாரங்களுக்கும், தீவனங்களுக்கும் தினம், வாரம், மாதம், வருடம் என முறைப்படியாகும் செலவுகளுக்கு உதவியளித்து கோமாதாவின் அருளைப்பெறுவதுடன் வாழ்வில் உயர்வு பெற்றிடலாம்.

*தீவனம் அனுப்புவோர் TVSABT மூலமாக மயிலாப்பூர், சென்னை - 4 க்கு அனுப்பி வைத்து எங்களுக்குத் தெரிவித்தால் நாங்கள் உடனே Delivery எடுத்துக் கொள்வோம்.*

பசுத்தாயின் உடலில் மும்மூர்த்திகளும், 33 கோடி தேவர்களும், அனைத்துப் புண்ணிய தீர்த்தங்களும் குடிகொண்டுள்ளன. பசுவை வலம் வந்தால் எல்லா தெய்வங்களை வணங்கிய பலனும், எல்லாப் புண்ணிய நதிகளில் நீராடிய பலனும் தங்களுக்குக் கிடைக்கும் என்று வேதசாஸ்திரங்கள் சொல்கின்றன. பசுச்செல்வத்தின் உடல் புண்ணியத்தின் விளைநிலம். இறந்த நமது முன்னோர்களுக்கு உணவு அளிக்க விரும்பினால், பசுவிற்கு கொடுத்தால் போதும். அது நமது முன்னோர்களுக்குப் போய்விடும். பசுவின் சாணம் கிருமிநாசினியாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. பஞ்சகவ்யம் எனப்படும் பால், தயிர், நெய், கோமியம், சாணம் இவைகளில் இருந்து தயாரிக்கப்படும் மருந்து தீராத வியாதியாகிய கேன்சரைக் குணப்படுத்துகிறது. இப்படி ஆன்மீகப்படி பார்த்தாலும், விஞ்ஞானப்படி பார்த்தாலும் பல வழிகளில் நமக்கு நன்மை தரக்கூடிய பசுத்தாயைப் பாதுகாத்து வணங்க வேண்டியது மிகவும் அவசியமான ஒன்றாகும். "இறைவனுக்கு அபிஷேகமாகும் பாலையும், இறைவனின் திருமேனியை அலங்கரிக்கும் விபூதியையும், வேள்விகளுக்கான வரட்டியையும், நெய்யையும், பறை, பேரிகை முழக்க தன் தோலையும் வழங்குவது கோமாதாதான் என்பதை தாங்கள் நன்கு அறிவீர்கள்.

பசுவைப் பாதுகாத்து பராமரிக்க தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

* ரூ.500/ - அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.1000/ - அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
* ஒரு பசுவை பராமரிக்க ஆண்டிற்கு ரூ.5400/- தேவைப்படுகிறது. இந்த நன்கொடையை வழங்கும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக ஒரு பசுவை ஒரு ஆண்டிற்கு பராமரிப்பதுடன், தங்களை "Ghomadha Seva Scheme" "பசு சேவை திட்டம்" என்ற புனித அமைப்பில் சேர்த்துக் கொள்ளப்படுவதுடன் "ஆன்மீகம்" மாத இதழ் 10 ஆண்டுகளுக்கு தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ஆன்மீக அன்பர்கள் தங்களுடைய திருமண நாள், பிறந்த நாள், பிள்ளைகளின் பிறந்த நாள், பண்டிகை நாட்கள், விசேஷ நாட்கள், முன்னோர்கள் திதி நாட்கள் என தங்களுக்கு உகந்த நாட்களில் பசுவை தானமாகத் தரலாம். மேலும் இதுபோன்ற முக்கிய நாட்களில் தாங்கள் ''கோ பூஜை'' செய்ய விரும்பினால் அந்த நாட்களில் நமது ''ஸ்ரீ கோசாலா ஸேவா டிரஸ்ட்'' என்ற அமைப்பின் மூலம் சென்னை திருவேற்காட்டில் நிர்வகிக்கப்படும் ''பசுமடத்திற்கு'' குடும்பத்துடன் நேரில் வரலாம். குழந்தை இல்லாதவர்கள் 1 ஆண்டு பசு கன்று வளர்த்து சேவை செய்ய குறை நீங்கும். தீராத துன்பங்கள் குடும்ப பீடை உடையவர்கள் வெள்ளிக்கிழமை விரதமேற்று பூஜை செய்ய குடும்ப சுபிட்சம் ஏற்படும். திருமணம் ஆனவுடன் பசு ஒன்றை வளர்க்க தொடங்கிட மணமக்கள் மங்கள வாழ்வு பெறுவார்கள். பலவிதமான சாபத்தால் ஏற்பட்ட குறை நீங்க கோவில்கள், மடங்கள், அந்தணர்களுக்கு பசுதானம் செய்ய சாபம் விலகும். 108 பசுக்களை ஒரே நேரத்தில் தரிசித்தால் நூறு ஆண்டுகள் இறைவனை வழிபட்ட பயன் ஒரு நாளில் உண்டாகும். தொழில் விருத்தி, வியாபார விருத்தி, திருமணத்தடை, புத்திர பாக்யம், குடும்ப நலன் ஏற்பட கோமாதா பூஜை செய்ய குறை நீங்கி சுகவாழ்வு ஏற்படும்.

இறைச்சிக்காக பசு கொல்லப்படுவதை தடுக்கவும், குடும்பநலனுக்காக பசுக்களை காக்கவும், கோபூஜை செய்யவும், ஆன்மீக அன்பர்கள் பசுவைத் தானமாக கொடுக்கலாம் அல்லது பசுக்களை பாதுகாத்து பராமரிக்க தங்களால் இயன்ற அளவு நன்கொடையை Cheque/D.D/M.O மூலமாக **Shri Ghosala Seva Trust** என்ற பெயருக்கு மேற்கண்ட முகவரிக்கு அனுப்பி உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

**[illegible]த்துக்கு மிஞ்சி ஒரு புண்ணியமும் இல்லை!**



• ப்ரணா



• இ.ஜேசுதீன்



• ச. முருகேசன்



• தாவை இளங்குமரன்



• விஜயா இம்மானுவேல்



• சத்தியப்ரியன்

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதை மற்றும் தமாஷ் ஹைகூ கவிதைப் போட்டிகளில் கலந்து கொண்டு பரிசு பெற்றவர்களை வாழ்த்துகிறோம்!

'கதையைப் படித்ததும் தளர்ந்த மனத்திலும் நம்பிக்கை ஊற்றுப் பெருக்கெடுக்க வேண்டும். உற்சாகம் தரும் வைட்டமின் சிறுகதையாக இருக்க வேண்டும்' என்ற விதிமுறைக்கு மிகச் சரியாகப் பொருந்தக்கூடிய சிறுகதைகள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டன.

'ஊசி இலை மரம்' கதைக்கு முதல் பரிசாக ரூ. 10,000 தட்டிச் சென்ற ரெ. கார்த்திகேசு, மலேசிய எழுத்தாளர். ஓய்வு பெற்ற பேராசிரியர். பினாங்கில் மனைவி, மக்களுடன் வசிக்கிறார். எண்ணற்ற சிறுகதைகளும் நாவல்களும் கட்டுரைகளும் எழுதியுள்ள இவரது 'அந்திம காலம்' நாவல், டான் ஸ்ரீ மாணிக்க வாசகம் பரிசு பெற்றது.

தமிழ்ப் புத்திலக்கியம் மற்றும் புலம் பெயர்ந்த இலக்கியங்களில் மிகுந்த ஆர்வம் கொண்டவர். 'கல்கி' வைர விழா நிகழ்ச்சிக்காகவே, மலேசியாவிலிருந்து வந்து கலந்து கொண்டு சிறப்பித்தார்.

'மூவர்' சிறுகதைக்காக இரண்டாம் பரிசாக ரூ. 7500/- பெறும் சத்தியப்ரியன், பதினெட்டு வருடமாக சிறுகதைகளும் குறுநாவல்களும் எழுதி வருகிறார். இவரது நான்கு புத்தகங்கள் இதுவரை வெளிவந்துள்ளன. சேலம் கர்நாடகா வங்கியில் பணிபுரியும் இவர், கதை எழுதுவதை, தியானத்தின் ஒரு நிலையாகவே கருதுகிறார். எண்ணற்ற இலக்கியப் பரிசுகள் பெற்றவர்.

'செங்கிப்பட்டிக்கு இரண்டு டிக்கெட்' சிறுகதையை எழுதி மூன்றாவது பரிசாக ரூ. 5000/- தட்டிச் சென்ற




வேட்டை' எழுதி யிருப்பவர் ஜி. ஸ்வாமிநாதன். 'தேவவிரதன்' என்பது புனை பெயர். சென்னை, மத்திய தோல் ஆராய்ச்சி நிலையத்தில், விஞ்ஞானி யாகப் பணிபுரியும் இவர் சிறந்த இசை விமர்சகரும் கூட. தன்னை மிகவும் பாதிக்கும் விஷயங்களையே கதைகளின் கருவாகக் கொள்வதாகக் குறிப்பிடு கிறார்.




**இ**.ஜேதீன் எழுதிய 'விடிகின்ற நேரம்' கதையும் ஆறுதல் பரிசாக ரூ. 1250/- பெறுகிறது. சுமார் முப்பது வருடங்களா கப் பத்திரிகைகளில் எழுதிக் குவித்து வருகிறார். குழந்தை இலக்கியத்தில் ஆர்வம் அதிகம். இதுவரை சிறுவர் நூல்கள் ஐந்து வெளிவந்துள்ளன. சென்னை, குழந்தை எழுத்தாளர் சங் கத்தின் பரிசு, புதுவை அரசின் குழந்தை இலக்கியப் பரிசு உட்பட பல்வேறு பரிசுகள் பெற்றிருக்கிறார்.




ஆர். ஸ்ரீநிவா சன் என்ற ரிஷபன், கல்கி வாசகர்களுக்குப் பரிச்சயமானவர். நானூறு சிறுகதைகள், பன்னிரண்டு நாவல்கள், இரு தொடர்கள் என எழுத்துப் பங்களிப்பு. திருச்சி பாரத மிகுமின் நிலையத்தில் நிதித் துறையில் பணி. நீண்ட நாள் கனவு பலித்ததாகப் பெருமை கொள்கிறார்.

**ஆ**றுதல் பரிசு பெறும் 'மாயமான்

'**த**மாஷ் ஹைகூ' கவிதைப் போட்டி யில் ஏராளமானவர்கள் திரளாகக் கலந்து கொண்டதால், தேர்வாளர்கள் திணறிப் போனார்கள். 'சுருக்'கென்று தைக்கும் நையாண்டிச் சிந்தனைக்குப் பரிசு' என்று மிகவும் தீவிரமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைகளில், முதல் பரிசாக ரூ.1000/- பெறும் தமாஷ் ஹைகூ கவிதையை எழுதியவர் தளவை இளங்குமரன்.

எளிய விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த தளவை இளங்குமரன், செங்கல்பட்டு,

# வாழ்த்துக்கள்!

# கல்கி
## VBC Jewellery
இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி -25 முடிவு

விருதுபெற்ற கபில்தேவுக்கு வாழ்த்துமடல் எழுதச் சொல்லிக் கேட்டிருந்தோம். வாழ்த்துக் கடலே ஆபீசுக்குள் புகுந்து விட்டது. கச்சிதமாய் கபிலைப் பாராட்டிய இருவர் தலா நான்கு கிராம் தங்கம் பெறுகின்றனர்.

பின்லேடன், வீரப்பன் பிடிபட்டாலும்
கேட்ச் ஆகாத சிக்ஸருக்கு சொந்தக்காரா!
மேட்ச் ஃபிக்ஸிங்கில் சிக்காத நேர்மை வீரா!
உனக்குப் பிறகு உலகக் கோப்பை கானல்நீரா...?

**- A. லலிதா ஆனந்தன், புதிய எண் 32,**
**திருவள்ளுவர் நகர் முதலாவது தெரு,**
**கோட்டூர், சென்னை - 85.**

வரலாற்றால் வீழ்த்த
முடியாத விக்கெட்டுகள்
நீயும், விலைவாசியும்தான்!
வெல்டன் விஸ்டன்!

**— ஆரா, 6, சுந்தரேஸ்வர் தெரு,**
**இராயப்பேட்டை,**
**சென்னை - 4.**

மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில் பணிபுரிகிறார். "சிறுவர் பாடல், பொது நோக்குக் கவிதை, காதல் கவிதை, பொங்கல் கவிதை என விதவிதமான கவிதைகள் வெளியாகி உள்ளன என்றாலும், ஹைகூவில் இதுவே முதல் முயற்சி" என்கிறார்!

'பின்னோக்கிச் செல்லும்' ஹைகூ கவிதைக்காக இரண்டாம் பரிசு ரூ. 750/- பெறும் ஆர். இம்மானுவேலுக்கு, தனியார் நிறுவனத்தில் விற்பனை அதிகாரியாக வேலை. இலக்கியம், ஓவியத்தில் ஆர்வம். தன் மனைவியின் பெயரையும் சேர்த்து 'லிடியா இம்மானுவேல்' என்ற பெயரில் எண்ணற்ற பத்திரிகைகளில் எழுதி வருகிறார்.

'மின்தடை' என்னும் ஹைகூ கவிதை எழுதி மூன்றாம் பரிசாக ரூ. 500/- பெறும் ச. முருகேசன், தமிழ் இலக்கிய பட்டதாரி. செயற்கை வைரம் பட்டை தீட்டும் தொழில் செய்கிறார். வைரம் தீட்டும் விரல்கள் கவிதையும் தீட்டி வைரவிழா பரிசு பெற்றுவிட்டன!

ஆறுதல் பரிசு பெறும் ப்ரணா, தஞ்சாவூர்க்காரர். இயற்பெயர் ஹ. ஜெகன் மோகன். பதினான்கு வயதிலிருந்து கவிதை எழுதிக் கொண்டிருக்கிறார். 'நிழலும் சுடும்', 'ஹைகூ அல்ல' எனக் கவிதைத் தொகுப்புகள் வெளியாகியுள்ளன. திரைத்துறையில் பாடலாசிரியராக வேண்டுமென்பதே ப்ரணாவின் கனவு.

மற்றொரு ஆறுதல் பரிசு பெறும் கோவி. லெனின் 'நக்கீரன்' இதழில் துணையாசிரியராகப் பணிபுரிகிறார். பிள்ளைப் பருவம் முதலே இலக்கியம், சமூகப்பணி, அரசியல் ஆகியவற்றில் ஆர்வம் அதிகம். 'தலைப் பிரசவம்' என்ற கவிதை தொகுப்பு வெளியாகியுள்ளது. தமிழ் மீதும் இயற்கை மீதும் கொண்ட காதலால் தம் மகளுக்கு 'தமிழ் நிலா' என்று பெயர் சூட்டியிருக்கிறார்.

மூன்றாவது ஆறுதல் பரிசு பெறும் ஹைகூ கவிதை எழுதிய ஜெயகிருஷ்ணன், சென்னைவாசி. இவருக்குப் பரிசு கிடைத்த தகவல் தெரிவிக்கப்பட்டது. விரைவில் தொடர்பு கொள்வார் என எதிர்பார்க்கிறோம்.

பரிசு பெற்றோருக்கு வாழ்த்துக்கள்.

கலந்து கொண்ட அனைவருக்கும் நன்றி... நன்றி.... நன்றி!

**— ஆதர்ஷ்**

# அதிராமல் பேசும் கதைகள்!




பாவண்ணனின் ஒன்பதாவது சிறு கதைத் தொகுப்பு 'ஏழு லட்சம் வரிகள்'. பல்வேறு இதழ்களில் வெளியான இக்கதைகளில் பெரும்பாலானவை புராணங்களை அடிப்படையாகக் கொண்டவை.

புதுமைப்பித்தன், கலைஞர் கருணாநிதி போன்ற பலர் இதுபோன்ற முயற்சிகளைச் செய்திருக்கிறார்கள். கதைமாந்தரின் இயல்பைப் பொருட்படுத்தாது தங்களது கருத்துக்களை முன் வைப்பதற்காக எடுக்கப்பட்ட முயற்சிகள் அவை. ஆனால் பாவண்ணன் அந்த விதத்தில் மாறுபடுகிறார்.

சக பாத்திரங்களின் செயல்களைச் சில பாத்திரங்கள் மறுதலித்தாலும், புராணங்களை எந்த இடத்திலும் எள்ளி நகையாடவில்லை பாவண்ணன். அதே சமயம் கற்பனையாக, கிளைக்கதைகளைச் சேர்க்கவுமில்லை. புராணங்களில் உள்ள கேள்விகளுக்கான விடைகளைத் தேடும் இவரது முயற்சிகள், கதைமாந்தரின எண்ண ஓட்டங்களாவே வெளிப்படுகின்றன. அந்த எண்ணங்களைப் பெரிதும் விரிய வைத்து வாசகர்களை அவற்றோடு ஒன்றச் செய்வதில் வெற்றி பெற்றிருக்கிறார் பாவண்ணன்.

'அல்லி' சிறுகதையில் அர்ஜுனனைப் பாம்பாக உருவகப்படுத்தியதில் அல்லியை அவன் மயக்கும் வித்தை விவரிப்பில் மருடி வாசிக்கிறார் ஆசிரியர். ஆனால் இந்தப் பகுதிகளைவிட அல்லி ஏன் ஆண்களை வெறுக்க வேண்டும் என்பதற்கான சாத்தியக் கூறை அவர் விளக்காமல் விளக்குவது - சிறு வயதில் தந்தையுடன் அவள் கொண்டிருந்த பந்தத்தின் நுட்பங்கள் - சிறப்பானது.

மகாபாரதம் அதிகமாகவே ஆசிரியரை ஈர்த்திருக்கிறது. 'திரை' கதையில் மகாபாரத யுத்தத்தின் முடிவில் துரியோதனன் அஸ்வத்தாமனிடம் "நான் பாவி" என்று கதறுகிறான்.

பிராமணன் என்று பொய் கூறி தன்னிடம் வித்தைகளைக் கற்றுக் கொண்ட கர்ணனுக்குச் சாபம் கொடுக்கிறார் பரசுராமர். இதைத் தொடர்ந்து அனாதைக் குழந்தைகளை இறக்கவிட்டுவிடுவதே மேல் என்று கர்ணன் கூற, அதைக் கேட்கும் பெரியவர் ஒருவர் "ஏதோ ஒரு நெருக்கடியினால் தானே பரசுராமரிடம் நீ பொய் கூறினாய். அதே போன்று ஒரு நெருக்கடி உன் தாய்க்கும் இருந்திருக்கலாமே" என்கிறார்.

எந்த ஒரு அதிர்வையும் எழுப்பாமல், அதே சமயம் கதை மாந்தரின் மன உணர்வை எதிர்பார்த்த போக்கிலேயே விளக்கும் கதைகளும் உண்டு. பெரியாழ்வார் - ஆண்டாள், சீதை - வால்மீகி ஆகியோரைச் சுற்றிப் படரும் நெகிழ்வான கதைகள் இந்த வகை.

எழுத்தில் நல்ல கனமும், எழுதும் விதத்தில் அதற்கான பிரயாசையும் சட்டென்று புலப்படுகிறது. கதைமாந்தர்கள் உரையாடினால்தான் இடைவெளி எனும் அளவுக்கு மிக நீண்ட பத்திகள். மிகப் பெரும்பாலான கதைகள் தவிப்பையும் சோகத்தையும் சுமப்பவையாக உள்ளன.

— அருண் சரண்யா

**காவ்யா, 14, முதல் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 24. விலை ரூ.70**

# கல்கி வைர விழா
# கல்கி சதாசிவம் நூற்றாண்டு விழா

# மாலைப் பொழுதினிலே...



**சேர்மன் வி. வைத்யநாதன் வரவேற்புரையில் கூறியது :**

காவல் துறையில் பணி புரிந்தவர், தமிழ் நாட்டு கவர்னராக எப்படி இயங்குவாரோ என்ற நமது ஆரம்பகால சந்தேகத்துக்கு அவசியமேயில்லை என உணர்த்திவிட்டார் ஆளுநர். அவர் பணிக் காலத்தில் மிகச் சுவையான அனுபவங்கள் நடந்திருக்கும். அவற்றை உள்ளடக்கி அவர் வாழ்க்கை வரலாறு எழுதினால் வெளியிட கல்கி பத்திரிகை காத்திருக்கிறது.

**டாக்டர் சுதா சேஷய்யன் வாழ்த்துரை:**

எனக்கு வேறெந்த வரலாற்றுப் புதினங்களும் கற்றுக் கொடுக்காததை, சமூக ஆய்வாளர்கள் சுட்டிக் கட்டாததை, தேவாரம், திருவாசகம் உரையாசிரியர்கள் சொல்லித் தராததை, கற்றுக் கொடுத்தவை அமரர் கல்கியின் வரலாற்றுப் புதினங்கள் தான்.

நண்பர்கள் கல்கியும் சதாசிவமும் திருவையாறு தியாகபிரும்மம் விழாவில் சந்தித்துக் கொண்டார்கள். கல்கி தனி நபர் சத்தியாகிரகத்தில் கலந்து கொண்டு சிறைக்குப் போவதைப் பற்றிச் சொல்லி விட்டு, சிறையிலிருந்து வந்தவுடன் ஒரு பத்திரிகை துவங்க இருப்பதையும் சதாசிவத்திடம் சொன்னார். சொல்லிவிட்டு அவர் சிறைக்குச் சென்றுவிட்டார். அடுத்த சில மாதங்களில் சதாசிவம் முதல் தேடும் பணியில் ஈடுபட்டு மனைவி எம்.எஸ்.ஸை நாரதர் வேடமேற்று 'சாவித்ரி' படத்தில் நடிக்கச் செய்தார். நாரதர் வேடத்தில் நடித்துப் பெற்ற வருமானத்தைப் பத்திரிகைக்குக் கொண்டு சேர்த்தார் எம்.எஸ். சங்கீத சிகரங்களான தியாகபிரும்மமும் நாரதரும் ஆசி வழங்க, ஆரம்பிக்கப்பட்டதுதான் கல்கி பத்திரிகை.

★ ஆளுநர் தலைமை வகித்தால் காமராஜர் அரங்கம் முழுதும் காவல் துறை கட்டுப்பாட்டில் இருந்தது. மோப்ப நாய்கள், மெடல் டிடெக்டர் என பாதுகாப்பு ஏற்பாடுகள் கடுமை



• ஆளுநர் வருகிறார்...

• பொன்னாடை போர்த்தப்படுகிறார் என்.ராம்



**'ஃப்ரண்ட்லைன்' ஆசிரியர் என்.ராம் :** சுதந்திரப் போராட்டத்தில் தீவிரவாதிகள் வகுத்த பாதையில் தான் முதலில் சென்றார் சதாசிவம். பின்னர் காந்திஜியின் அகிம்சை கொள்கையால் கவரப்பட்டு அவர் காட்டிய வழியில் நடந்தார். ராஜாஜியின் அணுக்கத் தொண்டரானார் சதாசிவம். நேரு 'காங்கிரஸிலேயே தொடர்ந்து இருங்கள்' என்று தூது அனுப்பினார். ஆனால் சதாசிவம், ''ராஜாஜி எங்கிருக்கிறாரோ அங்குதான் நானிருப்பேன்'' என்று உறுதியாகச் சொல்லிவிட்டு, ராஜாஜியின் கொள்கைகளைப் பரப்பும் உன்னத வழியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். இன்றைய சந்தர்ப்பவாத அரசியல் சூழலில் இந்த மாதிரி நிகழ்வை நினைத்தும் பார்க்க முடியாது.

நகைச்சுவை உணர்வு மிக்கவர்; பரோபகாரி. ஓர் இளைஞருக்கு வேலை தரும்படி கேட்டு அடிக்கடி ஒரு நண்பரை போன் செய்து வந்தார் சதாசிவம். 'அந்த இளைஞன் டிகிரி கூட முடிக்கவில்லையே' என்றார் நண்பர். '' நீயும் சரி, நானும் சரி... பள்ளியிறுதிகூட முடிக்கவில்லை. என்ன கெட்டுவிட்டது? இப்போது அந்த இளைஞனுக்கு வேலை வேண்டும்'' என்றார் சதாசிவம். வாங்கியும் தந்து விட்டார்.



ஒரு பொது நிகழ்ச்சியில் எம்.எஸ். கச்சேரி. அப்போது திரு. சதாசிவத்தைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அவரது எளிமையை அனுபவித்து உணர்ந்து ஒரு மனிதனைப் பெரிய மனிதனாக்குவது அந்த எளிமையே என அறிந்து கொண்டேன்.



யாய் இருந்தன.

★ வீடியோ, படங்கள் எடுத்த யோகா குழுவினருக்கு இந்நிகழ்ச்சிக்கெனத் தனி அடையாள அட்டைகள் தரப்பட்டன.

★ மாலையும் செம்பனார்க்கோயில் கல்யாணசுந்தரம் குழுவினர் நாதஸ்வர இன்னிசையுடன்தான் நிகழ்ச்சி தொடங்கியது.

★ இறைவணக்கமாக சிக்கல் குருசரண் பாடியது 'நெஞ்சுக்கு நீதியும்' என்ற பாரதியார் பாடல், கல்கி சதாசிவத்தின் மனதுக்குகந்த பாடல் இது.




**ஆளுனரின் தலைமை உரை :**

கல்கி, சதாசிவம் ஆகிய இருவரும் தமிழுக்கும் தேசத்துக்கும் தொண்டு செய்தவர்கள். அவர்கள் உருவாக்கிய மரபு என்றென்றும் தமிழர்களின் நினைவுச் சிறையில் வைக்கப்பட்டு, கடைப்பிடிக்கப்படும். இருவருமே ராஜாஜி பக்தர்கள். சதாசிவத்தைப் போலவே கல்கியும் பிறருக்குக் கொடுத்து மகிழ்ந்திருக்கிறார்.



ஒரு நாள் முழுவதும் நாதசுரமும், சொற்பொழிவுகளும், பாராட்டுகளுமாகக் கேட்ட செவிகளுக்குள் தேன் பாய்கிற மாதிரி இருந்தது. முத்தாய்ப்பாக மாலையில் அமைந்த நித்யஸ்ரீ மகாதேவனின் இன்னிசை.

கம்பீரமான அடாணாவில் 'ஸ்ரீமகா கணபதிம்' என்று தொடங்கி, தியாகராஜரின் சிந்துராமக்ரியா பாடலான 'தேவாதிதேவ சதாசிவ' வில் சூடு



பிடித்து, காபியில் 'மீவல்ல குணதோஷ'வில் சஞ்சரித்து, இதமாக பூர்விகல்யாணி யில் 'மீனாட்சி மேமுதம்' வழங்கி, மேல் ஸ்தாயியில் துளி பிசிறில்லாமல் அநாயாசமாகச் சஞ்சாரம் செய்தார் நித்யஸ்ரீ. பிறகு, மாலைப் பொழுதினிலே, பூங்குயில் கூவும், கிரிதர கோபாலா, காற்றினிலே வரும் கீதம், எண்ணிய முடிதல் வேண்டும், பாரத சமுதாயம் வாழ்கவே, குழலோசை கேட்டாயோ, குறை ஒன்றுமில்லை என்று பாரதி, கல்கி, ராஜாஜி

★ மாலை நிகழ்ச்சியைத் தொகுத்தளித்தவர் கல்கி நிறுவன புதிய நிர்வாக அதிகாரி சங்கர் ராமசந்திரன் - இவர் ஆனந்தியின் மகன்.

★ நன்றியுரை வழங்கிய தலைமை நிர்வாக அதிகாரி வி.கோபாலன் ஆளுநரின் வாழ்க்கை வரலாறை வெளியிட கல்கி காத்திருக்கிறது என மீண்டும் குறிப்பிட்டு உறுதி செய்தார்.

★ ஆளுநர் கச்சேரி கேட்க அமர்வார் என்று எதிர்பாராத பாதுகாப்பு அதிகாரிகள் அவர் முன் இருக்கையில் அமர்ந்ததும் சற்று ஆச்சர்யம் அடைந்தனர். நித்யஸ்ரீயின் தெலுங்கு உச்சரிப்பை மிகவும் பாராட்டிய

• குருசரண்

பஸுல்லா ரோடில் இருந்த தமது வீட்டை ராஜாஜிக்கு வழங்கினார் கல்கி.

பொருளாதாரம் மற்றும் வேறு சில விவகாரங்களில் ராஜாஜியின் கருத்துக்கள் பல சர்ச்சைகளை உருவாக்கின. காங்கிரஸ் தலைவர்கள் பலர் அவற்றை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் இன்று ஐம்பது வருடங்கள் கழிந்துப் பார்க்கும்போது அவர் மிகச் சரியான, தீர்க தரிசனமான கருத்துக்களையே சொல்லியிருக்கிறார். அவர் காட்டிய பாதையில் தொடர்ந்து கொண்டிருக்கும் கல்கி நிறுவனத்தையும் ஆசிரியர் குழுவையும் வாழ்த்தும் நேரத்தில் அதன் ஸ்தாபகர்கள் அமைத்த அஸ்திவாரம் எத்தனை பலமானது என்பதையும் மறவாமல் பாராட்டுவோம்.

எனது வாழ்க்கை வரலாற்றை எழுத வேண்டுமென்று இதுவரை நினைக்கவில்லை. அப்படி எழுத முடிவு செய்தால் 'கல்கி'யை நினைவில் வைத்துக் கொள்வேன்.






• நித்யஸ்ரீ குழுவினர்

பாடல்களால் தமது மெல்லிசை ரசிகர்களைச் சொக்க வைத்தார் நித்யஸ்ரீ. எம்.ஏ. கிருஷ்ணசாமி வயலின், நித்யஸ்ரீயின் அப்பா ஐ.சிவகுமார் மிருதங்கம், எஸ்.வி. விச்வநாதன் கடம், ஏ.எஸ்.கிருஷ்ணன் முகர்சிங் என்று கலகலப்பான பக்க வாத்தியங்கள் கச்சேரியை மேலும் களைகட்டச் செய்தன.

ஆயிரக்கணக்கான ரசிகர்களுடன், ஆளுநர் ராம்மோகன்ராவ் அவர்களும் இசையை வெகுவாக ரசித்தபடி அமர்ந்திருந்தது நித்யஸ்ரீக்கு அவர் வழங்கிய பாராட்டின் அடையாளமாக இருந்தது.

தொகுப்பு : ப்ரியன், சாருகேசி
படங்கள் : யோகா

ஆளுநர், அம்மொழியின் ஒலி நயங்களை வியந்து குறிப்பிட்டார். செந்தமிழ் விழாவில் ஆங்கிலத்தில் உரையாற்றி தெலுங்கையும் ரசித்து மகிழ்ச்சியுடன் விடைபெற்றார்.



• வி.கோபாலன்



# படையலப்பா!

ஐம்பது வருஷங்களுக்கு முன் ராஜாஜி எழுதியுள்ள 'உபநிஷதப் பலகணி'யின் முன்னுரையில் அவர் கூறியுள்ளவை:

''நம்முடைய நாட்டில் அரசு புரிந்த மொகலாய சக்கரவர்த்திகளுள் ஒருவரான ஷாஜஹானுடைய மூத்த குமாரனும், ஔரங்கஸீப் சக்ரவர்த்தியின் அண்ணனுமான தாராஷுகோ என்ற புகழ் பெற்ற மேதாவி கி.பி. 1657ஆம் ஆண்டில், பல பண்டிதர்களின் உதவியைக் கொண்டு, ஐம்பது முக்கியமான உபநிஷத்துக்களைப் பார்ஸி பாஷையில் மொழி பெயர்த்தார். இந்தப் பார்ஸி மொழி பெயர்ப்பை வைத்தே ஐரோப்பியப் புலவர்கள் கி.பி 1801ல் லத்தீனில் முதன் முதலில் உபநிஷத்துக்களை மொழி பெயர்த்தார்கள். உடனே மேல் நாட்டில் உபநிஷத்துக்களின் பெருமை பரவிற்று. மொகலாய ராஜகுமாரன் தாராவின் உயர்ந்த அறிவும், ஸம்ஸ்க்ருதப் புலமையும், மேலான குணமுமே, உபநிஷத்துக்களின் பெருமை உலகம் முழுதும் பரவுவதற்குக் காரணமாக இருந்தன என்ற விசித்திரத்தை நாம் என்றும் மறக்கக் கூடாது.

- ஜி. சகுந்தலா, சென்னை - 24

குமரி மாவட்டத்தைச் சேர்ந்த திருத்தலம் பறக்கை. இங்குள்ள மதுசூதனப் பெருமாள் கோயிலில், சித்திரை மாதம் பத்தாம் நாள் சூரிய ஒளி மூலவரின் பாதங்களில் படும்படி கட்டப்பட்டிருப்பது ஒரு சிறப்பான அம்சமாகும்.

மிகவும் பிரசித்தி பெற்ற இந்தக் கோயில் மூலவருக்குப் படைக்கப்படும் தேங்காய் அளவுள்ள கொழுக்கட்டையை 'அமிர்த கலசம்' என்று கூறுகிறார்கள்!

**- வயலூர் மு. இராமசாமி.**

கரன்சி நோட்டுகளை நாம் பார்க்கும்போது அதைக் காகிதம் என்று எண்ணுவதில்லை. பணம் என்றுதான் எண்ணுகிறோம். ஆனால அவை உண்மையில் பிராமிசரி நோட்டுகள்தானே! I promise to pay the bearer the sum of... rupees' என்று அச்சிட்டு கவர்னரின் கையெழுத்து இருக்கிறது. பிராமிசரி நோட்டுகளை எவ்வாறு பணமாக நினைக்கிறோமோ அது போலத்தான் கோவில்களில் உள்ள சிலைகளை நாம் தெய்வமாக எண்ணி வணங்க வேண்டும். சிலையென்று எண்ணக் கூடாது.

- கி.வா.ஜா

தகவல்: **ஆர். சுப்பு**

குன்றுதோறும் குமரன் என்று நமக்குத் தெரியும். மதுரையிலிருந்து சுமார் நாற்பது கி.மீ தூரத்தில் திருமலை என்ற பெயரில் ஒரு கிராமம் உள்ளது. அங்கே ஒரு சிறு குன்றில் சிவ பெருமானுக்கு ஆலயம் உள்ளது. ஸ்வாமியின் பெயர்: மருக்கொழுந்தீஸ்வரர்!

நேரில் பார்த்தவர்: பெங்களூர் ஆர். கமலா

முருகப் பெருமானுக்குரிய அறுபடை வீடுகள் நமக்குத் தெரியும். விநாயகப் பெருமானுக்குரிய அறுபடை வீடுகள் எவை தெரியுமா?

திருவண்ணாமலை - அல்லல் தீர்க்கும் விநாயகர், திருமுதுகுன்றம் - ஆழத்துப் பிள்ளையார், திருவாலவாய் - சித்தி விநாயகர், திருக்கடையூர் - கள்ள விநாயகர், காசி - துண்டி ராஜவிநாயகர், திருநாரையூர் - பொல்லாப் பிள்ளையார்.

தகவல் : **கம்பம் அ. ராஜா ரஹ்மான்**

# என்றைக்குத் தடை செய்யப்படும் எண்டோசல்ஃபன்?

கேரளம் தாண்டி கர்நாடகாவைத் தொட்டாற் போல, காசர்கோடு மாவட்டத்தில் இருக்கிறது பாத்ரே கிராமம். இது என்மாகஜே கிராம பஞ்சாயத்தின் கீழ் வருகிறது.

இந்த பாத்ரே கிராமத்தில், 25 வயதுக்கு உட்பட்டவர்களில் பெரும்பாலானவர்களுக்குப் பலவகையான நோய்கள் தாக்கி வருகின்றன. குழந்தைகளில் பலருக்கு மூளை வளர்ச்சி குன்றியிருக்கிறது; உடல் வளர்ச்சி பாதிக்கப்பட்டிருக்கிறது. வலிப்பு நோய் சிலருக்கு. சிலருக்கு இரத்தப் புற்று நோய், கணையத்தில் புற்றுநோய். இன்னும் பலருக்குச் சரும நோய்கள். ஆஸ்த்துமா. வேறு சிலருக்கோ மன நோய். தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்குப் போனவர்களும் உண்டு. விதவிதமான வியாதிகள். இவற்றைக் குணப்படுத்துவதும் கடினம்.

இதை வெளியுலகுக்குத் தெரியப்படுத்திய முதல் நபர்: டாக்டர் ஒய்.எஸ். மோகன குமார். வருடம் 1996. மாதம் டிசம்பர். இதை அறிந்த விவசாயியும், பத்திரிகையாளருமான ஸ்ரீபாத்ரே இதைப் பற்றி விசாரித்து, நேரில் சென்று பாதிக்கப்பட்டவர்களைப் பார்த்து விட்டு வந்து, படங்களுடன் கட்டுரைகள் வெளியிட்டார்.



• ஸ்ரீ பாத்ரே



• மோகன குமார்

• ஸ்ருதிக்கு 7 வயது. உடல் ஊனத்துடன் பிறந்தவர். இவரது அம்மா கேன்ஸருக்குப் பலியாகிவிட்டார்.

மோகனகுமாரும், ஸ்ரீபாத்ரேயும், இந்த நோய்த் தாக்குதல்களுக்கு எல்லாம் காரணம் எண்டோசல்ஃபன் எனப்படும்

பூச்சிகொல்லி மருந்தை, அந்தப் பகுதிகளில் பயிராக்கப் படும் முந்திரித் தோட்டங்களில், மேலேயிருந்து தெளிப்பதுதான் என்று ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

இந்த முந்திரித் தோட்டங்கள் கேரள அரசுக்குச் சொந்தமான பிளான்டேஷன் கார்ப்பரேஷன் ஆஃப் கேரளாவைச் சேர்ந்தவை. 1976 தொட்டே எண்டோசல்ஃபன் மருந்தைத் தெளிக்கத் தொடங்கிவிட்டார்கள் என்கிறார்கள் பாத்ரே கிராமவாசிகள். தேனீக்கள், தவளைகள், மீன்கள் எல்லாம் இந்தப் பகுதிக்கு 'டாடா' சொல்லி விட்டுப் போய்விட்டன. கூடுதல் வருமானத்துக்காக தேனீ வளர்ப்பில் ஈடுபட்டிருந்த ஒரு சிலர் வயிற்றில் மண் விழுந்தது.

அந்தப் பகுதியிலிருந்த பள்ளிக்கூட ஆசிரியர்கள் இருவர், டிசம்பர் 26, 2000 அன்று மக்களைச் சேர்த்துக் கொண்டு மறியல் நடத்தினார்கள். டாக்டர் மோகனகுமார் கிராமவாசிகளுக்கு விஷயத்தை விளக்கமாகச் சொன்னார். ஸ்ரீபாத்ரே பிற செய்திப் பத்திரிகையாளர்களையும், டி.வி. செய்தியாளர்களையும் அழைத்து வந்து நிலைமையை விவரித்தார். பிப்ரவரி மாதம், இந்தப் பயங்கர நோய்த் தாக்குதலுக்கு ஆளானவர்கள் பற்றி 2001ஆம் ஆண்டு, கிட்டத்தட்ட உலகம் முழுக்க செய்தி பரவிவிட்டது. அரசு நிறுவனம் ஆயிற்றே, சும்மா இருக்குமா?

இவர்களின் நோய்களுக்கும் எண்டோசல்ஃபன் தெளிப்புக்கும் எந்தவித சம்பந்தமுமில்லை என்று மறுப்பு அறிக்கைகள் விடத் தொடங்கியது. 'மலையாள மனோரமா' நாளிதழில் வெளியான, மூளை பாதிக்கப்பட்ட கிட்டண்ணா என்ற சிறுவனின் புகைப்படத்தைப் பார்த்துவிட்டு, அவன் வீட்டுக்குப் போய், அவன் தகப்பனாரிடம் 'கிட்டண்ணாவின் நோய்க்கு, எண்டோசல்ஃபன் தெளிப்புத்தான் காரணமா என்று எனக்குத் தெரியாது' என்று அவர் கைப்பட ஒரு கடிதம் வாங்கிக் கொண்டது. இதுபோல் பிற நோயாளிகளின் வீட்டுக்கும் நிர்வாகத்தினர் போய்க் கேட்டபோதுதான் கிராமவாசிகள் விழித்துக் கொண்டார்கள். இவர்கள் தங்களுக்கு உதவுவதற்கு வரவில்லை என்று தெரிந்து கொண்டார்கள்! ஒரு போராட்டக் குழு உருவாக்கி, மாவட்ட கலெக்டருக்குப் புகார் கொடுத்தார்கள்.

"எண்டோசல்ஃபன் காரணமாகத்தான் இந்தப் பாதிப்புகள் உண்டாகின்றன என்று ஆதாரபூர்வமாக எதுவும் இல்லாதபோது, மருந்து தெளிப்பதை நான் நிறுத்த இயலாது" என்று கையை விரித்து விட்டார் கலெக்டர்.

அப்போது ஆட்சியின் கூட்டணியில் இருந்தும் கம்யூனிஸ்ட் கட்சி மக்களின் போராட்டத்தை ஆதரித்து. பா.ஜ.க.வும் இந்தப் போராட்டத்தை ஆதரிக்க முன்வந்தது. ஆனால் அரசியல் ஆகிப் போன பல பிரச்னைகளுக்கு



• மூன்று அடி உயர, மூளை வளர்ச்சி குன்றிய, நாராயன் நாயக்குக்கு வயது இருபது!



• மூளை வளர்ச்சி குன்றிய அவினாஷ், ஆஸ்துமா, வலிப்பு நோய்களாலும் பாதிக்கப்பட்டுள்ளார்.

முடிவு கிடைப்பது அபூர்வம் என்பதை உணர்ந்த பாத்ரே கிராமவாசிகள், நீதிமன்றத்துக்குச் சென்றார்கள். நீதிமன்றம் மருந்து தெளிப்புக்கு இடைக்காலத் தடை விதித்தது. (அப்படியும் கைபம்புகள் வைத்துக் கொண்டு மருந்து தெளித்தார்களாம்!)

"கிராமத்தில் ஒரு சுற்றுப் போய்விட்டு வந்தால் போதும். எத்தனை வீடுகளில் எத்தனை பேர் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று தெரிந்துவிடும்!" என்கிறார் ஸ்ரீபாத்ரே.

'எண்டோசல்ஃபன் பயங்கர விளைவுகளை உண்டாக்கும்' என்கிறது அமெரிக்கச் சுற்றுச் சூழல் பாதுகாப்பு அமைப்பு. 1993லேயே பிலிப்பைன்ஸ் நாடு இதற்குத் தடை விதித்துவிட்டது.

புதுதில்லியிலுள்ள 'சென்டர் ஃபார் சயன்ஸ் அன்ட் என்வயர்ன்மென்ட்' பாத்ரே கிராமத்துக்கு வந்து, சாம்பிள்களை எடுத்துக்கொண்டு போய், பரிசோதனை செய்தபோது, எல்லாவற்றிலும் அளவுக்கு அதிகமான எண்டோசல்ஃபன் இருப்பது தெரிய வந்தது.

பூச்சிகொல்லி மருந்து தயாரிப்பாளர்களின் குழு முடுக்கிவிடப்பட்டு, அவர்கள் தங்கள் பங்கு கோஷங்களை எழுப்பத் தொடங்கினார்கள். தேசிய மனித உரிமைக் கழகமும், இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகமும் தலையிட்டு, கேரளா, கர்நாடகா, கோவா மாநில சுகாதார அமைச்சர்களுக்கு அறிவுறுத்தின. விசாரணைக் குழுக்கள் அமைக்கப்பட்டு, தீவிர ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆகஸ்ட் 2001ல், காசர்கோடு மாஜிஸ்திரேட், ஆராய்ச்சியின் முடிவுகள் அதிகாரபூர்வமாக வெளியாகாதவரை



"பக்கத்து வீட்டிலே டீ.வி ரிப்பேராம்... உடனே ஒரு மெக்கானிக்கை அழைச்சுட்டு வாங்க..."

"அவங்க மேலே உனக்கு என்னடி இவ்வளவு அக்கறை?"

"நான் இங்கே மெகா சீரியல் பார்த்து அழுதுக்கிட்டு இருக்கேன். அங்கே அவங்க மட்டும் சந்தோஷமா இருக்காங்களே...!

- தஞ்சை தாமு

எண்டோசல்ஃபன் மருந்தைத் தெளிக்கக்கூடாது என்று தடை விதித்தார். இப்போது காங்கிரஸ் ஆட்சி. முதலமைச்சர் ஏ.கே. அந்தோணியும் தமது அரசு, குழு அறிக்கைகள் வெளி வருவது வரை, தடை விதித்தார்.

பூச்சி கொல்லி மருந்து உற்பத்தியாளர்கள் மறுபடி வேலையைத் தொடங்கினார்கள். புதுதில்லி விஞ்ஞான சுற்றுச்சூழல் மையத்தின் ஆராய்ச்சியைக் குறை கூறி, காஞ்சிபுரத்தில் உள் ஃபிரெடரிச் இன்ஸ்டிட்யூட் ஆஃப் ப்ளான்ட் ப்ரொட்டெக்ஷன் என்ற அமைப்பிடம் அறிக்கை தயாரித்துத் தரும்படி வேண்டுகோள் விடுத்தனர். (அறிக்கை தயாரித்துத் தர ஏராளமான பணம் செலவழிக்கப்பட்டதாம்!) அறிக்கையின் ஒரு சில பகுதிகளை மட்டுமே, பூச்சி கொல்லி மருந்து தயாரிப்பாளர் சங்கம் திருவனந்தபுரத்திலும், கோழிக்கோட்டிலும் பத்திரிகைச் செய்தியாளருக்கு வெளியிட்டது. எண்டோசல்ஃபனால் எந்தவித நோயோ, உடலுக்குப் பாதிப்போ ஏற்படாது என்று அடித்துச் சொல்லியது!

சமீபத்தில் ஆஸ்திரேலிய கெமிகல் ட்ரவ்மா அல்லயன்ஸ் அமைப்பின் தலைவர் ரெக்ஸ் வாரன், எண்டோசல்ஃபன் தூவுவதால் பாதிக்கப்படுவோருக்குப் பிறக்கும் குழந்தைகள் 'ஆடிஸம்' எனப்படும் நோய்க்கு ஆளாவர் என அறிவித்திருக்கிறார்.

ஜப்பானில் ஓர் ஆராய்ச்சி நிலையத்தில் பணிபுரியும் செந்தில்குமார் என்னும் விஞ்ஞானி, ஐக்கிய நாடுகளின் சுற்றுச் சூழல் குழு ஒன்று எண்டோசல்ஃபனால் பலகேடுகள் விளையும் என்று கூறியதை எடுத்துக்காட்டி, இந்தியாவில் அது நிச்சயம் தடை செய்யப்பட வேண்டும் என்று கூறியிருக்கிறார்.

அரசு என்ன செய்யப் போகிறது? மேற்கண்ட யோசனையை ஏற்றுச் செயல்படப் போகிறதா? அல்லது காசர்கோடு மக்களின் உடல் நலத்துடன் விளையாடப் போகிறதா? என்டோஸல்ஃப்பின் பரவலாகப் பயன்படுத்தப்படும் இதர பகுதிகளிலும் மக்கள் விழிப்புணர்வு கொள்வார்களா?

கடைசியாக வந்த செய்தி: - எண்டோசல்ஃப்பினைத் தெளிப்பதற்குத் தடை விதித்து ஆணை பிறப்பித்திருக்கிறது கேரள அரசு. ஆனால், பூச்சிக் கொல்லி தயாரிப்பாளர்கள் மறுபடி மேல்முறையீடு செய்வார்களாம்!

தொகுப்பு : சாருகேசி

சரவணனுக்குக் கண்ணைச் சுழற்றிக் கொண்டு வந்தது. தில்லியிலிருந்து விமானத்தில்தான் வந்திறங்கினார்கள் என்றாலும் பயணக் களைப்பு அவரை அசத்திற்று. சாயங்கால ஃப்ளைட்டில் வராமல் காலை ஃப்ளைட்டில் வந்தது தவறு. விமான நிலையத்துக்குக் கிளம்ப நாலரை மணிக்கே எழுந்து குளித்துத் தயாராக வேண்டியிருந்ததால் ஏற்பட்ட அசதி. ஆனால் ஊருக்குத் திரும்பிய நிம்மதியால் அலுப்பேற்படுத்தாத அசதி. நம்ம ஊரு.

# பொய்யில் பூத்த நிஜம்



நம்ம வீட்டுச் சாப்பாடு. மணக்க மணக்க முருங்கைக்காய் சாம்பார். பீன்ஸ் பொரியலும், அவருக்குப் பிடித்தமாக புதினாத் துவையலும், பூண்டு தட்டிப் போட்ட காரசாரமான மிளகு ரசமும், கொசுறு. இதற்கு எந்த சாம்ராஜ்யமும் ஈடில்லை என்று தோன்றியது. வட இந்தியன் எப்படித்தான் தினம் தினம் ரொட்டியையும் நெய் மிதக்கும் பருப்பையும் சாப்பிடுகிறானோ என்று அனுதாபம் ஏற்பட்டது.

சுகமாக வந்த நித்திரைக்குள் சரவணன் சந்தோஷமாக நழுவினார். அதரங்களில் தவழ்ந்த புன்னகையுடன், கம்பீர நடையுடன், அதன் புதை குகைகளில் சஞ்சரித்தார். குகை வாயிலில் இருந்த பூத கணங்கள் எல்லாம் அவரைக் கண்டதும் கைகட்டி வாய் புதைத்தன. நான் சொன்னது நடக்கும் இங்கு. நினைத்தது நிலைக்கும். அவரது மார்பு விரிந்தது. விரிந்து கொண்டே போயிற்று. குகையின் அகல நீளத்தை அடைத்தது. தனது விரியும் ஆக்ருதியைக் கண்டு அவருக்குப் பெருமையாக இருந்தது. தன்னிச்சையாக உடல் நகர்ந்தது. அண்டசராசரத்தை முழுவதுமாக ஆக்ரமித்த திருப்தியில் அவர் உரத்த குரலில் "நாமார்க்கும் குடியல்லோம். நமனை அஞ்சோம்" என்றார்.

இத்தனைக் கஷ்டமான தமிழ் அந்தப் பெண்ணுக்குப் புரியாது என்று நினைவு வந்தது. அந்தப் பெண். என்ன இழவு? அவளுடைய பெயர் நினைவுக்கு வரமாட்டேங்குது. காமாட்சியைக் கேட்கணும். அவளுக்கும் நினைவிருக்காது. மகாபாரதத்திலே வர்ற ஏதோ ஒரு பேரும்பா. திரௌபதியோ சுபத்திராவோ - அவர் மறுபடியும் குரலை உயர்த்தினார். 'நாமார்க்கும் குடியல்லோம். நமனை அஞ்சோம்'. பெண்ணே, உன் பெயர் என்ன

வாக இருந்தாலும் உனக்குப் புரியல்லேங் கறதைப் பத்தி எனக்குக் கவலையில்லை. கவலைப் பட வேண்டிய கட்டாயத்திலே நா இல்லேங்கறதை நீ புரிஞ்சுக்கணும்.

"நாங்க இல்லேன்னு சொல்லுங்க" என் றாள் காமாட்சி. "நானும் இல்லேன்னு சொல் லுங்க" என்றான் ராஜா. மீசை முளைக்காத வழுவழு கன்னத்துடன் அம்மாவின் கையைப் பிடித்துக்கொண்டு நிற்கும் ராஜா.



காமாட்சி நிக்கிறா - பையனைத் தலைப்பிலே மூடிஞ்சுகிட்ட எக்காளச் சிரிப்பு சிரிக்கிறா. ஈசுவரா, எத்தனை அசிங்கமா இருக்கு. அவ மூஞ்சி, அடியே, அவனைக் கெடுக்காதே, இல்லாத்தையும் பொல்லாத்தையும் சொல்லி ஏங்கிட்டேந்து விலக்கப் பார்க்காதே. அப்படி செஞ்சே, நான் பொல்லாதவனா யிருவேன்

மின்னலாய், வாள் சொடுக்காய் கை நீண்டு அவனை நோக்கிப் 'பளார்' என்று பதி கிறது. என்னை மீறிடு வியோ? கட்டையிலே போற சிறுக்கி -

# 20

"என்னங்க..."

சரவணன் கண் விழித்தார்.

காமாட்சி நின்றிருந்தாள். எந்தச் சேதமு மில்லாமல்.

"என்ன, கனாக் கண்டீங்களா தூக்கத் திலே பினாத்தறீங்க?"

என்ன கனா? கண் விழித்த மாத்திரத்தில் மறந்து போனது விந்தை.

"என்ன பினாத்தினேன்?"

"ஆமாம். பினாத்தலெல்லாம் தெளிவா இருக்குமாக்கும் - என்னவோ ஊ ஊன்னு சத்தம் போட்டீங்க, பகல் நேரத்திலே என்ன இப்படி தூக்கம்?"

அவர் கொட்டாவி விட்டபடி கண் ணைக் கசக்கிக்கொண்டார்.

"என்னவோ அலுப்பு. தூங்கிட்டேன். இப்ப அவசர வேலை என்ன இருக்கு?"

"வேலையிருந்தாதான் எழுந்திருப் பீங்களோ?" என்று அவள் நொடித்தாள்.

"உங்க சினேகிதர் சபாபதி வந்திருக் காப்பலே."

"வர்ரேன். உக்காரச் சொல்லு. காப்பி கொடுத்தியா?"

"எல்லாம் ஆச்சு. உங்களுக்குக் கொண் டாரவா?"

"வேண்டாம். இதப்பார்..." என்றார் மெல் லிய குரலில்.

"அந்தப் பெண்ணைப் பத்தின சங்கதி யெல்லாம் யார்கிட்டயும் சொல்ல வேண் டாம்."

அவள் எரிச்சலுடன் அவரைப் பார்த் தாள்.

"சொல்வேனா? என்னைப் பத்தி என்னன்னு நினைக்கிறீங்க?"

தான் சொல்லி அவள் கட்டுப்பட்டதான திருப்தியுடன் அவர் எழுந்தார்.

"ராஜா என்ன செய்யறான்?"

"இவ்வளவு நேரம் ஏதோ படிச்சுக்கிட் டிருந்தான்.

## வாஸந்தி

அவனும் இப்பத்தான் கண்ணசந்திருக்கான்."

"தூங்கட் டும்" என்றார் அவர், ராஜா ஒரு வயதுக் குழந்தையாகத் தொட்டிலில் உறங்கியபோது சொன்னதுபோல. எந்த இடைவெளியும் ஏற்பட்டிராதது போன்ற

இந்த சகஜ நிலையை நம்பமுடியாத பிரமிப்பு நெஞ்சின் ஓரத்தில் பதுங்கி நின்றது.

அவர் முகம் கழுவி வெளியில் வந்தபோது வரவேற்பறையில் காமாட்சியிடம் சபாபதி மெல்லிய குரலில் பேசிக் கொண்டிருந்தார்.

"வாடா வா" என்றார் சரவணன் சின்ன சிரிப்புடன்.

"நீ இன்னும் இங்கதான் இருக்கியா? அமெரிக்காவுக்குக் கிளம்பறதாச் சொன்னே?"

"அதுக்கு இன்னும் ஒரு வாரம் இருக்கு. உங்கிட்ட சொல்லாம கிளம்பிடுவனா? உனக்குத்தான் என் ஞாபகம் வர்றதில்லே. தில்லிக்குப் போறோம்னு சொன்னியா?" என்றார் சபாபதி.

"நாங்க என்ன உல்லாசப் பயணமா போனோம், இப்ப நீயும் கமலமும் கிளம்பற மாதிரி. ராஜாவுக்கு ஆக்ஸிடென்டுன்னு சாயங்காலம் சேதி வந்தது. காலை ஃப்ளைட்லே கிளம்பிட்டோம்" என்றார் சரவணன் இலேசான படபடப்புடன். பிறகு குரலை இறக்கி, "கிளம்பறவரைக்கும் டென்ஷன். போய் இறங்கினதும் என்ன மாதிரி செய்தி கிடைக்குமோன்னு பயம். முகமுழி காணக்கிடைக்குமான்னே இவ பயந்தா."

"ஏதோ கடவுள் புண்ணியத்திலே பிழைச்சு எழுந்துட்டான்."

"நான் தவிச்ச தவிப்பு அந்த ஏழுமலையானுக்குத்தான் தெரியும்" என்று காமாட்சி கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

"ஏதோ கடவுள் புண்ணியத்திலே பிழைச்சு எழுந்துட்டான்."

"அதான் கடவுள் ஒரு போனஸையும் சேர்த்துக் கொடுத்துவிட்டார்."

சபாபதி என்ன சொல்கிறார் என்று புரிந்து கொண்டு சரவணன் மௌனமானார்.

"உள்ளே கொஞ்சம் வேலையிருக்கு" என்று முணுமுணுத்தபடி காமாட்சி எழுந்து சென்றாள்.

அவள் பார்வையிலிருந்து மறைந்ததும், சபாபதி இலேசான மலர்ச்சியுடன் சொன்னார்.

"என்னால சுத்தமா நம்ப முடியல்லை சரவணன். தெய்வச் செயல்ங்கறது இதுதான். என்ன சொல்றே?"

"ஆ...மாம்" என்று சரவணன் இழுத்தார்.

"மெல்ல ஞாபகம் திரும்பும்னு டாக்டர் சொல்றாங்க."

"மெல்ல வரட்டும்!" என்றார் சபாபதி ரகசியம் பேசும் குரலில்."

"நினைவு வந்தாலும் இப்ப ஏற்பட்ற நெருக்கத்திலே பழசெல்லாம் சமாதானமாயிடும்."

சரவணன் தலையசைத்தார். "பார்ப்போம்" என்றார்.

ஐம்பது வருஷப் பழக்கமானாலும், புண்ணாகிப் போன ஓர் அந்தரங்க விஷயத்தை சபாபதியுடன் பகிர்ந்துகொள்ளக் கூச்சமாக இருந்தது. இவனிடம் பேசுவது தெருவுக்குச் சென்றுவிடும் என்று அச்சமேற்பட்டது. ஆனால் சபாபதி விடுவதாயில்லை.

"நீங்க ரெண்டு பேரும் தில்லிக்குக் கிளம்பிப் போயிருக்கீங்க, ராஜாவைப் பார்க்கன்னு உன் டிரைவர் பழனி சொன்னப்ப என்னாலே நம்பவே முடியல்லை. விபத்துன்னு சேதி கேட்டுக்கூட நீ போவேன்னு நினைச்சிருக்கல்லே. அத்தனை மூர்க்கனா இருந்தவனுக்கும் சதை ஆடிப் போச்சா?"

சரவணன் சற்று நேரம் மௌனமாக இருந்தார். பிறகு ரகசியம் பேசுவதுபோல சொன்னார்.

"அப்படின்னுதான் வைச்சுக்கயேன். சேதியைக் கேட்டதும் வீம்பு தளர்ந்து போச்சு. ஆனா எங்களைக் கண்டதும் ராஜா மறுபடி கோபப்படுவானோன்னும் இருந்தது. டாக்டர் கூப்பிட்டதுக்குப் போனோம். வந்தோம்னுதான் இருக்கும்னு நினைச்சேன். ஆனா இப்படி அவன் பழசை மறந்து போவான். அதுக்கு முந்தி இருந்த நெருக்கத்தைக் காண்பிப்பான்னு சத்தியமா நினைக்



**"என்னது...பீச்சுக்கு வரும்போது கூட 'லேப்டாப்' எடுத்துட்டு வரணுமா...?"**

**"என்ன பண்றது... உனக்கு நாள் தவறாம சுண்டல் எவ்வளவு வாங்கிக் கொடுத்தேன்னு கணக்கை ஞாபகம் வைச்சிக்கிறது சாத்தியப்படலையே!"**

**- எம். அருள்மூர்த்தி**

கல்லே."

"அதான் சொல்றேன். நம்ப முடியாத சினிமா கதை மாதிரியில்லே இருக்கு?"

"அப்படித்தான் இருக்கு."

"இந்த இரண்டு வருஷத்திலே என்ன பண்ணிக்கிட்டிருந்தான்? கல்யாணம் கார்த்தி ஏதாச்சும் உண்டா?"

சரவணன் வேலை மெனக்கெட்டு மேஜை மேல் இருந்த செய்தித்தாளை மடித்து ஒழுங்குபடுத்தினார். தாள்களுக்கிடையே சகுந்தலா நின்றாள். கிருஷ்ண விக்ரகம் போல் ஒரு குழந்தை "டாட்டா" என்றது.

"அதெல்லாம் எதுவும் நடக்கல்லே."

"அந்த மட்டுக்கு நிம்மதி. ஆகியிருந்தா பெரிய பிரச்னையாயில்லே ஆகியிருக்கும்."

"உன் பிரயாணத்தைப் பத்திச் சொல்லு" என்று சரவணன் பேச்சை மாற்றினார்.

சபாபதி பலே பேர்வழி. புருவ அசைவிலும் கண் பார்வையின் சலனத்திலும் சமிக்ஞைகளைப் புரிந்துகொள்வான். சந்தேகம் தட்டுவதாலேயே கேட்கிறானோ என்று அவருக்குக் குறுகுறுத்தது. நல்ல வேளையாக வெளிநாட்டுப் பயணத்தைப் பற்றிப் பேசும் உற்சாகத்தில் சபாபதி மேற்கொண்டு ராஜாவைப் பற்றி தூண்டித் துருவ மறந்து போனார். ஒரு வாரத்தில் அவனும் கமலமும் அமெரிக்கா கிளம்புவதும் தமது அதிர்ஷ்டம் என்று சரவணன் நினைத்துக் கொண்டார். கமலத்திடம் காமாட்சியே ஏதேனும் உளறி வைப்பாள். பெண்களின் வாயைக் கட்டுப்படுத்துவது சாத்தியமில்லை. ஆனால் வேறு யாரிடமும் காமாட்சி அந்தரங்கமாகப் பேசும் வழக்கமில்லை. சகுந்தலாவைப் பற்றி அவள் நிச்சயமாகப் பேசப் போவதில்லை. தன் பிள்ளையைக் கெடுத்து வசியம் செய்தவள் என்பது போல சகுந்தலாவின் பேச்சை எடுக்கும்போதெல்லாம் அவள் பேசியதை அவர் தடுக்கவில்லை. அப்படி காமாட்சி பேசும் போதெல்லாம் அவருக்கும் அவளுக்கும் இடையே இருந்த இடைவெளி குறைவது போலிருந்தது. பிள்ளையுடன் ஏற்படுத்திக் கொள்ள வேண்டிய புதிய உறவுக்கு இருவருடைய கூட்டு முயற்சி தேவை என்கிற பிரக்ஞை அவரைப் பலவீனப்படுத்திற்று.

"ரெஜிஸ்தர் கல்யாணம்கூட நடக்கல்லியா, ரொம்ப நல்லதாப் போச்சு" என்றாள் அவள் சந்தோஷத்துடன். "என்ன சொன்னீங்க அன்னிக்கு? சட்டப்படி ஒரு உரிமையும் கிடையாதுன்னு. ராஜாவுக்கு நினைவு திரும்பாதவரை அவ வாயைத் திறந்து எதுவும் கேட்க முடியாது."



"கலப்புத் திருமணத்துக்குப் போய் வந்தேன்..."

"அதுக்காக வேற வேற ஜோடி செருப்பையா மாட்டிக்கிட்டு வரணும்!"

- ஒழவெட்டி பாரதி ப்ரியன்

அவளுடைய சந்தோஷம் அவரை எந்த வகையிலோ உறுத்திற்று. மீண்டும் பழைய அருவை எட்டிப் பார்த்தது. அவர் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "அவனுக்கு நினைவு திரும்பலாம்னு டாக்டர் சொல்லியிருக்கார். மறந்துடாதே," என்றார்.

"திரும்பும்போது பார்த்துக்கலாம்" என்றாள் அவள் அலட்சியத்துடன். "நம்ம கூடத்தானே இருக்கப் போறான் இப்ப? அதுக்குள்ளாற என் வழிக்குக் கொண்டு வந்துட மாட்டேன்?"

பழைய கதை. பழைய வார்த்தைகள். திரும்பத் திரும்ப நிகழும் சரித்திரங்கள். மறையாத கோபங்கள். தனக்குத் தெரியாமல் ராஜா ஒரு பெண்ணைக் காதலித்தான், சேர்ந்து வாழ்ந்தான் என்பதே இவளால் ஏற்றுக் கொள்ள முடியாத குற்றமாகிப் போனது அவருக்குப் புரிந்தது. ஆனால் குற்றவாளியாக நிற்பது சகுந்தலா மட்டுமே என்பது சில சமயம் சங்கடப்படுத்தினாலும், காமாட்சியின் எரிச்சலில் நியாயமிருப்பதாகத் தோன்றியது.

"பழனி இருக்கானில்லே. காரை எடுக்கச் சொல்லு. நா கொஞ்சம் பீச்சுக்குப் போய் நடந்துட்டு வர்றேன்" என்று காமாட்சியிடம் சொல்லிவிட்டு வெளியில் வந்தார். காந்தி சிலையைத் தாண்டி மெரினா கடற்கரைச் சாலையில் நின்றிருந்த கார்களுக்கு இடையே இடத்தைப் பிடித்து பழனி வண்டியை நிறுத்

தியதும் அவர் இறங்கிக் கொண்டார். காற்றில் தாறுமாறாகப் பறந்த வேஷ்டியைப் பிடித்துத் தூக்கி முழங்காலுக்கு குறுக்காகக் கட்டி நடைபாதையில் நடக்க ஆரம்பித்தார். எதிரும் புதிருமாக வந்த ஜனக்கூட்டத்தை சந்திக்க விருப்பமில்லாமல் செருப்பைக் கழற்றி கையில் எடுத்துக்கொண்டு மணலில் புதையப் புதைய நடந்து கடற்கரையை ஒட்டினாற்போல மேடாக இருந்த இடத்தில் அமர்ந்து கொண்டார். இப்படிக் கடலைப் பார்த்து மணலில் உட்கார்ந்து வெகு காலமாயிற்று என்று நினைவு வந்தது. காமாட்சியுடன் இங்கு வந்து அமர்ந்த நினைவு அவருக்கு இல்லை. உறவே ஒட்டாமல் நழுவும் ஒரு பந்தத்தில், எந்த வகையிலும் சமனமில்லாத ஒரு பொருத்தத்தில், கடற்கரையில் சேர்ந்து அமர்ந்து என்ன செய்ய முடியும்? எதை ரசிக்க முடியும்?

பொது இடத்திற்கு, நிகழ்ச்சிகளுக்கு அவளை அழைத்துச் செல்லும்போதெல்லாம் ஆற்றாமை அதிகரிக்கும். அம்மாவும் பாட்டியும் அவருக்கும் அப்பாவுக்கும் தெரிவிக்காமல் ஜோஸ்யம் கேட்டு ஜாதகம் பார்த்து, குறி கேட்டு, பல்லி சகுனம் சொல்லி, சகல பொருத்தமும் இருப்பதாகச் சந்தோஷித்து செய்வித்த கல்யாணம். அம்மாவுக்குப் பிடித்தால் சரிதான் என்று பெண்ணைப் பார்க்காமலே செய்து கொண்ட கல்யாணம். சகல பொருத்தத்துக்குக் காரணம் நூறு ஏக்கரா நிலம் என்று திருமணத் தன்றே புரிந்து போனது. அம்மாவின் மேல் கோபம் வராமல் போனதற்கும் அதுவே காரணம் என்பதை ஒப்புக் கொள்ள அவருக்குக் கூச்சமேதுமில்லை. எல்லாருக்கும் எல்லாமா கிடைத்து விடும்?

ஜோடி ஜோடியாக ஆண் பெண்கள் இடையில் கைகோத்து தண்ணீரில் கால் வைத்து நின்று விளையாடினார்கள். 'கலீர் கலீர்' என்று சிரித்தார்கள். ஒரு ஜோடியைப் பார்த்தபோது அப்பாவின் ஞாபகம் வந்தது. அவனுடன்-, கோமதியுடன் அவர் இப்படித்தான அமர்ந்திருப்பார். ரொம்ப வருஷங்களுக்கு முன்னால் அப்பா தன்னை இதே மெரினா கடற்கரைக்கு அழைத்து வந்து சொன்னது நினைவுக்கு வந்தது. "கோமதியைத் தப்பானவளா நினைக்காதே. ரொம்ப நல்லவ". கோமதியின் வீட்டில்தான் அப்பா செத்துப் போனார். சரவணனின் கல்யாணத்திற்குச்




சடங்கிற்காக வந்தபோதே ஒரு மாரடைப்பை அனுபவித்திருந்தார். யாரும் அவருடன் முகம் கொடுத்துப் பேசவில்லை என்பதே சரவணனுக்குச் சமீப காலமாகத்தான் வேளை கெட்ட வேளையில் நினைவுக்கு வருகிறது. சாகக் கிடக்கிறார் என்று கோமதி இரண்டு தடவை சொல்லி அனுப்பினாள். பணத்திற்காகத் தான் அந்தச் செய்தி என்கிற நினைப்பில் சரவணனுக்குக் கால் எழவில்லை. கடைசி மூச்சு வரை 'சரவணன் வந்தானா?' என்று அப்பா கேட்டதாக யாரோ சொன்னார்கள். கோமதிக்கு அப்பாவின் சொத்தில் ஒரு நயா பைசா கிடைக்கவில்லை. அவருடைய புத்தகக் கடை கூட சரவணனுக்குத்தான் வந்து சேர்ந்தது. கோமதி வாயே திறக்கவில்லை. எதையும் கோரவுமில்லை.

அவள் வெகு சுலபமாக எல்லார் நினைவிலிருந்தும் விலகிப் போனது அவருக்கு எந்த குற்ற உணர்வையும் ஏற்படுத்தவில்லை. ஆனால் கடந்த இரண்டு ஆண்டுகளாக அப்பா கனவில் வருகிறார். 'சரவணன் வந்தாச்சா?' என்று கேட்கிறார். தாகத்திற்குத் தண்ணீர் கொடு என்று இறைஞ்சுகிற மாதிரி, கனவிலிருந்து விழித்துக் கொள்ளும்போது நெஞ்சு



"அமெரிக்கா போறாங்க; ஆஸ்திரேலியா போறாங்க; சிங்கப்பூர், மலேஷியாவுக்குக்கூட கூட்டம் சேருது. ஆனா சமீப காலமா பிரிட்டனுக்கு, சுற்றுலாப் பயணிகள் வர்றது குறைஞ்சுக்கிட்டே இருக்குது... எதாவது பண்ணி, நிறைய அயல்நாட்டுப் பயணிகளைக் கவர்ந்து இழுத்தே ஆகணும்" என்று பிரிட்டிஷ் டூரிஸ்ட் அதாரிட்டி (பி.டி.ஏ) வேட்டியை வரிஞ்சு கட்டிக்கொண்டு செயலில் இறங்கியுள்ளது.

அதிலும் வரப் போகும் இங்கிலாந்து மகாராணியின் பொன்விழா மற்றும் மான்செஸ்டர் காமன்வெல்த் விளையாட்டுப் போட்டிகளை மனத்தில் கொண்டு வெளியுறவு, விளையாட்டு கலாசாரத் துறைகளும் களத்தில் இறங்கியுள்ளதால், 'யூ.கே.ஓ.கே' என்ற தாரக மந்திரம் எங்கும் ஜொலிக்கிறது.

லண்டன் கோபுரத்தில் 'யூகே.ஓகே' என்ற எழுத்துக்கள் இரவில் மின்னனொளியாய்த் தெரிகின்றன.

- ஆர். லலிதா

நடுங்குகிறது. உடல் வியாததுப் போகிறது. கன்வில் இறைஞ்சுவதுதான் தானோ என்று சந்தேகம் வருகிறது.

சந்திரனைக் கேட்டிருந்தால் குற்ற உணர்வு என்று மனோவியல் மருத்துவ விளக்கம் கொடுத்திருப்பான், மடையன். எனக்குக் கோபம் வந்தது நியாயமானது. அப்பா செய்தது குற்றம். சட்டத்துக்கு விரோதம். அதேபோல ராஜா செய்ததும் குற்றமாக அவருக்குக் கூசிற்று. அது சட்டப்படி குற்றமில்லை என்றார் டாக்டர். ஆனால் அவர் புழங்கும் சமூக நடைமுறைப்படி குற்றம். ஒரு விநாடி சகுந்தலாவின் முகம் நிழலாடிற்று. முட்டாள் பெண். காமாட்சி ஏத்துக்கிறது இருக்கட்டும், என்னாலேயே அவ்ளை மருமகளா ஏத்துக்க முடியாது. ஒரு குழந்தை வேற - லட்சணமான, கிருஷ்ண விக்ரகம் மாதிரி. வயித்தெரிச்சல் - இந்தப் பயல் ராஜாவுடைய ரத்தத்துக் குள்ளே அவன் தாத்தாவோட ரத்தம் ஓடுவதுபோல.

அவர் மெல்லிய பெருமூச்சு விட்டபடி நடந்தார்.

"யாரு சரவணனா?"

அவர் திரும்பினார். சபாபதியின் சம்பந்தி ரத்தினமும் அவருடன் கூட ஒருவரும் நின்றிருந்தார்கள்.

"எப்படியிருக்கீங்க? தில்லிக்குப் போயிருந்ததா கேள்விப்பட்டேன்."

சபாபதி அதற்குள் தண்டோரா போட்டு விட்டான் என்று எரிச்சல் வந்தது.

"ஆமாம், இன்னிக்குத்தான் வந்தோம்."

"இப்பத்தான் உங்களைப் பத்திப் பேசிக் கிட்டிருந்தோம்."

"என்னைப் பத்திப் பேச என்ன இருக்கு?"

சபாபதி என்ன சொன்னானோ என்று குறுகுறுத்தது.

"வேறே ஒண்ணுமில்லே..." என்று சிரித்தார் ரத்னம்.

"இவர் என்னுடைய மச்சான். ஒரே பொண்ணு இவருக்கு. எம்.ஏ படிச்சிருக்கா. நல்ல வரன் சொல்லுங்கன்னு கேட்டுக்கிட்டிருந்தார். உங்க மகனுக்கு இன்னும் கல்யாணமாகல்லே இல்லே?"

"இல்லே" என்றார் சரவணன் தயக்கத்துடன்.

"உடம்பு சரியில்லாமல் இருந்தான். இன்னும் நார்மல் ஆகல்லே. கல்யாணம்னா டாக்டரைக் கேட்கணும்" என்றவரின் நினைவுக்களுக்கிடையே சகுந்தலா காணாமல் போனாள்.

(தொடரும்)

# சட்டம் உண்டு;



குடிசைப்பகுதி ஒன்றில் வசித்து வரும் ஏழைப் பெண் மெர்சி. படிப்பு அவ்வளவாக இல்லை. அருகிலிருக்கும் குடியிருப்புப் பகுதியில் வசித்த ரமேஷ், பெயிண்டிங் காண்ட்ராக்டர். வசதியான குடும்பம். இரண்டும் கிறிஸ்தவக் குடும்பங்கள். இருவருக்கும் கண்டதும் காதல் ஏற்பட்டபோது, அவர்களது பொருளாதார ஏற்றத்தாழ்வு கண்களுக்குப் புலப்படவில்லை.

ஏசு படத்தின் முன்னிலையில் உன்னையே திருமணம் செய்து கொள்வேன் என ரமேஷ் கூறியதையடுத்து, தன்னையே பரிசாகத் தந்துவிட்டாள் மெர்சி. விளைவு, நான்கு மாத கர்ப்பம். வீட்டுக்குத் தெரிந்தவுடன் இரு வீட்டாரும் சந்தித்துப் பேச, சண்டை, சச்சரவுகள் என காலம் கடந்து போகிறது. அதற்குள் பெண் குழந்தை ஒன்று மெர்சிக்குப் பிறந்துவிடுகிறது. பெண் குழந்தை ரெபெக்காவுக்கு ஒன்றரை வயதாகும்போது, தன்னை மணம் செய்து கொள்ள மறுக்கும் ரமேஷ் குறித்து மகளிர் சட்ட உதவி மையத்தில் புகார் செய்கிறாள் மெர்சி.

நீதிமன்றத்தில் வழக்காக மாறுகிறது அப்புகார். வழக்கின் துவக்கத்தில் மெர்சி பெற்றெடுத்தது தன் குழந்தையே இல்லையென மறுக்கிறான் ரமேஷ். மரபணு சோதனை மூலமாக ரமேஷின் குழந்தைதான் அது என உறுதியாகிறது. தந்தை ஸ்தானத்தை மட்டும் ஏற்றுக் கொண்டு கோர்ட் வாயிலாக அக்குழந்தையின் பராமரிப்புக்காக மாதம் இருநூற்றைம்பது ரூபாய் தந்து வருகிறான் ரமேஷ். குழந்தைக்குத் தகப்பன் ரமேஷ்தான் என்று அடையாளம் காட்டிய சட்டத்தால், அவனே மெர்சியின் கணவன் என்று அதிகாரபூர்வமாக கூற இயலவில்லை. மணமாகாத ஆண் – பெண் இருவரை, அவர்கள் இருவரின் ஒப்புதலின்றி வற்புறுத்தி கணவன் – மனைவியாக வாழச் செய்து குடும்பக் கூட்டுக்குள் சிறை வைக்க சட்டத்தில் இடமில்லையாம்.

மெர்சியை கர்ப்பமடையச் செய்த குற்றத்திற்காக ரமேஷுக்கு மூன்று மாத சிறைத் தண்டனை வழங்கியுள்ளது நீதிமன்றம். அதனை எதிர்த்து அப்பீல் செய்துள்ளான் ரமேஷ். மெர்சி – ரமேஷ் இருவரும் அவரவரது பெற்றோர்களுடன் தனித் தனியே வசிக்கின்றனர். போராடி தன் பெயருக்கு முன்னே இனிஷியலைப் பெற்றுக் கொண்ட பெண் குழந்தை ரெபெக்காவுக்கு இப்பொழுது வயது ஐந்து. முதல் வகுப்பு படிக்கும் ரெபெக்காவின் படிப்பு மற்றும் துணிமணி செலவுகளை, சில தொண்டு நிறுவனங்கள் ஏற்றுள்ளன. மெர்சி, இப்பொழுது வீடுகளில் பத்துப் பாத்திரம் தேய்த்து ஜீவித்து வருகிறாள்.

தலித் பெண் அமுதா. வயது 23. பிளஸ் டூ வரை படிப்பு. சொந்த ஊர் கிரனூர். பதினைந்து வயது மூத்த ஒருவரை அமுதாவுக்குத் திருமணம் செய்து வைக்கின்

# நீதி இல்லை!

றனர் பெற்றோர்கள். கணவருக்குக் கை நிறையச் சம்பளம். திருச்சியில் பிரபல பொதுத் துறை நிறுவனம் ஒன்றில் வேலை. வீட்டில் சந்தேகப்பிராணி. விளைவு, இல்லறத்தில் அடுத்தடுத்து வீழ்ச்சி. முதல் மனைவி விவாகரத்து. இரண்டாவது மனைவி ஏதோ ஒரு காரணமாக இறந்து போகிறாள். மூன்றாவது மனைவி தனியே பிரிந்து போய் வாழ்கிறாள். அமுதா அவருக்கு நான்காவது!

* உ. நிர்மலாராணி

மகள் படும் சித்ரவதைகளை அறிந்த பின்புதான், அவருக்கு ஏற்கெனவே மூன்று மனைவிகள் எனத் தெரிய வந்துள்ளது பெற்றோர்களுக்கு. இனி என்ன செய்வது? வாழ்க்கை கசந்து போகிறது. அமுதா ஏழு மாத கர்ப்பமாக இருந்த போது, வலுக்கட்டாயமாக அவரை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று கருக்கலைப்பு செய்ய வைத்திருக்கிறார். அவர் எதிர்பார்த்தபடி குழந்தை இறந்தே பிறந்துள்ளது. அதன் பின்னரும் மனத்தில் பெரும் சுமையுடன் வீட்டுக்கு வந்து ஓய்வெடுத்த அமுதாவை ஒரு நிமிடமும் நிம்மதியாய் இருக்க விடவில்லையாம் அந்தக் கொடூரன்.

அவனது வன்கொடுமையிலிருந்து தப்பித்து வெளி வந்து மகளிர் சட்ட உதவி மையத்தை அமுதா நாடிய பிறகு, அந்த நபர் தாம் வேலை பார்த்த நிறுவனத்திலிருந்து வி.ஆர்.எஸ். பெற்றுக் கொண்டார். வழக்கு நீதிமன்றத்திற்கு வந்தபோது அவனிடமிருந்து சட்டப்படியான ஜீவனாம்ச தொகை எதுவும் பெற்றுத்தர இயலவில்லை. மாறாக, அவரது வங்கிக் கணக்கிலிருந்து கோர்ட் மூலமாக நாற்பதாயிரம் ரூபாய் மட்டுமே அமுதாவுக்கு வாங்கித் தர முடிந்தது. அமுதா பெயரில் வங்கியில் அந்தப் பணம் டெபாசிட்டாக உள்ளது.



* அமுதா

ஒரு பெண் வழக்கறிஞர் வீட்டில் சமையல் செய்வது, மற்றும் அவர்களது குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது என தன் வாழ்க்கையை எதிர்கொண்டு வருகிறாள் அமுதா.

**ப**டித்தீர்களா? பெண் உரிமைகள் கோரும் இத்தேசத்தில்தான் இந்தக் கொடுமைகள். இது சாம்பிள்தான். இவற்றிற்குச் சமூகம் என்ன சொல்லப்போகிறது" என்று கேட்கிறார் மகளிர் சட்ட உதவி மையத்தின் திருச்சி மாவட்ட செயலாளர் நிர்மலா ராணி.

எத்தனையோ விதமான புகார்களும், சொத்து தொடர்பான பிரச்னைகளும் மகளிர் சட்ட உதவி மையம் நோக்கி வருகின்றன.

"கணவன் – மனைவி சம்பந்தப்பட்ட விஷயங்களில் இருவரையும் வர வழைத்து, இரண்டு மூன்று அமர்வுகள் பேசிய பிறகே தகுந்த ஆலோசனைகளை வழங்கி வருகிறோம். பிரிந்து செல்ல இருந்த கணவன் மனைவியரிடையே இணக்கம் ஏற்படுத்தி அவர்களை ஒன்று சேர்த்து வைத்ததும் உண்டு. பேச்சு வார்த்தைகள் மூலம் தீர்க்க முடியாத பிரச்னைகளில் காவல்துறையை அணுகுவதற்கோ, சட்ட ரீதியான நடவடிக்கைகள் எடுப்பதற்கோ ஆலோசனைகள் வழங்கி அதில் நேரடியாகவும் ஈடுபட்டு வருகிறோம்.

"வரதட்சணைக் கொலைகள், பாலியல் வன்முறை போன்ற கடுமையான குற்றங்களில் எந்த விதமான பேச்சுவார்த்தைகளுக்கும் இடமளிக்காமல், குற்றவாளிகளுக்குச் சட்டப்படியான தண்டனையை, வழக்குகள் நடத்தி வாங்கிக் கொடுத்து வருகிறோம்!" என்கிறார், நிர்மலா ராணி.

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# இங்கிலீஷ் சட்னி!

மெகா சீரியல்கள் பார்த்துப் பார்த்து, அலுத்துப் போன (சே!சே! இருக்காது... அப்படியெல்லாம் ஆகுமா என்ன?) தாய்க்குலங்கள், மதிய நேரத்தில், சமையல்கலை, அழகுக் குறிப்பு நிகழ்ச்சி எனவும் இளைப்பாறுவது உண்டு இல்லையா! அதை மனத்தில் கொண்டு, சாய் ப்ரியாவை களம் இறக்கி விட்டுள்ளது ஜெயா டீ.வி.

சாய் ப்ரியா, ஃபாஷன் டெக்னாலஜி படிச்சவராச்சே! விதவிதமான ஆடை வடிவமைப்பு பற்றி டிப்ஸ் தருகிறார். தையலில் ஆர்வமுள்ள தையல்கள் சாய்ப்ரியா பக்கமாகச் சாய்வதாகக் கேள்வி!

யூகி சேது எப்போ பார்த்தாலும், சட்னி பற்றியே பேசுகிறார். தேங்காய் பத்தை, ஒரு கைப்பிடி பொட்டுக் கடலை, பச்சைமிளகாய், உப்பு வைத்து 'நச்நச்' என்று அம்மியில் அரைத்து வழிக்கும் சாதா சட்னி அல்ல! இது கென்டகி சட்னி!

தேஸி இங்க்லீஷ் படம்! தென்னிந்திய கம்ப்யூட்டர் இன்ஜினியர் ஒருவர், அமெரிக்கப் பெண்ணைக் காதலிக்கிறார்.

அப்புறம் என்ன? காதல், காமெடி, கல்யாணம்னு ஜாலியாகப் போகிறதாம் கதை! யூகியே எழுதி, இயக்கி, நடித்திருக்கிறார். வாய்ச்சவடால் அடிக்கும் ஜாலி கதாநாயகன் வேஷமாச்சே! வாஷிங்மிஷினில் போட்டது போல வெளுத்துக் கட்டுகிறாராம்! அப்போ டீ.வி? "அதெல்லாம் மறந்துடுங்க..."என்கிறார்.


• சாய்ப்ரியா

● தினமும் பிரபல நாளிதழ்களைப் படிப்பதால் 'அழகி' என்ற சொல்லைப் பிரயோகிக்கவே தயக்கமாக இருக்கிறது. ஆனால் இங்கே சொல்லியே ஆக வேண்டும்: 'அழகி' படத்தில் குட்டி நந்திதாதாஸாக நடித்த சிறுமி ஸ்ருதி, ஏழு ஸ்வரங்களில் சிரித்து சந்தோஷப்பட்டார். காரணம் : 'ரமணா' படத்தில் பரதநாட்டிய டான்ஸராகவே

நடிக்கிறாராம். "இளமேதைகள் ஸ்ருதிதானே?" என்று போகுமிடமெல்லாம் விசிறிகள் சூழ்ந்து கொள்கிறார்களாம்.


படம்: யோசா

• யூகி சேது

● 'மிஸ் இந்தியா கிரீடம் எனக்கே!' என்று மிகவும் நம்பிக்கையுடன் போட்டியில் கலந்து கொண்டார் மேதா. ஆனால் 'அஸ்கு... புஸ்கு... ஆசை.. தோசை..!' என்று சொல்லி விட்டார்கள். அதனால் என்ன? மேதா ஒன்றும் மனசொடிந்து போகவில்லை. மறுபடியும் மாடலிங், 'நங்கூரினி' என்று பிஸியாகி விட்டார். ஞாயிறு தோறும் ஜெயா டீ.வி.யில் பகல் பன்னிரண்டு மணிக்கு ஒளிபரப்பாகும் 'சும்மா...சும்மா..!' நிகழ்ச்சியைப் பாருங்கள்.

● உண்மையைச் சொல்லணும்னா, அந்த மெகா தொடருக்கு, 'அருள்மொழி ஐ.பி.எஸ்' என்ற பெயரைத்தான் சூட்டியிருக்கணும். ஆனால் தாய்க்குலங்கள் ஆரத்தி சுற்றி வரவேற்காமல் போய்விட்டால் என்ன செய்வது என்று சின்ன யோசனை. 'மாங்கல்யம்' என்று மங்களகரமாகப் பெயர் வைத்து விட்டார்களாம்!

சன் டீ.வியில் ஒளிபரப்பாகும் இந்தத் தொடரில் காவல்துறை அதிகாரியாக நடித்திருப்பவர் யுவராணி. "ஐ.ஜி. ரோல்ல நடிக்கணும்னு டைரக்டர் பத்ரி சொன்னதும், 'எனக்கு போலீஸ் உடை நல்லா இருக்காது' என்று மறுத்துவிட்டேன். ஆனால் அவர் விடுவதாயில்லை. காக்கிச் சட்டை தொப்பியுடன் இரண்டு மூன்று காட்சிகளில் நடிக்கச் செய்தார். என் நடிப்பை என் கணவரே பாராட்டியதும்தான், சந்தோஷமாக ஒப்புக் கொண்டேன்" என்றார் யுவராணி.

போலீஸ் குறை கேட்கிற காட்சி இருக்குங்களா மேடம்?

● 'விடாது கறுப்பு' தொடரில் சந்தித்து, காதல் கனிந்து கல்யாணமும் செய்து கொண்ட தேவதர்ஷினி _ சேத்தன் ஜோடிக்கு ஒரு குறை. கணவன் _ மனைவி சேர்ந்து நடிக்கிற மாதிரி சான்ஸே வரமாட்டேங்குதாம்.

● செட்டிநாட்டு கீழப்பூங்குடி கிராமத்தில் உள்ள வீடுகளுக்கெல்லாம் திடீர் நட்சத்திர அந்தஸ்து கிடைத்திருக்கிறது. ஒரு நாள் வாடகை என்பது போய் மணிக்கணக்குக்கு வசீகரமான தொகை பேசப்படுகிறதாம். 'அண்ணாமலை' டீ.வி. தொடரின் படப்பிடிப்பு நடக்கும் ஊராச்சே!

**— சார்லி சாப்ளின்**

படங்கள் உதவி : **நாராயணன்**

• ஸ்ருதி

# சிரிக்க வைக்கிறார் சிட்டி



• பெ.சு. மணி

விஷமம், நையாண்டி, கிண்டல், கேலி, நகைச்சுவை ஆகிய எல்லா அர்த்தங்களையும் புலப்படுத்துகிற மாதிரி தமிழில் ஒரே சொல் உண்டா? உண்டு. அந்தச் சொல்தான் 'சிட்டி!' தி.ஜா.வின் நெருங்கிய நண்பராயிருந்த எழுத்தாளர் சிட்டி பி.ஜி. சுந்தரராஜன். வெறும் 93 வயது மட்டுமே ஆன குறும்புக்கார இளைஞர்! அவருடன் அண்மையில் எடுக்கப்பட்ட ஒரு மினி பேட்டி:

கே: நீங்கள் எழுதிய முதல் படைப்பு என்ன? எந்த வயதில் எழுதினீர்கள்?'

ப: என் ஐந்து வயதிலேயே அதை எழுதி விட்டேன். அதன் சிறப்பு காரணமாக, எத்தனையோ வருஷங்களுக்குப் பிறகு, இன்றுகூட ஏராளமான தமிழர்கள் அந்தப் படைப்பை ஞாபகத்தில் வைத்திருக்கிறார்கள். அனா, ஆவன்னா ஆகிய உயிரெழுத்துக்கள்தான் அந்தப் படைப்பு!

கே: முதல் கதையை எழுதியபோது உங்கள் மன நிலை எப்படி இருந்தது?

ப: ஒருவேளை என் கதைக்கு நோபல் பரிசு கிடைத்துவிட்டால், பரிசை எந்த வாக்கியங்களால் நிராகரிப்பது என்று யோசித்துக் கொண்டிருந்தேன்!

இப்படித்தான் எப்போதும் பேசிக் கொண்டிருப்பார் சிட்டி. சிடுமூஞ்சிச் சிகாமணிகள் முகத்தில்கூட, ஒரு சின்னப் புன்னகைக் கீற்றையாவது மலரச் செய்கிற சாமர்த்தியம் அவருக்கு உண்டு.

சிட்டி, தி.ஜா.வின் 'அம்மா வந்தாள்' நாவல் பற்றி என்னிடம் ஒரு கமென்ட் அடித்தார். அதன் கதாநாயகியான அலங்காரத்தம்மாள் கள்ளக் காதலனுடன் உறவாடுபவள். அவள் தன் பாவத்தைத் தொலைக்க, கடைசியில் தன்னந்தனியே காசிக்குப் போக நினைப்பதாய் நாவல் முடியும். 'காசிக்குப் போகும்போது தன் கள்ளக் காதலனையும் கூட்டிக் கொண்டு போவதாகத்தான் அவர் நாவலை முடித்திருக்க வேண்டும். அலங்காரத்தம்மாளுக்கு அந்த அளவுக்குக் கொழுப்பு ஜாஸ்தி!" என்றார் சிட்டி. இதை தி.ஜா.விடம் சொன்னேன். அவர் வெகு நேரம் சிரித்துக்கொண்டிருந்தார்.

சிட்டியின் தனிச் சிறப்பு, பேசும்போதே சடாரென்று அழகழகான ஆனால் விஷமம் நிறைந்த குட்டிக் கதைகளை உண்டு பண்ணிச் சொல்வது. கும்பகோணத்திலிருந்து ஓர் எழுத்தாளர் வந்தார். சிட்டியைப் பார்க்க விரும்பினார். அழைத்துச் சென்றேன். சிட்டி என்னிடம் 'உனக்கு ராமாயணம் தெரியுமோ?" என்று ஆரம்பித்தார். எனக்கு ஜாக்கிரதை அதிகம். ஏதோ கொஞ்சம் தெரியும் என்று தயக்கத்தோடு சொல்லி வைத்தேன். சிட்டி தன் ராமாயணத்தை ஆரம்பித்தார்.

"ராமன், சீதை, லட்சுமணன் மூவரும் காட்டில் போய்க்கொண்டிருந்தார்கள். திடீரென லட்சுமணன் "அண்ணா, நான் ஏன் உன்னுடன் வர வேண்டும்? உன்னைத் தானே அப்பா காட்டுக்குப் போகச் சொன்னார்? நீ மனைவியோடு வந்திருக்கிறாய். நான் ஊர்மிளையை விட்டு வந்துவிட்டேன். சே!" என்று சலித்துக்கொண்டு திரும்பி நடந்தான். சீதை "பிராணநாதா! நான் இதுவரை படித்த எந்த ராமாயணத்திலும் இதுபோன்ற சம்பவம் வந்ததில்லையே!'' என்றாள். "கொஞ்சம் பொறு, புரியும்" என்றார் ராமர். சற்று நேரம் சென்றது. லட்சுமணன் ஓடோடி வந்தான். "அண்ணா, நான் ஏன் அப்படிப் பேசி



• நரசய்யா

னேன் என்று எனக்கே தெரியவில்லையே! நானே விரும்பித்தானே உன்னுடன் வந்தேன். உன்னைப் பிரிந்து என்னால் எப்படி இருக்க முடியும்!'' என மன்னிப்புக் கேட்டுக் கொண்டு உடன் நடந்தான். ராமன் சீதையிடம் "புரிந்ததா?" என்று கேட்டார். "புரியவில்லையே!" என்றாள் சீதை. 'நாம் இதுவரை நடந்து வந்த பூமி கலியுகத்தில் கும்பகோணம் என்று க்ஷேத்திரமாகப் போகிறது. அது தன் சுபாவத்தை இப்போதே காட்ட ஆரம்பித்து விட்டது!'' என்றார் ராமர்!'' (வந்த எழுத்தாளர் வெகுநேரம் சிரித்து அவர் கண்ணில் நீர் கட்டிக் கொண் டது. இந்தக் கதையில் கும்பகோணம் என்ற ஊர், வரும் எழுத்தாளரைப் பொறுத்து திரு நெல்வேலி, மதுரை என்று விதவிதமாகப் பெயர் மாற்றம் கொள்ளும்!)

சத்தியவான் சாவித்திரியை நினைவு படுத்தும் வகையில் 'காரடையான் நோன்பு' என்று ஒரு பண்டிகை. பெண்கள் வெல்ல அடை தட்டி அந்தப் பலகாரத்தைக் கட வுளுக்குப் படைப்பார்கள். பின் மங்கலச் சரடைக் கழுத்தில் கட்டிக் கொள்வார்கள். அந்த அடை சிட்டிக்குப் பிடிக்காது. அதை எதிர்த்து அவர் 'நவீன சாவித்திரி' என்று ஒரு கதை உண்டு பண்ணியிருக்கிறார்!

கணவன் உயிரைத் தருமாறு எமனிடம் வேண்டினாள் சாவித்திரி. எமன் தர முடி யாது என்று கறாராகச் சொல்லிவிட்டான். வேறு வழியில்லாத அவள், ஒரு யுக்தி செய் தாள். பலகாரம் சாப்பிட்டுச் செல்லுமாறு எமனை உபசரித்து இந்த அடையைச் செய்துபோட்டாள். சாப்பிட்டான் எமன். உலகில் இப்படியும்கூட ஒரு பலகாரமா என்ற தாளாத துக்கத்தில் எமன் உயிரை விட்டுவிட்டான். அதனால் பிழைத்தான் சத்தியவான்! (பெண்கள் கழுத்தில் கட்டிக் கொள்ளும் சரடு ஒரு புறமிருக்க, இந்தக் கதையைக் கேட்பவர்கள் சிட்டி விடும் சரடை எண்ணிச் சிரித்துக் கொண்டிருப் பார்கள்!)

சிட்டி, பரமாச்சாரியாரின் பக்தர். இலக்கியத்தில் பழங்கால இரட்டைப் புலவர்கள் போல, இரட்டையரில் ஒருவராக இயங்குவதிலேயே மகிழ்ச்சி காண்பவர். கு.ப.ராவுடன் 'கண்ணன் என் கவி', தி.ஜா.வுடன் 'நடந்தாய் வாழி காவேரி', சிவபாத சுந்தரத்துடன் நாவல், சிறுகதை வரலாறுகள், பெ.சு.மணியுடன் வ.ரா. வரலாறு எனச் சிட்டி இணைந்து படைத்த நூல் ஒவ்வொன்றும் பெரும் சாதனை. பி.ஜி. உட்ஹவுஸ் தனிப் பட்ட முறையில் சிட்டிக்கு எழுதிய கடி தம் ஒன்று சிட்டியிடம் உண்டு. வேளாண்



• சிட்டியுடன் சிவபாத சுந்தரம்

விஞ்ஞானி, எம்.எஸ். சுவாமிநாதனின் மாமியரான எழுத்தாளர் கிருத்திகாவும் சிட்டியும் பைண்டிங் நோட்டுப் புத்தகங் களில் எழுதிக் கொண்ட மிக நீண்ட கடி தங்கள் இலக்கிய வரலாறாய்த் திகழ்பவை. எழுத்தாளர் நரசய்யா அண்மையில் எழுதி வெளிவந்துள்ள 'சாதாரண மனி தன்' என்ற சிட்டியைப் பற்றிய வாழ்க்கை வரலாற்று நூல் அவர் பெருமையைப் பேசுகிறது.

தில்லி, பாண்டிச்சேரி போன்ற சில இடங்களில் சில கூட்டங்களுக்கு நானும் சிட்டியும் ஒன்றாகப் போயிருக்கிறோம். அப்போது அவருடன் தங்கிக் கழித்த நாட்கள் நான் மலர்ச்சியுடன் சிரித்துச் சிரித்து வாழ்ந்த பொன்னான நாட்கள். அறிவாளிகள் என்றால், நகைச்சுவை உணர்வற்று சீரியஸ்ஸாகத் தான் இருப் பார்கள் என்ற பொதுவிதிக்குச் சிட்டி விதிவிலக்கு. எந்த சோகத்தாலும் பாதிக் கப்படாத அவரது அபாரமான நகைச் சுவை உணர்வுக்கு இயற்கை தந்த அன்புப் பரிசுதான் அவருடைய தற்போதைய வயது.

திருப்பூர் கிருஷ்ணன்

# எதிர்மறையெச்சங்கள்

பயம் ஊட்டிய
தைரியத்தில்
குளவியாகி விடுகிறது...
பச்சைப்புழு...

அழகான பேச்சால்
அடைபட்டு விடுகிறது
கூண்டிற்குள்...
கிளி...

நீந்துவது
பிறவிக் குணமென்றாலும்
வலையில் சிக்குகிறது...
மீன்...

நன்கு வளர்ந்து
முதிர்ந்த உடன்
வெட்டுப் படுகிறது...
மரம்...

வாழ்ந்து
கொண்டிருந்தாலும்
வாழ்க்கையை
அறியாத...
என்னைப் போல்...

— புன்னகை சேது

● ஆர். ராமசுப்ரமணியம், வடவள்ளி. ❑

**? வியாபாரிகளுடனோ, அரசு ஊழியர்களுடனோ பேச்சு வார்த்தையே நடத்த மாட்டேன் என்று அடம் பிடிக்கும் முதல்வர், போலீஸார் குறைகளை மட்டும் அக்கறையுடன் கேட்பது போலீஸ் ராஜ்யம் நடத்துவதால்தானே...?**

! ஏதோ, போலீஸாரின் குறைகளாவது நிவர்த்தியானால் சரி. ஆனால், போலீஸ் ராஜ்ஜியம் நடத்துகிற போக்கு முதல்வரிடம் காணப்படுவதையும் மறுக்க முடியாது. ஜனநாயகத்துக்கும் போலீஸ் ராஜ்ஜியத்துக்கும் ஒத்துவராது என்பதை அவர் உணரவில்லை. They are incompatible. இதனால் போகப்போக முதல்வருக்குப் பிரச்னைகளே அதிகமாகும். அவர் விழித்துக் கொள்ளும் போது too late ஆகியிருக்கும்.

● ஆர். செந்தில்முருகன்,
மேல்வலையமாதேவி.

**? கடினமாக உழைத்தும் சிலர் முன்னேறாமல் இருக்கிறார்களே... காரணம் என்ன?**

! முன்னேற்றத்துக்கு உழைப்பு அத்தியாவசியம்; ஆனால், உழைப்பு மட்டும் போதாது. சிறந்த சுய முன்னேற்ற நூல்களைப் படித்தால் வேறென்னென்ன தேவை என்பது புரியும். நாலு வரி பதிலில் கூறிவிட முடியாது.

● ஆர்.அப்துல்சலாம், திருச்சி — 20.

**? இதயம் காப்போம் திட்டத்துக்கு ஒரே நாளில் ஐந்து லட்சம் நன்கொடை வசூலாமே...?**

! வசூலாகும் நன்கொடை முழுவதும் முறையாகப் பயன்பட்டால் இதயம் மட்டுமல்ல, மனசாட்சியும் காப்பாற்றப்படும்!


• போலீஸ் ராஜ்யம்!


• விமர்சன விமர்சனம்!

● அமுதவன், நரசிங்கநல்லூர்.

**? இன்றைக்குப் பணம் சம்பாதிக்கப்பட வேண்டும் என்ற ஒரே நோக்கில்தானே திரைப்படங்கள் எடுக்கப்படுகின்றன?**

! கூடவே, 'குட்டி', 'ஊருக்கு நூறு பேர்' போன்ற சமுதாய நோக்குள்ள படங்கள் எடுக்கப்பட்டு வருகின்றனவே. அவற்றுக்கு ஆதரவு பெருகினால் அவை போன்று மேலும் பல உருவாகும்.

● ஜி.ஜி. சரவணன்,
மயிலாடுதுறை.

**? 'போலீஸ்காரர்களை விமர்சிப்பது மக்களின் தேசிய பொழுதுபோக்காக இருக்கிறது' என்கிறாரே ஏ.டி.ஜி.பி. திலகவதி...?**

! கொலைக்குத் துணைபோன போலீஸ்காரர் கைது, திருட்டுக்குத் துணை நின்ற ஏட்டு கைது என்று செய்திகள் வரும்போது விமர்சிக்காமல் என்ன செய்வார்கள்!

● உமரி பொ. நாராயணன்,
மும்பை - 37.

**? 'மீண்டும் வரு**

# 'பாபா' வந்தால் பசி — பட்டினி ஒழியுமா?

வேன்' என்று முன்னாள் கிரிக்கெட் வீரர் அசார் அறிவித்துள்ளாரே...?

! நாற்பது வயதை நெருங்கும் நிலையில் கிரிக்கெட்டுக்கு என்ன செய்யப் போகிறார். பயிற்சியாளராக வந்தால் அர்த்தம் உண்டு.

● மல்லிகை மன்னன், மதுரை - 17

? 'தண்ணீர் ராசி' இருக்கும் புரட்சித் தலைவியின் ஆட்சியில் மழைபெய்ய மறுக்கிறதே தலைவா! வருணபகவானையும் பொடாவில் கைது செய்து விடுவாரோ புரட்சித் தலைவி?

! ஆப்கானிஸ்தானில் அமெரிக்கா பயன்படுத்திய இரசாயன குண்டுகளால் இந்தியாவின் சீதோஷ்ணமும் கெட்டுவிட்டது என்று ஆய்வு முடிவுகள் சொல்வதை நீர் படிக்கவில்லையா...? ஆக, அம்மா அமெரிக்க அதிபரைத்தான் கைது பண்ண முடிவெடுப்பார் பாருங்க...!

● ப. இரா. காமாட்சி, சில்வார்பட்டி.

? ஆஹா, பாபா உலக அரங்கில் தோன்ற விருக்கிறார்; தோன்றி விட்டார்! மாதம் மும்மாரி மழை பெய்யப் போகிறது. நாட்டின் பொருளாதாரம் முன்னேறப் போகிறது; பசி – பட்டினி அடியோடு ஒழியப் போகிறது – உண்மைதானே?



• வயதும் வருகையும்!

! சுபிட்சம் கொழிக்கும் ஜப்பானிலும் ரஜினி படங்கள் வெற்றி பெற்றுள்ளதைக் காண்க. யதார்த்தத்திலிருந்து தப்பி, சில மணி நேர உல்லாசத்துக்கு விழையும் மனம் உலகில் அனைவருக்கும் பொது.

● ஆர். விச்வநாதன், சென்னை - 4.

? ஒவ்வொரு கூட்டத்தொடரின்போதும் எதிர்க்கட்சிகள் ஏதாவது காரணம் காட்டி பாராளுமன்றத்தை நடைபெறச் செய்யாமல் தடுப்பது சரிதானா...?

! இவ்வாறு மக்கள் வரிப்பணத்தில் பல கோடிகளை வீணடிப்பது பெட்ரோல் பங்க் ஊழலை விடக் கேவலம். இது எப்படி சரியாக இருக்க முடியும்?... எதிர்ப்பது மட்டுமே எதிர்க்கட்சிகளின் நோக்கமாக இருக்கக் கூடாது. ஆக்கபூர்வமான யோசனைகளைச் சொல்ல வேண்டும். ஆளுங் கட்சிகளுக்கு நல்ல யோசனைகளை ஏற்கும் மனப் பக்குவம் வேண்டும். ஆனால், நம்ம ஜனநாயகமே அலாதிங்க!

● பி.ஆர். பார்த்தசாரதி, ஸ்ரீரங்கம்.

? மகன்களும் தடுக்கவில்லை, கிராம மக்களும் தடுக்கவில்லை. வந்த போலீசாரை விரட்டி விட்டு உடன்கட்டை ஏற அனுமதித்த ம.பி. கிராம மக்களை என்னவென்று சொல்வது...?

! அறியாமை பாதி மூர்க்கம் பாதி

• வாதம்...



• ...பயங்கரவாதம்!

என்று அடையாளப்படுத்தலாம் – ஆனால், அதனால் ஆறுதல் அடைந்துவிட முடியாது. கல்வித்தரம் உயரும் போதுதான் விடியல்.

● ஆனந்தி ராஜா, மணப்பாறை. ✱

**? தி.மு.க.வினர் எது செய்தாலும் எதிர்ச் செயல்களில் ஈடுபடும் அ.தி.மு.கவினர் தாமாகவே இந்த அட்டூழியத்தைச் செய்கிறார்களா...? அல்லது அவர்களது தலைமைதான் செய்யத் தூண்டுகிறதா?**

! தலைமை நேரடியாகச் செய்யச் சொல்லாவிட்டாலும் தலைமையின் யதேச்சாதிகாரப் போக்கும் பழிதீர்க்கும் போக்கும் தொண்டர்களிடையேயும் விரைவாகப் பரவக்கூடிய தொற்று நோய்.

● கே. கணேசன், சென்னை - 16.

**? காங்கிரஸ் இணைப்புக்கு எதிர்ப்பு தெரிவித்து ஐந்து த.மா.கா. எம்.எல்.ஏக்கள் ஆளுநரிடம் கடிதம் தந்துள்ளனரே...?**

! அரசனை நம்பி புருஷனைக் கைவிட்ட கதையாக...

● கே. சங்கர், சென்னை - 13.

**? 'வீரப்பன் ராட்சஸன்; அவனை சம்ஹாரம் செய்ய வேண்டும்' என்கிறாரே பாபா.**

! ராட்சஸன் சரி, சம்ஹாரம் சரி, அதற்குத் தேவைப்படும் அவதாரம்...? அதுதான் நஹி!

● ப. இராம் முருகன், சென்னை - 68.

**? 'நான் யாசர் அராஃபத்தை ஆதரிக்கிறேன்' என்று இங்கிருந்து பேசலாம். அதனால் அவருக்கு என்ன பயன்?' அதுபோல்தான் 'பிரபாகரனை ஆதரிக்கிறேன்' என்று பேசுவதும்... எனச் சொல்கிறாரே திருமாவளவன்...?**



* அவதாரம் எங்கே!

! தவறான வாதம். அராஃபத்தின் அரசியலோ நிலையோ நம் தமிழ்நாட்டை நேரடியாக பாதிக்காது. இலங்கையில் பயங்கரவாதம் என்றால் உடனே பாதிக்கப்படுவது தமிழகம்தான். அகதிகள் வரவால் மட்டும் அல்ல, பயங்கரவாதத்துக்கு நம் மாநிலம் பதுங்கு பூமியாகவும் ஆகிவிடுவதால்.

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

**? 'மங்கையராகப் பிறப்பதற்கே மாதவம் செய்திட வேண்டும்' என்றார் பாரதியார். 'பெண்ணாகி வந்ததொரு மாயப்பிசாசு என்கிறார் பட்டினத்தார். குழப்புகிறதே!**

! பட்டினத்தாரும், வள்ளலாரும், அருணகிரிநாதரும் வேறு பலரும் குறிப்பிடுவது துறவு நிலையிலிருந்து என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அது காம மிகுதி நம்மை வீழ்த்தும் என்ற எச்சரிக்கைதானே தவிர, பெண்ணை வெறுக்க வேண்டும் என்றோ பெண்குலமே இழிவானது என்றோ கொள்ளக் கூடாது.

● எஸ். இளங்கோவன், கீழப்பெருமழை.

**? ஒரு காலத்தில் எழுத்து அகம் – புறம் பேசியது; மதம் போற்றியது; விடுதலை வேட்கைக்கு வித்திட்டது. இப்பொழுது எழுத்து எதைச் சாதிக்கிறது...?**

! பரபரப்பு, கிளுகிளுப்பு, அவமதிப்பு என்று பரவலாக மோசமான விஷயங்களுக்கு வாகனமாகி வருவது வருந்தத்தக்கது என்றாலும் அவற்றைத் தவிர்த்து, எழுச்சியூட்டும் உயர்ந்த எழுத்தைத் தேர்வு செய்யும் உரிமையும் வாய்ப்பும் வாசகருக்கு இருக்கிறதே! ○

☐ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
ஆர். ராமசுப்ரமணியன்,
ராஜம்மாள் இல்லாம்.
20, வி.என்.ஆர். நகர் முதல் தெரு.
வடவள்ளி அஞ்சல்,
கோவை – 641 041.

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:
ஆனந்தி ராஜா,
49, செவலூர்,
மணப்பாறை.



கதைக்களன் கல்லூரி என்றால், நிஜக் கல்லூரிக்குச் சென்று படம் பிடிப்பதுதான் கோடம்பாக்கத்துப் பாணி. இந்த விதியை மீறி கல்லூரியை 'செட்'போட்டுப் படம் பிடித்துக் கொண்டிருக்கிறது 'ஏப்ரல் மாதத்தில்' படக் குழு.

மாணவ, மாணவிகளாக, துணை நடிகர்களைப் பயன்படுத்தாமல் பச்சைப்பயன், லயோலா, மாநிலக் கல்லூரிகளில் படிக்கும் நிஜ மாணவர்களையே ஸ்பெஷல் விடுப்பு எடுக்க வைத்து அழைத்து வந்து விட்டார்களாம்! (கண்ணுக்குத் தெரிஞ்சு கட் அடிச்சுட்டாங்கன்னு சொல்லுங்க!)

“ஜூன் மாதம் தொடங்கும் கல்லூரி வாழ்க்கை 'ஃபேர்வெல் டே' விழாவோடு முடிந்துவிடுகிறது. ஏப்ரல் மாதம் பிரிந்து போகும்போது, ஒவ்வொரு மாணவ, மாணவிக்கும் இன்னொரு புதிய வாழ்க்கை தொடங்குகிறது. அதை முழுக்க முழுக்க யதார்த்தமாகக் காட்டப் போகிறேன்” என்கிறார் இயக்குனர்.

அந்த இன்னொரு வாழ்க்கை இன்னொரு குச்சி ஐஸ் காதல்னு எங்களுக்குத் தெரியாதா டைரக்டர் சார்!

# ‘காவேரி’ கரையேற்றுமா?

பாலசேகரனை நினைவிருக்கிறதா? எஸ்! 'லவ் டுடே' எடுத்து

கவனிக்க வைத்த அதே இளைஞர். நீண்ட இடைவெளிக்குப் பிறகு, மீண்டும் உயிர்த்து வந்திருக்கிறார். முதல் வாய்ப்புத் தந்த சூப்பர் குட் சௌத்ரிதான் மறுபடியும் கைதூக்கி விட்டிருக்கிறார். ரகசியமாகப் படப்பிடிப்பை நடத்திக் கொண்டிருக்கும் பாலசேகரன் 'காதல் சுகமானது' என்று பெயர் வைத்திருக்கிறார். தருண்குமாரும், ப்ரீதா விஜயகுமாரும் படத்திற்காக ஜோடி சேர்ந்திருக்கிறார்கள். படம் முடிந்த கையோடு தனது நிஜ ஜோடியைக் கைபிடிக்கப் போகிறார் ப்ரீதா!





**க**ன்னடத்தில் 'ஹெச்டு ஓ'வாக அமர்க்களம் செய்த படம், தமிழில் 'காவேரி'யாக மொழி மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது. காவேரி வந்த பின் பிரபுதேவா, பிரியங்கா, இருவருடைய மார்க்கெட்டும் ஒரு எகிறு எகிறும் என்கிறார்கள்.

"**ந**கைச்சுவை பஞ்சத்தைப் போக்க, 'பஞ்சதந்திரம்' வந்தது மாதிரி, ஒரே ஒரு ஓட்டை உடைசல் பேரிச்சம் பழப் பேருந்தைச் சுற்றிப் பின்னப்பட்டிருக்கும் 'சுந்தரா டிராவல்ஸ்' படம் வந்தால் குடும்பத்தோடு சிரிக்கலாம்'' என்கிறார் படத்தின் நாயகன் முரளி. சுந்தரா பஸ் டிரைவர் இவரென்றால் கண்டக்டர் வடிவேலு, இந்தப் பேருந்தை எப்படியாவது மடக்கிப் பிடித்து, முடக்கி விடுவதை லட்சியமாகக் கொண்டு துரத்தும் போலீஸ் அதிகாரியாக வினுசக்கரவர்த்தி என கலக்கியிருக்கிறார்களாம். பயணம் இனிதே அமைய வாழ்த்துக்கள்!

**– சக்கரம்**

'ஏப்ரல் மாதத்தில்'

# கடன் வாங்க வரியோடும் தமிழக அரசு!



அ.தி.மு.க. அரசின் புதிய வரிவிதிப்பு முறையை எதிர்த்து கடந்த பதின்மூன்றாம் தேதி பெட்டிக்கடை முதல் வட்டிக்கடை வரை, ஒரு நாள் கடையடைப்பு நடத்தி கதிகலங்க வைத்தனர் தமிழக வணிகப் பெருமக்கள்.

இந்தப் போராட்டம் நியாயமானது தானா என்பது பற்றியெல்லாம் கவலைப்பட நேரமில்லா மாண்புமிகு பொதுஜனம் வழக்கம்போல, கடையடைப்புக்கு முதல் நாளே தேவையான பொருட்களைப் பாது காப்பாக வாங்கி வைத்துவிட்டது. ஆனால், "பொதுமக்களாகிய நுகர்வோர் கவலைப்பட வேண்டிய பிரச்னை இது'' என்கிறார் தமிழ்நாடு வணிகர் சங்கங்களின் பேரவைத் தலைவர் த. வெள்ளையன்.

"இன்றிருக்கும் சூழ்நிலையில் அரசியலைத் தவிர்த்துவிட்டுப் பொது மக்களுக்காகவோ, விலைவாசி உயர்வுக்காகவோ போராட வேண்டும் என்று எந்த அமைப்பும் கட்சியும் முன்வருவதில்லை. நாங்கள்தான் போராடுகிறோம். தமிழக அரசு அரிசி, பருப்பு, கோதுமை, வெல்லம் மற்றும் உணவு எண்ணெய் வகைகளுக்குப் புதிதாக வரிகளை விதித்தது. இந்த வரிவிதிப்பால் விலைவாசி உயர்ந்துவிட்டது.

"பல ஆண்டுகளாகப் போராடிப் பெற்ற ஒரு முனை வரி விதிப்பை இந்த அரசு ரத்து செய்துவிட்டது. இதற்கு மாற்றாக கடந்த ஜூலை ஒன்று முதல் மறு விற்பனை வரியை அமல்படுத்தியுள்ளது.

"இதனால் ஒரே பொருளுக்கு மொத்த வியாபாரி தொடங்கி, சில்லறை வியாபாரி வரை பலமுனைகளில் வரி செலுத்த வேண்டியிருக்கிறது! இந்த வரி விதிப்பால் கணக்குகள் பராமரிப்பதில் உள்ள சிரமங்களை ஏற்கெனவே அரசுக்குச் சொல்லிவிட்டோம். தவிர வணிக வரித்துறை அதிகாரிகளுக்கு, வியாபாரிகள் லஞ்சத்தை அள்ளிக் கொடுக்க வேண்டிய சூழ்நிலை உருவாகிவிடும். பில் இல்லாத வியாபார முறை பெருகும். இது நாட்டின் வியாபார நலனுக்கு உகந்தது அல்ல'' என்கிறார் வெள்ளையன்.

தமிழக அமைச்சர்களைப் பலமுறை சந்தித்து மறு விற்பனை வரி உள்ளிட்ட புதிய வரி விதிப்பு முறையை மாற்றும்படி கேட்டுக் கொண்டதாம் வணிகர் பேரவை. ஆனால் பொன்னையன் உள்ளிட்ட அமைச்சர்கள் "மத்திய அரசிடம் ஆயிரம் கோடி ரூபாய் கடன் கேட்டுள்ளோம். கடன் வேண்டுமென்றால் வருவாய் ஆதாரத்தைக் காட்டுங்கள் என்கிறார்கள். அதற்காகத்தான் இந்தப் புதிய வரிவிதிப்புமுறை. மத்திய அரசிடமிருந்து கடன் கிடைத்ததும் இந்த முறையை நீக்கிவிடுகிறோம்" என்று கூலாகச் சொன்னார்களாம்.

"ஆயிரம் கோடி கடன் வாங்க எங்க வயிற்றில் ஏன் அடிக்கிறார்கள்? எந்த வகையில் அரசு வருமானம் குறைந்தது என்று பார்க்க வேண்டும். அதைவிட்டுவிட்டு, அரசின் வரிவருமானத்தில் அறுபத்தைந்து சதவிகிதம் தரும் வணிகர்கள் மீதே மறுபடி மறுபடி பல்முனை வரி என்றால் எப்படித் தாக்குப் பிடிக்க முடியும்?" என்று கேட்கிறார் வெள்ளையன்.

— ஜெ

படம் : ராஜன்



# பைரோன்சிங் ஷெகாவத்:

# கடுமைக்குப் பின்னால் கருணை!

"அவர் பழகுவதற்கு இனிமையானவர், அதே சமயம் மிகக் கடுமையானவர். எந்த நேரத்தில் 'மூட்' எப்படி மாறும் என்று தெரியாது. அவர் முதலமைச்சராக இருந்தபோது, அதிகாரிகள் அலறி நடுங்கினார்கள். விதிகளை முறையாக அனுசரிப்பவர், யாரும் அவரை டபாய்க்க முடியாது"– இப்படி, கலவையான அபிப்ராயங்களுக்குச் சொந்தக்காரராக இருப்பவர் துணை ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள பைரோன் சிங் ஷெகாவத்.

எழுபத்தொன்பது வயதான ஷெகாவத்தின் பின்னணியில் அவரது ஐம்பது வருட பொது வாழ்க்கை இருக்கிறது. நீண்ட பயணத்துக்குப் பின் களைத்து நிற்கும் நீராவி என்ஜின் போல தமது அரசியல் ஏணியில் கடைசிப் படியில் நிற்கிறார் இந்த வாஜ்பாய் சிஷ்யர். 1952ல் முதன் முதலாக தேர்தலில் போட்டியிட்டவர் 1972ல் ஒரே முறை தான் தோற்றிருக்கிறார். நம்ம ஊர் கலைஞரைப் போல ராஜஸ்தானில் வெவ்வேறு தொகுதிகளில் போட்டியிட்டு வென்று மாநிலம் முழுவதும் தமக்குச் செல்வாக்கிருக்கிறது என்று நிரூபித்தவர் ஷெகாவத்

சிகார் மாவட்டத்தில் உள்ள கச்சரிவாஸ் என்பதுதான் இவரது கிராமம். வானம் பார்த்த பூமியில் விவசாயக் குடும்பங்கள் வறுமையைத் தானே சந்திக்கும். ஷெகாவத் குடும்பத்துக்கும் அதே நிலைதான். பள்ளிப் படிப்பை முடித்ததும் சிகார் சமஸ்தானத்து காவல் துறையில் வேலை கிடைத்தது. சமஸ்தானங்கள் இந்தியாவுடன் இணைந்த நிலையில் பொது வாழ்வில் குதித்து விட்டார் ஷெகாவத். முதல் முதலாக ஜனசங்க ஆதரவுடன் டண்டா ராம்கார் என்ற தொகுதியில் போட்டியிட்டார். இன்று சங்க குடும்பத்தின் மூத்த உறுப்பினர்.

ஷெகாவத் முதல்வராக இருந்த காலம் ராஜஸ்தான் மக்களுக்குக் கிட்டத்தட்ட பொற்காலம் என்று சொல்பவர்களும் உண்டு. அவரது 'அந்த்யோதயா', 'வேலைக்கு உணவு' ஆகிய திட்டங்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழே இருந்த மக்களுக்குப் பெரிய வரப்பிரசாதமாக இருந்தன. 'நிர்வாகத்தில் சூரப்புலி' என்று பெயர் பெற்றவர் ஷெகாவத். இந்த ஐம்பது வருட கால அரசியலில், ஆட்சியில் இருந்த காலங்களிலும் சரி, இல்லாத போதும் சரி, ராஜஸ்தான் தலைமைச் செயலகத்தில் இவரது குரலுக்கு என்றுமே செல்வாக்கு உண்டு.

பா.ஜ.க. ஆளும் மாநிலங்களில் உட்கட்சிப் பூசல் ஏற்பட்டால், காங்கிரஸில் மூப்பனாரை அனுப்பியது போன்று, இவரைத் தான் தீர்த்து வைக்க அனுப்புவார்கள். பாபர் மசூதி இடிப்பைத் தொடர்ந்து 1992ல் இவரது ஆட்சி கலைக்கப்பட்டது. ஆனால் தொடர்ந்து வந்த சட்டமன்ற தேர்தலில் கட்சியை வெற்றி மேடையில் ஏற்றினார். இன்று பிரதமர் வீட்டில் 'ப்ரோடோகால்' தடையில்லாமல் நுழைந்து வரும் ஒரு சிலருள் ஷெகாவத்தும் ஒருவர். தமது நீண்டகால தோழரான ஷெகாவத்துக்கு, ஒரு கௌரவமான இடத்தைக் கொடுத்து அவரை உயர்த்தியிருக்கிறார் வாஜ்பாய்.

— ப்ரியன்



நன்றி : ஸ்போர்ட்ஸ் ஸ்டார்

'**வை**த்தால் குடுமி சிரைத்தால் மொட்டை' என்பது மும்பை மழையைப் பொறுத்தவரை மிகப் பொருத்தமாயிருக்கிறது. ஒன்று– வராதா என்று ஏங்க வைக்கிறது. இல்லாவிட்டால்... எப்போது ஓயும் என்று புலம்ப வைக்கிறது. நாலு நாள் மழை எட்டு உயிர்களைக் குடித்துவிட்டது. குர்லாவில் நிலச்சரிவு ஏற்பட்டதில் ஆறு பேர், வர்ஸோவாவில் தென்னை மரத்திலிருந்து தேங்காய் விழுந்து கபால மோட்சம் கிட்டியதில் ஒருவர், மயாடில் ஒரு காம்பவுண்ட் சுவர் சரிந்ததில் மூன்று வயதுச் சிறுவன் ஒருவன்..! சாலை போக்குவரத்து நத்தை வேகத்தில் என்றால், ரயில் போக்குவரத்து ஆமை வேகத்தில்... அந்தேரி, கார், கிங்சர்க்கிள், பாந்த்ரா, பாண்டுப் வாசிகளில் பலர், பைசா செலவில்லாமல், வெளிவிலுள்ள மிதக்கும் வீடுகள் அனுபவத்தைப் பெற்றார்கள். முணுக்கென்றால் முக்கி முனகும் டெலிஃபோன்கள், பல இடங்களில் உயிரை விட்டுவிட்டன. இத்தனைக்குமிடையில், ஏரிகளில் நீர் நிலை ஏறியிருப்பது மகிழ்ச்சியாகத்தானிருக்கிறது. 'தண்ணீர் கட்' எதுவுமிருக்காதே? மழைக்கால மும்பை, இங்கே வருகை தந்திருந்த ராகுல் காந்திக்கும் ரொம்ப பிடித்துவிட்டதாம். அவருக்கென்ன... முரளி தேவ்ரா வீட்டில் விருந்துண்டு, மனோகரமான மரீன் ட்ரைவ் வழியாக நடக்க வேண்டிய வேலைதானே? தண்ணீர் கஷ்டம், தண்ணீரைப் போல் செலவழியும் பணக் கஷ்டம்... இவையெல்லாம் அனுபவிப்பவர்களுக்குத் தானே தெரியும்?

# கபிலின் புதிய காதல்!



**த**ண்ணீரைப் போல் செலவழியும் பணக் கஷ்டத்தை அனுபவித்துத் தெரிந்து கொண்டவர்களில் முதன்மையானவர்கள், 'சஞ்சய் தத்'தின் ப்ரொட்யூசர்கள். முன்பு மும்பை குண்டு வெடிப் பின்போது, 'தடா' சட்டத்தின் கீழ் அவர் கைதான சமயத்தில், அவர் நடித்துக் கொண்டிருந்த படங்களெல்லாம் அரை குறையாக நின்றதில், பல தயாரிப்பாளர்கள் நடுத் தெருவுக்கு வந்தார்கள். இப்போது 'சஞ்சய் தத்தைக் கைது செய்' கோஷம் காதைப் பிளக்கிறது. மறுபடியும் கைதானால், அவர் சம்பந்தப்பட்ட ஆறு படங்களில், நாற்பது, ஐம்பது கோடிகள் முடங்கிவிடும். முன்பாவது ரசிகர்கள் மத்தியில் அவருக்குக் கொஞ்சம் அனுதாபமிருந்தது. இப்போது அதுவும் குறைந்து விட்டது. இவர் முதன் முதல் நடித்த படத்திற்கு 'Rocky' என்று பெயர் வைத்தார்களோ? இவரது படங்களின் தயாரிப்பாளர்கள் எப்போதும் இப்படி (தன்) ஆடிக் கொண்டிருக்கிறார்களே?

**ஆ**டிக் கொண்டிருந்தவர் இப்போது ஆட்டுவிக்கப்

போகிறார். ஆம்! கபில் தேவ் இப்போது 'ஸோனி-மாக்ஸ்'ஸில் 'கபில்-தில்ஸே' என்றொரு நிகழ்ச்சியைத் தொகுத்தளிக்கப் போகிறார். இதில் திலீப்குமார், அமிதாப்பச்சன், ஷாருக்கான், கோவிந்தா, அமீர்கான் எல்லோரையும் சந்தித்துப் பேட்டி எடுக்கப் போகிறார். "இத்தனை நாள் என்னை எல்லோரும் பேட்டி கண்டார்கள்; இப்போது நான் கேள்விகளைக் கேட்டு எல்லோரையும் திணறடிக்கப் போகிறேன். எதுவும் முன்னமே தயாரித்த ஸ்க்ரிப்ட் இல்லை; மனசிலிருந்து வருவதை அப்படியே வாய் கேட்கும். அவ்வளவுதான்; பாலிவுட் ஹீரோயின்களையும் சந்தித்துப் பேட்டி எடுக்கப் போகிறேன் என்பதில் ஒரே குஷியாயிருக்கிறேன்" என்கிறார் சந்தோஷத்தை மறைக்காமல். அட, பாலிவுட்மீது இத்தனைக் காதல் என்றால், வந்த ஃபிலிம் சான்ஸ்"களை எதற்காக நிராகரித்தாராம்? "அதை ஏன் கேட்கிறீர்கள்? ஒருமுறை என் தங்கையுடன், அவள் சைக்கிளை ரிப்பேர் செய்யச் சென்றிருந்தேன். கடையில் எல்லோரும் என்னை அவளுடைய வேலைக்காரன் என்று நினைத்துவிட்டனர். அதன்பிறகு, தினமும் கண்ணாடி முன் நின்று, 'இந்த மூஞ்சிக்கு ஹீரோ சான்ஸா? ப்ரொட்யூசர்கள் பேச்சில் மயங்கிவிடாதே' என்று நானே நினைவுபடுத்திக் கொள்வேன்" என்கிறார் ஒளிவு மறைவில்லாமல். அது சரி... நிகழ்ச்சியில் பங்கெடுப்பவர்களும் உண்மை விளம்பிகளாயிருப்பார்களா?



உண்மை விளம்பிகளாக இருப்பதாக மார்தட்டுபவர்கள், அஸாருதீன் - சங்கீதா பிஜ்லானி ஜோடி; மும்பையில் ஒரு நாடகத்தில் நடிக்க வந்திருந்த சங்கீதா "நான் மும்பையிலும், அஸார் ஹைதராபாத்திலுமாக இருந்தால் என்ன? மனத்தால் நாங்கள் இணைந்திருக்கிறோம். இதில் சந்தேகமேயில்லை" என்கிறார். ஹைதராபாத்தில் ஒரு ஹெல்த் க்ளப் திறுவ இருக்கிறாராம் அஜார். இங்கிலாந்தில் நடந்த விஸ்டன் பரிசளிப்பு விழாவிற்கு, முதலில் தன்னை அழைத்துவிட்டு, பிறகு தட்டிக் கழித்ததில் மனம் வெதும்பியிருக்கிறார். "அவர்கள் மீது கேஸ் போடப் போகிறேன்" எனும் அஜார், "திருமண விஷயத்தில் எந்த வழக்குமில்லை, நாங்கள் சந்தோஷமாகவே இருக்கிறோம்" என்கிறார். "எங்களுக்குத் திருமணமாகாதபோது எங்களை மணமுடித்து வேடிக்கை பார்த்த மீடியா, இப்போது நாங்கள் திருமணத்தில் இணைந்திருக்கும்போது பிரிக்கப் பார்க்கிறது" என்கிறார் பிஜ்லானி. ஹூம்... மாட்ச் மேக்கிங், மாட்ச் ஃபிக்ஸிங் எல்லாவற்றுக்கும் மீடியா மீது அட்சதை போட்டு விடுவார்களோ?

— ஜெயஸ்ரீ ராஜ்








# நடக்கும் என்பார்;

**மேஷம் :** இந்த வாரம் எடுத்த காரியங்களில் வெற்றி உண்டு. பெயர், புகழ் கூடும். இதுவரை இருந்து வந்த குடும்ப பிரச்னைகள் மாயமாகும். அலுவலகத்தில் சகஜமான நிலைமை நிகழும். மனகல துணிச்சல், தன்னம்பிக்கை அதிகரிக்கும். வியாபாரிகள் வளர்ச்சி அடைவாங்க. பண நடமாட்டம் சீராக இருக்கும். பேச்சில் நிதானம் அவசியம். செலவு கட்டுக்கடங்காது. சிலருக்குப் பதவி உயர்வு இடமாற்றம் ஏற்பட வாய்ப்பிருக்கு. மனை, நிலம் இந்த விஷயங்களில் முன்னேற்றம் உண்டு. பயணம் தவிர்ப்பது நல்லது.

**ரிஷபம் :** இந்த வாரம் பண வசதிக்குப் பஞ்சமில்லை. தெய்வீக காரியங்களில் வெற்றி ஏற்படும். மறைமுக நேர்முக எதிர்ப்புகள் விலகும். உடல்நலம் சீரா இருக்கும். அலுவலகத்தில் சுமுகமான சூழ்நிலை உருவாகும். உயரதிகாரிகள் பாராட்டு ஆதரவு உண்டு. புதிய பொறுப்புகள் வந்து சேரும். வேலை விஷயமாக வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. சட்டம், காவல் இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்க முன்னணிக்கு உயருவாங்க. புதிய செலவுகள் வந்து டென்ஷன் பண்ணும். அவ்வப்போது சிறுசிறு பிரச்னைகள் வரும். குரு பார்வை இருப்பதால் கவலைப்படத் தேவையில்லை.



**மிதுனம் :** இந்த வாரம் திட்டமிட்டப்படி காரியங்கள் நடக்கும். ஆன்மிகம் பக்கம் மனம் இழுக்கும். பொருளாதார நிலை அபிவிருத்தியடையும். உத்தியோகத்தில் சிறுசிறு குழப்பங்கள் இருக்கும். குரு பார்வையால் இக் குழப்பங்கள் விலகும். அலுவலகத்தில் கூடுதல் பொறுப்புகள் வந்து சேரும். தொழில் முயற்சிகள் வெற்றியடையும். குடும்பத்தில் ஒற்றுமை அமைதி நிலவும். பேச்சில் நிதானம் அவசியம். கலைத் துறையைச் சேர்ந்தவர்களுக்குப் புதிய ஒப்பந்தம் ஏற்படும். பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**கடகம் :** இந்த வாரம் எதிர்பாராத புதிய திருப்பங்கள் ஏற்படும். பணம் பல வழிகளில் வரும். எந்தக் காரியத்தையும் எப்பாடுபட்டாவது முடிச்சுடுவீங்க. புதிய முயற்சிகள் கைகூடும். சிலருக்கு டிரான்ஸ்பர் கிடைக்கலாம். மதிப்பு, அந்தஸ்து செல்வாக்கு உயரும். வெளியூர் பயணம் திட்டமிட்டபடி நடக்கும். இதுவரை இருந்து வந்த கடன்களை இப்போது அடைப்பதற்கான வாய்ப்புகள் வரும். நெருங்கிய நண்பர்கள் உறவினர்கள் உதவ முன்வருவாங்க. சிலருக்குப் புதிய வீடு வாங்கும் பாக்கியம் ஏற்படலாம்.

**சிம்மம் :** இந்த வாரம் அறிவாற்றல், துணிவு, தன்னம்பிக்கை ஆகிய பலன் கூடும். மனகல உற்சாகம் கரை புரண்டோடும். பொருளாதார நிலையில் மேன்மை உண்டாகும். திட்டமிட்டபடி காரியங்கள் நடக்கும். இதுவரை தாமதமாகி வந்த பதவி உயர்வு, ஊதிய உயர்வு, இடமாற்றம் ஆகியவை இப்போது வரும். வியாபாரிகளுக்குப் புதிய முயற்சிகள் கூடி வரும். வர வேண்டிய பணம் இப்ப வந்து சேரும். குடும்பத்தில் அமைதி நிலவும். திருமண முயற்சிகள் வெற்றி பெறும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் பாராட்டு உண்டு.

**கன்னி :** இந்த வாரம் கிரக சஞ்சாரம் பலம் பெற்றுள்ளதால் சகல காரியங்களிலும் வெற்றி உண்டு. உங்க புத்திசாலித்தனம், அறிவாற்றல், சாமர்த்தியம் வெளிப்படும். பண நடமாட்டம் தாராளமா இருக்கும். கடன் தொல்லைகள் நீங்கி மன அமைதி ஏற்படும். எதிர்ப்புகள் இருக்காது. எதிரிகள் ஓடிப் போயிடுவாங்க. எல்லா விதத்திலும் மன நிறைவு அமைதி ஏற்படும். குடும்பத்துல ஒற்றுமை மகிழ்ச்சி நிலவும். நீண்ட நாட்களாகப் பிரிந்திருந்தவர்கள் ஒன்று கூடுவார்கள். கலைத் துறையைச் சேர்ந்தவங்க சுபிட்சம் காண்பாங்க. திருமணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரப் போகுது.

## அக்னிசர்மா பக்கம்

**நட்சத்திரம்!** 

**துலாம்** : எல்லா காரியங்களிலும் அனுகூலமான திருப்பம் ஏற்படும். புதியவங்க அறிமுகம், சந்திப்பு ஏற்படும். இதனால் வாழ்க்கையில் நல்ல திருப்பம் வரும். சிலர் திட்டமிட்டபடி பயணம் மேற்கொள்வாங்க. உடல் ஆரோக்கியம் சீரா இருக்கும். வழக்கு விவகாரங்கள் அனுகூலம் தரும். உத்தியோகத்தில் எதிர்ப்புகள் விலகும். பேச்சில் கடுமை கூடாது. எல்லோரிடமும் சுமுகமா பேசிப் பழகுவது நல்லது. கொடுக்கல் வாங்கல் இனங்களில் ஆதாயம் உண்டு. சினிமா, சங்கீதம் போன்ற கலைத் துறையைச் சேர்ந்தவங்க சுபிட்சம் காண்பார்கள். சட்டம், காவல் இராணுவம் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. பெண்களுக்கு இது அதிர்ஷ்ட வாரம்.

**விருச்சிகம்** : இந்த வாரம் உங்களுக்கு அதிர்ஷ்டம் நிறைந்த வாரம். குடும்ப நலம் சீரா இருக்கும். இதுவரை தாமதமாகி வந்த சுபகாரியங்கள் இப்போது எளிதில் நிறைவேறும். சிலர் புதிய சொத்து வாங்க வாய்ப்பிருக்கு. அலுவலகத்தில் புகழ், பாராட்டு கிடைக்கும். சிலருக்குப் புதிய பொறுப்புகள் வந்து சேரும். வியாபாரத்தில் பொருளாதார நிலை அபிவிருத்தியடையும். பண வசதி தாராளமா இருக்கும்.

**தனுசு** : இந்த வாரம் எதிர்பாராத அதிர்ஷ்ட திருப்பங்கள் ஏற்படும். எதிர்ப்புகள் அகலும். எதிரிகள் அடங்கிப் போவாங்க. பண வசதிக்குப் பஞ்சமில்லை. உடல் ஆரோக்கியம் சீராக இருக்கும். உத்தியோகத்தில் உற்சாகமான நிலை உண்டு. வெளிநாடு போகும் முயற்சியில் இருக்கறவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு இருக்கு. அலுவலகத்தில் புதிய முயற்சிகள் வெற்றி தரும். கொடுக்கல் வாங்கலில் நல்ல முன்னேற்றம் உண்டு. சினிமா, நாட்டியம் போன்ற கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பெயர், புகழ் கூடும். பேச்சில் நிதானம் அவசியம்.

**சன் டி.வி. எடிட்டர் கிஷோரின் மனைவி பிரியதர்ஷினிக்கு (மிதுனம்) திட்டமிட்டப்படி காரியங்கள் நடக்குமாம்.**

**மகரம்** : இந்த வாரம் எல்லா முயற்சிகளிலும் வெற்றி உண்டு. வழக்கு விவகாரங்கள்ல நல்ல திருப்பம் உண்டு. இதுவரை தாமதமாகி வந்த காரியங்கள் இப்போது அனுகூலமாகும். தொழில் புரிபவர்கள் முன்னேற்றம் அடைவாங்க. பணநடமாட்டம் தாராளமா இருக்கும். கொடுக்கல் வாங்கல் வகையில் எதிர்பாராத அனுகூலம் ஏற்படும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். சுபகாரிய நிகழ்ச்சிகள் நடக்க சந்தர்ப்பம் வரும். இதன் காரணமாக பயணம் மேற்கொள்ள வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**கும்பம்** : இந்த வாரம் புதிய முயற்சிகளில் வெற்றி காணலாம். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். இதுவரை விரோதமாக இருந்தவர்கள் மனந்திருந்தி வருவார்கள். புதிய உத்தியோக முயற்சி செய்பவர்களுக்கு அனுகூலமான செய்தி கிடைக்கும். கடினமான காரியங்களையும் உங்கள் புத்திசாலித்தனத்தால் எளிதாக முடிப்பீர்கள். இரும்பு, எண்ணெய் வகைகள், இயந்திரம் ஆகிய இனங்கள் லாபம் தரும்.

**மீனம்** : குடும்பத்துல குதூகலம் கொப்பளிக்கும். சிலருக்கு ஊதிய உயர்வு, பதவி உயர்வு கிடைக்க வாய்ப்பிருக்கு. புதிய முயற்சிகள் கைகூடி வரும். சிலருக்குப் புதிய பொறுப்புகள் வந்து சேரும். பண வசதி தாராளமா இருக்கும். வர வேண்டிய பணம் இப்போ வசூலாகும். மருத்துவம், கெமிக்கல்ஸ், தோல், போக்குவரத்து சாதனங்கள் ஆதாயம் கொண்டு வரும். அரசியல்வாதிகளுக்கு முன்னேற்றம் இருக்கு. கணவன் மனைவி உறவு நிலை சுமுகமா இருக்கும். நண்பர்கள், உறவினர்கள் உதவ முன் வருவாங்க. முன்ன பின்ன தெரியாதவங்ககிட்ட அதிகமா பேச வேண்டாம்.













**ஆகஸ்ட் 21 முதல் 27 வரை**

இடைப்பிள்ளையாகி ஆயர்குலத்திலே வந்து தோன்றிய எம்பெருமான், வைகுண்டத்தை அடைவதற்கான உபாயத்தைக் காட்டியிருக்கிறான். அந்த உபாயத்துக்கு மூலம் கௌசீதகி உபநிஷத்.

லோகத்தில் சாமான்யமாக 'வைகுண்டம் எங்கே இருக்கிறது?' என்று கேட்டால், மேலே கையைக் காட்டுவார்கள்.

அடுத்த கேள்வி, 'வைகுண்டத்துக்கு இங்கேயிருந்து எவ்வளவு தூரம்?' என்பது?

'மேலே இருக்கிறது' என்று வேண்டுமானால் யாரும் கைகாட்டிச் சொல்லிவிடலாம். 'எவ்வளவு தூரம்?' என்று கேட்டால் யாராவது சொல்ல முடியுமா!

'ஸ்ரீரங்கம் எவ்வளவு தூரம்?' என்று கேட்டால் சொல்லலாம்; காஞ்சிபுரம் எத்தனை தூரம் என்று கேட்டால் சொல்லலாம். கண்ணுக்கெதிராக நிற்கிறது; தெரிகிறது.

திருஷ்டிக்குத் தெரியாத விஷயத்தில் எது பிரமாணம்?

வேண்டிய அமைப்பு என்ன என்பதை பௌண்டரீக உபநிஷத்தான் விளக்குகிறது. அதில் சொல்லப்பட்டபடியான கிருஹத்தில் நாம் வாஸம் பண்ணினோமானால் நோய் நொடி இல்லாமல் சகல சம்பத்தோடும் இருக்கலாம் என்று காட்டுகிறது.

வீட்டிலே கீழ்த்தளம் இருக்கிறது. மேலேயும் கட்டுகிறார்கள். மேலே போக வேண்டுமானால் என்ன பண்ணுகிறார்கள்? படிக்கட்டுகள் அமைக்கிறார்கள். படிக்கட்டுகள் வழியே நாம் மேலே போய் வாஸம் பண்ணுகிறோம்.

இடத்துக்கும் வசதிக்கும் ஏற்ப 32 படிக்கட்டுகள்; சில இடத்தில் 24; இன்னொரு இடத்திலே போனால் பத்து படிக்கட்டுகள் என்று அமைந்திருக்கும்.

லௌகீகத்திலே கூட சாமான்யமாக கேள்வி கேட்கிறார்கள் பாருங்கள். இன்டர்வியூ என்று போனால், 'எத்தனை படிக்கட்டு ஏறி வந்தாய்?' என்று கேட்பார்கள். வருகிறவன் அதைக்கூட தெரிந்து வைத்திருக்

# முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்

# இன்னமுதம் 4

வேதம்தான் பிரமாணம். வேதம் சொல்கிறது - வைகுண்டம் மேலே இருக்கட்டுமே... அதற்கும் நாம் இருக்கிற இடத்துக்கும் எவ்வளவு தூரம் என்பதை கௌசீதகி உபநிஷத்தானது காட்டுகிறது.

எவ்வளவோ வீடுகளை நாம் உலகிலே பார்க்கிறோம். அந்த கிருஹங்களின் நிர்மாணத்தைக் குறித்து உபநிஷத், வேதங்களில் வெகு அழகாகப் பேசப்பட்டிருக்கிறது. கிருஹ நிர்மாணம் எப்படியெப்படி இருந்தால் நமக்கு ஆரோக்கியம் - இத்யாதிகள் பேசப்படுகின்றன. வாஸ்து சாஸ்திரம் என்று ஒன்று இருக்கிறது. இருந்தாலும், ஒரு கிருஹம் இருக்க

கிறானா? அந்த மாதிரி ஞானம் இருக்கிறதா? என்று சோதிப்பார்கள்.

ஆகையால், மேல் தட்டுக்குப் போக வேண்டுமென்றால் படிக்கட்டுகள் வேண்டும். இப்போது நாம் பிரக்ருதி மண்டலத்திலே இருக்கிறோம்; வைகுண்டம் மேலே இருக்கிறது.

இங்கேயிருந்து வைகுண்டம் போக வேண்டுமானால், எத்தனை படிக்கட்டு ஏற வேண்டும்..? சோளிங்கபுரத்திலே இருக்கிற மாதிரி இருக்குமோ...? 1300 படிக்கட்டுகள்? அதைப் பார்க்கிறபோதே நடுங்குகிறதே! பகவான்தான் மேலே அழைத்துக் கொண்டு

போக வேண்டும் என்று தோன்றுகிறதே! 'இப்படி, இந்த பூலோகத்திலேயே ஒரு மலை மேலே ஏற இவ்வளவு படிக்கட்டுகள் என்றால் வைகுண்டத்துக்குப் போக எத்தனை படிக்கட்டு வேண்டியிருக்குமோ?' என்று நாம் தவிக்க வேண்டாம்.

ஒன்பதே, ஒன்பது படிக்கட்டுக்கள்தான்! அந்த ஒன்பது படிக்கட்டு ஏறிவிட்டால், ஒன்பதாவதில் பரமாத்மா நின்று கொண்டிருக்கிறான் நம்மைக் கட்டி அணைக்க!

அதிலும் முதல் ஐந்து படிக்கட்டுதான் நாம் ஏற வேண்டும். ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது. இந்த நான்கு படிக்கட்டுகளையும் நம்மால் ஏறவே முடியாது. அவன்தான் நம்மை அவற்றிலே ஏற்றி வைக்க வேண்டும்.

ஆனால், அந்த முதல் ஐந்தை ஏறுவது எவ்வளவு சிரமம்! அதிலும் முதல் படிக்கட்டு ஏறுவது ரொம்ப சிரமம். ஒவ்வொரு படிக்கட்டுக்கும் ஒரு பெயர் உண்டு.

முதல் படிக்கட்டுக்கு விவேகம் என்று பெயர். இரண்டாவது படிக்கட்டுக்கு நிர்வேதம் என்று பெயர். மூன்றாவது விரக்தி; நான்காவது பிரசாத ஹேது; ஐந்தாவது உட்கிரமணம். ஆறாவது படிக்கட்டு நமது ஆத்மா மேலே எழுந்தருளும் நிலை; ஏழாவது அர்ச்சிராதி மார்க்கம். எட்டாவது திவ்யதேச பிராப்தி; ஒன்பதாவது ப்ராப்தி - அல்லது பரமாத்ம பிராப்தி.

முதல் படிக்கட்டு இருக்கிறது பாருங்கள் - விவேகம். அதை ஏறுவதுதான் ரொம்ப கஷ்டம். இந்தப் படிக்கட்டுகளைக் கிரமமாகத்தான் ஏற வேண்டும். அக்கிரமமாக ஏற முடியாது. அதாவது முதல் படியை விட்டுவிட்டு இரண்டாவது படிக்குத் தாவ முடியாது.

அதிலும் விவேகம் என்கிற படிக்கட்டு ரொம்பவும் முக்கியம். இந்த உலகிலே அவிவேகமானவர்கள் ஆயிரம் பேரை நாம் பார்க்கலாம். விவேகம் என்பது வருவதுதான் ரொம்ப கஷ்டம். அதற்கு தர்மா தர்ம விசக்ஷண ஞானம் என்பது இருக்க வேண்டும். அந்த ஞானமிருந்தால்தான் விவேகம் வரும். இது தர்மம்; இது அதர்மம் என்று நன்கு தெரிந்து கொண்டவன்தான் விவேகாத்மா! அப்படிக் கிடைப்பவர்கள் ரொம்ப கஷ்டம்; துர்லபம். பகவத் விஷயத்தில் தெளிந்த ஞானம் பெற்றவனாக இருக்க வேண்டும். அப்படி ஞானம் பெற்றவன் விவேகம் என்கிற படிக்கட்டை ஏறிவிடலாம். ஏறிவிட்டானானால், அடுத்த படிக்கட்டு நிர்வேதம்.

விவேகிகள்தான் நிர்வேதப்படுவார்கள். நிர்வேதம் என்றால் கடந்த காலத்தை எண்ணி வருந்துதல்.

வீணாக எத்தனையோ காலம் போய் விட்டதே என்றார் ஆழ்வார்.

*ஊரிலேன், காணி இல்லை*
*உறவு மற்றொருவர் இல்லை*

- எல்லாம் ஒரே நிர்வேதம் இந்தப் பாசுரத்திலே. ஆழ்வார்கள் அப்படிக் கதறுகிறார்கள். உருகி, உருகி 'இப்படியெல்லாம் வீணாய்ப் போய்விட்டதே என் வாழ்க்கை' என்று அழுகிறார்கள். இப்படியொரு எண்ணம் விவேகமுடையவனுக்குத்தான் வரும். இத்தனை நாளாகப் பண்ணிய தப்புகளையெல்லாம் நினைத்துக் கதறி அழுவான். அவிவேகி அழமாட்டான்.

ஆகவே, முதல் படிக்கட்டை ஏறி விட்டோமானால், இரண்டாவது படிக்கட்டை அது தானாகவே ஏற்றிவிட்டுவிடும். நிர்வேதம் வந்துவிட்டால் வைராக்கியமும் (விரக்தி) தானாகவே பூரணமாக வந்துவிடும்.

வைராக்கியம் வரப்பெற்றவன், தாமரை இலைமேலே தெளிக்கப்பட்ட ஜலம் மாதிரி உலகத்தோடு ஒட்டிக் கொள்ளாமல் இருப்பான்.

சமுத்திரத்திலே கப்பல் போகிறது. வாணிபம் பெருக வேண்டுமானால் அது சீராகப் போக வேண்டும். கப்பல் சமுத்திரத்திலே போக வேண்டியது தர்மம். ஆனால் ஜலமானது கப்பலுக்குள் வரலாமா..? அந்த மாதிரிதான் இந்தப் பிரபஞ்சத்திலே நாம் இருக்கலாம்; ஆனால் இந்தப் பிரபஞ்ச சுகங்கள் நமக்குள்ளே புகலாமா..? கப்பலுக்குள் ஜலம் புகுந்தால் என்ன நேருமோ, அதே கதிதான் நமக்கும் நேரும், பிரபஞ்ச சுகங்களை நமக்குள்ளே புகவிட்டால்.

இந்த உலகத்திலே இருந்து அனுபவித்து வாழ வேண்டாம் என்று சொல்லவில்லை.

**"கட்சிக் கூட்டம் நடத்த லைசென்ஸ் தரேன்; ஆனா கூட்டத்தை சாலை வளைவில்தான் நடத்துவேன்னு அடம் பிடிக்கிறீங்களே, ஏன்?"**

**"ஒவ்வொரு கூட்டமும் எங்க கட்சிக்குத் திருப்புமுனையா இருக்கணும்கிற ஆசைதான்!"**

**- கே.நேசினி**

'வையத்து வாழ்வீர்காள்' என்றுதானே ஆண்டாள் பாடியிருக்கிறாள். உலகிலே வாழும்படியானவர்களுக்குக் கிடைக்கக் கூடிய பெருமை வேறு எங்கே கிடைக்கும்! அதனால்தான் வையத்தில் வாழ கொடுத்து வைத்தவர்களே என்று கொண்டாடுகிறாள்.

எம்பெருமானை அனுபவிக்கும்படியான வேத இதிஹாஸ புராணங்கள் அத்தனையும் இந்த வையத்தில் அல்லவா இருக்கிறது! அதையெல்லாம் சொல்லிக் கேட்கிறபோது எவ்வளவு ஆனந்தம்! 'பரம பதத்தில் நீ கொடுக்கக் கூடிய ஆனந்தம் எப்படிப் பட்டதோ, தெரியாது. இதை விட்டுவிட்டு வர மனமில்லை' என்கிறார் ஆழ்வார். அப்படி இங்கே நம்மை பகவத் அனுபவமானது ஈர்க்கிறது.

நிர்வேதப்பட்டுக் கதறியழும்படியான நிலை விவேகவான்களுக்குத்தான் வரும். நிர்வேதமும் வந்த பிறகு வைராக்கியம் வரும். எல்லாவற்றிலும் பற்றை விட்டு விடத் தோன்றும். ஆனால் எல்லாவற்றையும் விட்டுவிடுவது மட்டுமே வைராக்கியம் அல்ல. எம்பெருமான் திருவடியைப் பற்றுவது தான் வைராக்கியம்.

'என்ன பண்ணிக் கொண்டிருக்கிறீர்?' என்று ஒருவரைக் கேட்டால், 'வாசல் திண்ணையிலே உட்கார்ந்திருக்கிறேன்' என்று பதில் சொல்லுவார். 'யார் கூப்பிட்டாலும் நான் போவதில்லை; எதன் மீதும் பற்றில்லை...' என்பார்.

'என்னதான் பண்ணுவீர்?' என்று கேட்டால் 'வெறுமே உட்கார்ந்திருக்கிறேன்' என்பார். அது பிரயோஜனமில்லை. எல்லாவற்றையும் விட வேண்டும்; விட்ட இடத்திலே எம் பெருமான் திருவடியைப் பற்ற வேண்டும். ஆகவே, விடுவதே வைராக்கியம் அல்ல; திருவடியைப் பற்றுவதுதான் வைராக்கியம்.



**வை**ராக்கியம் வருகிற வேளை, பீதி - பயமும் வரும். இத்தனை நாட்களாகத் தப்பு செய்தோமே. இவ்வளவு தப்பு பண்ணிவிட்டு ஒரு நாள் பாகவதர் மாதிரி வேஷம் போட்டு பகவான் எதிரிலே போனால் அவன் நம்மை மன்னிப்பானா?' என்ற பயம் வரும்.

அந்த பயம் வேண்டியதில்லை. கீதையிலே பகவான் தெளிவாகச் சொல்லியிருக்கிறான் : 'பரம துராசாரனாகத்தான் இருக்கட்டுமே... என் திருவடிகளைப் பற்றிவிட்டால் அவனை ஒரு நாளும் மறுக்க மாட்டேன். ஏற்றுக் கொள்வேன்!

சாண்டில்ய ஸ்ம்ருதி என்றொரு ஸ்ம்ருதி. அதிலே சொல்கிறார்.

ஒருத்தன் துராசாரனாக இருக்கிறான். எதை வேண்டுமானாலும் சாப்பிடுகிறான். எந்த இடத்திலே வேண்டுமானாலும் சாப்பிடுகிறான். செய்த உதவியை மறந்துவிடுகிறான். நாஸ்திக வாதம் பண்ணுகிறான். இப்படி - கெட்ட காரியங்களுக்கே இருப்பிடமாகக் கூடிய ஒருவன்கூட எம்பெருமானைச் சரணம் அடைந்தால் - சிரத்தையாகச் சரணமடைந்தால், அவனை நல்லவன் என்று ஏற்கிறான் பரமாத்மா. ஆகவே, பயம் வேண்டியதில்லை என்று காட்டித் தருகிறது 'பீதி' என்ற அடுத்த படிக்கட்டு.

இதற்கு அடுத்த படிக்கட்டு பிரசாத ஹேது என்கிற நான்காவது படிக்கட்டு அவன் அநுக்கிரஹத்தைப் பெற நாம் என்ன பண்ண வேண்டும் என்று காட்டிக் கொடுக்கிறது இந்தப் படிக்கட்டு.

அவன் அநுக்கிரஹத்தைப் பெற வேண்டுமானால், நித்யம் பண்ணக் கூடிய அனுஷ்டானங்கள், கர்மாக்களை விடாமல் பண்ண வேண்டும். நமது தர்மத்தைக் கைவிட்டுவிட்டு ஆயிரம் கர்மாக்கள் பண்ணினாலும் பகவான் ஏற்கமாட்டான். அவரவருக்கு விதிக்கப்பட்ட தர்மத்தை செய்தபடியிருந்தாலே போதும் என்கிறான்.

இந்தப் படிக்கட்டுக்கும் அடுத்தது உட்கிரமணம் என்கிற நிலை - ஐந்தாவது படிக்கட்டு. இந்த சரீரத்தைவிட்டு ஆத்மா வெளியேறுகிற நிலை அது.

(வளரும்)



''அட, காலத்துக்கு ஏற்றவாறு எப்படியெல்லாம் பட்டிமன்றம் நடத்துறாங்க!''

''புரியும்படி சொல்லு!''

''நெசவாளர்களின் பசி தீர்ப்பதில் விஞ்சி நிற்பது கஞ்சியா, முட்டை பிரியாணியான்னு நாளை பட்டிமன்றமாம்!''

-புளியரை கணேசன்

''படத்துக்கு ஏன் 'கிரீன்'னு பேர் வைச்சிருக்கீங்க?''

''மாநில அரசோட வரிவிலக்கு கிடைக்கலாம்ன்ற நப்பாசைதான்!''

- சீர்காழி வி. ரேவதி

''என் மாமியாருக்காக கஞ்சித் தொட்டிக்குப் போய், கால் கடுக்க நின்று கஞ்சி வாங்கிட்டு வர்றேன்...''

''உனக்கு தங்கமான மனசு! ஆமா, உன் மாமியார் எங்கே?''

''எனக்கு இலவச பிரியாணி வாங்கிட்டு வர அனுப்பியிருக்கேன்!''

- எஸ்.பி. நீலமேகம்

''என்ன ஏட்டைய்யா, மனு கொடுக்கப் போனீங்களே... என்னாச்சு?''

''இரண்டு நாள் 'மாமூல்' வாழ்க்கை கெட்டுது!''

- தஞ்சை பிரியா

# மெகா சீரியல் நடிகைகளையே சிரிக்க வைத்த ஜோக்ஸ்!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd. Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan. Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail).

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2002 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka

# ARTHRITIS - மூட்டுவலி, ASTHMA - ஆஸ்துமா

## ASTHMA - ஆஸ்துமா

1. Dyspnea (மூச்சுத் திணறல்) 2. Respiratory difficulties (மேல்மூச்சு வாங்குதல்) 3. Dry cough (வறட்டு இருமல்) 4. Cough with sputum (சளியுடன் கூடிய இருமல்) 5. Running Nose (மூக்கில் நீர் வழிதல்) 6. Nasal Block (மூக்கடைப்பு)

தற்போது, ஆஸ்துமா வியாதிக்கும் இயற்கை வைத்திய முறையில் மிக நல்ல விதமாக பக்கவிளைவுகள் இல்லாமல் சிகிச்சை அளிக்கின்றோம் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

*Dear Doctor.*

*What a delight it was to have undergone treatment at the 'ADYAR NATURE CURE CENTRE" for my STUBBORN low back pain from which I have been suffering for the past 6 years! My age is 80. I have been doing Yoga-Asanas for the past 65 years and also playing tennis. The treatment given to me gave me un-believable and miraculous relief in such a short period of 4 days. Six-years old malady cured in 4 days! Incredible? BUT IT IS TRUE. I heartily congratulate the Highly-Innovative Director of the Center, Dr. S. Purushothaman for so thoughtfully drawing up a plan of Treatment - for the invalids and his able assistants for implementing the treatment so efficiently and cheerfully. I wish the Center All Success.*

V. Lakshmi Narasimhan, *Rtd., Station Director, All India Radio*
*'Sri Ram Nivas', 106, P.M. Swamy Colony, Coimbatore - 2.*

**1. Osteo Arthritis, 2. Rheumatoid Arthritis, 3. Ankylosing Spondylitis, 4. Gout**

❋ கை, கால்களில் மூட்டு வீக்கமும், வலியும். ❋ கை, கால் விரல் மூட்டுகளில் வீக்கமும் வலியும். ❋ கழுத்து வலி (Cervical Spondylitis) ❋ நடுமுதுகின் கீழ்பகுதியில் வலி (Lumbar vertebra and Sacral Joint area) ❋ இடுப்பு எலும்பும் (Pelvic Bone) தொடை எலும்பு தலையும் (Femoral Head) சேருமிடம். ❋ குதிகால் இணைப்புகளில் வலி. ❋ குதிகால்களில் எலும்பு வளர்ந்து நடக்க முடியாமல் வலி. (Calcaneal Spur) முதலியவை பல ஆண்டுகளாக இருந்தாலும் ஆங்கில மருத்துவருடைய ஆலோசனையின்படி வித்தியாசமான இயற்கை வைத்திய முறையில், பக்கவிளைவுகள் இல்லாமல் நலம்பெற செய்கின் றோம்.

சென்னை, பம்பாய், டெல்லி மற்றும் அமெரிக்கா, ஜெர்மன், மலேசியா, ஸ்ரீலங்கா, சிங்கப்பூர், ஜாம்பியா, அரபு நாடுகளில் இருந்தும், தாங்கமுடியாத மூட்டுவலியுடனும், வீக்கத்துடனும் தசை பிடிப்புடன் நடக்க முடியாமல் சிரமப்பட்ட வர்களும், காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாமல் சிரமப்பட்டவர்களும், எங்களிடம் நல்ல விதமாக சிகிச்சை பெற்று மகிழ்ச்சியுடன் சென்று இருக்கின்றார்கள். மற்ற விபரங்களுக்கு நேரில் வந்து பார்த்தால்தான் நாங்கள் கொடுக்கும் சிகிச்சையின் தன்மை புரியும்.

**DIABETES - சர்க்கரை வியாதி** மற்றும் இதர வியாதிகளுக்கும் ஆயுர்வேத சித்தமருத்துவ சிகிச்சைகள் அளிக்கப்படும்.


அடையார் நேச்சர் கியூர் சென்டர்


## ADYAR NATURE CURE CENTER (Reg.No.10/40)

No. 6, SECOND CROSS STREET, KASTURBHA NAGAR, ADYAR, CHENNAI - 20.
Phone:4413399, 4402470. Tele Fax: 044-4916650 (காந்திநகர் பஸ்டெப்போ எதிரில்)
www.adyarnaturecure.com ❖ E-mail: adyarnaturecure@yahoo.com, dr_spnaidu@yahoo.com.

குறிப்பு: எங்கள் ஆஸ்பத்திரியில் சாதாரண மற்றும் A/c ரூம்கள் கிடைக்கும். முன்பதிவு அவசியம். பிராமணர்களால் தயார் செய்யப்பட்ட சைவ உணவு வசதி மட்டும் உண்டு. வியாதி யஸ்தர்களுக்கு தேவைப்பட்ட மாற்று உணவுகளும் வழங்கப்படும் என்பதையும் அறியவும்.